உ

கடவுள் துணை.

# முப்பானூற்சுருக்கம்.

இது
யாழ்ப்பாணம்
கோப்பாய்

## வி. வேலுப்பிள்ளை

செய்தது.

யாழ்ப்பாணம்
ஸ்ரீ சண்முகநாத அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது

கலியுகம். ௫௦௨௭. குரோதன ஞு சித்திரை மீ

விலை ரூபா ௩.

# சூசிபத்திரம்.


க. அறத்துப்பால் பக்கம்

பாயிரம். க

முதல் அதிகாரம் நூல்வரலாறு ,,

உ அதி. கடவுள்வாழ்த்து கக

ந அதி. வான்சிறப்பு உஉ

ச அதி. அறன்வலியுறுத்தல் உச

இல்லறவியல் ந௰

ரு அதி. இல்வாழ்க்கைச்சிறப்பு ,,

சு அதி. அன்புடைமை நச

எ அதி. விருந்தோம்பல் நஅ

அ அதி. நடுவுநிலைமை சஉ

கூ அதி. ஒழுக்கமுடைமை சசு

க௦ அதி. பொறையுடைமை ரு௰

கக அதி. அழுக்காறாமை ருந

கஉ அதி. புறங்கூறாமை ருஅ

கந அதி. தீவினையச்சம் சுக

கச அதி. ஈகை சுச

துறவறவியல் சுகூ

கரு அதி. அருளுடைமை ,,

கசு அதி. தவம எசு

கஎ அதி. கள்ளாமை எகூ

கஅ அதி. வாய்மை அஉ

ககூ அதி. வெகுளாமை அரு

உ௰ அதி. நிலையாமை அகூ

உக அதி. துறவு கூரு

உஉ அதி. மெய்ஞ்ஞானம் ௱

பக்கம்

உ. பொருட்பால் ௱ச

அரசியல்

உந அதி. அரசன் ,,

உச அதி. மானம் ௱௰க

உரு அதி. கல்வி ௱௰அ

உசு அதி. பெரியாரைத் துணைக்கோடல் ௱உஎ

உஎ அதி. வினைசெயல்வகை ௱நஉ

உஅ அதி. செஙகோன்மை ௱நஎ

உகூ அதி. ஊக்கமுடைமை ௱சந

அங்கவியல் ௱சஅ

ந௦ அதி. அமைச்சு ,,

நக அதி. மன்னரைச்சேர்ந் தொழுகல் ௱ருந

நஉ அதி. பொருட்சிறப்பு ௱ருஅ

நந அதி. நல்குரவு ௱சுஎ

நச அதி. பொருள்செயல் வகை ௱எஉ

நரு அதி. நட்பு ௱எகூ

நசு அதி. பகை ௱அசு

நஎ அதி. வியபிசாரம் ௱கூந

நஅ அதி. கள்ளுண்ணல் ௱கூஅ

நகூ அதி. சூது உ௱ந

ச௦ அதி. மருந்து உ௱எ

ந. காமத்துப்பால் உகஉ

சக அதி. களவு ,,

சஉ அதி. கற்பு உநஎ

கடவுள் துணை.

# முப்பானூற் சுருக்கம்

## க. அறத்துப்பால்

## பாயிரம்.

### முதல் அதிகாரம் நூல்வரலாறு.

பூவுலகத்து மாந்தர், ஒருவர் தாமெண்ணியதைப் பிறர்க் கறிவித்தற்கும், பிறர் எண்ணியதைத் தாமறிதற்கும், சத்தமு மெழுத்துமென்னும் இருவழியை உபயோகிக்கின்றனர். விலங்கு முதலாயினவுஞ் சத்தத்தானே ஒன்றற்கொன்று தமதெண்ணத்தை வெளிப்படுத்துகின்றனவாயினும், அவ்வெண்ணத்தை அவைகளையன்றி மாந்தர் இதுகாறும் நன்கறிந்திலராகலின், அவ்விலங்கு முதலாயினவற்றை வேறுபிரித்து அஃறிணைப் பொருளென்பர்; புண்ணிய யுகங்களிற் றாந்தரிசித்துப் பேசினமையாற் றேவர்முதலாயினோரையுந் தம்முளடக்கி அவர்தாந் தம்மை உயர்திணைப் பொருளென்பர். உயர்திணைப் பொருளாய மாந்தர் முதலாயினோர் தமதெண்ணத்தை வெளிப்படுத்துஞ் சத்தமுமெழுத்தும் பாடையெனப்படும். அவர்தாங் குறிப்பான் வெளிப்படுத்துவன பாடையெனப்படா.

சத்தமு மெழுத்து மென்னும் பாடைப்பகுப் பிரண்டனுட் சத்தப்பாடை முந்தியதும் எழுத்துப்பாடை பிந்தியதுமாம். என்னை? எழுத்துப்பாடை, சத்தஞ்செல்லும் முன்னிலை படர்க் கைக்கணுள்ளார்க்குமேயன்றி அது செல்லாத அதிதூரத்தின்

கட் படர்க்கையினுள்ளார்க்கும் பிற்காலத்துள்ளார்க்கும், தமது சத்தப்பாடையை உணர்த்தவேண்டி அவர் வகுத்தமைந்துப யோகித்ததொன் றாகலின். அவ்வெழுத்துப் பாடையை உப யோகித்த மாந்தர் அப்பாடையைச் சொற்களாகவும் பொருள் சொற்களை எழுத்துக்களாகவும் பகுத்து எழுதி அறிவிப்பாராயி னர். அவர் அங்ஙனம் பகுத்தது அதனை எழுதுதற்கு இலகு வாக்கும் பொருட்டேயாம். எழுதப்படுதலினாலேயே எழுத் தென்னும் பெயருளதாயிற்று. சத்தப்பாடை உள்ளபொழுதே சொற்களு மெழுத்துக்களும் உளவாமாகலின், அவற்றுக்கு முற்பிற்பா டில்லையெனினு மமையும். உந்தியிற் சூக்குமையா யெழுந்தநாதம் நெஞ்சின்கட் பைசந்தியாய்க் கண்டத்தின்கண் மத்திமையாய்ப் பின்னர்த் தன் செவிக்குக் கேட்கும் சூக்கும வைகரியும் பிறர்செவிக்குக் கேட்கும் தூலவைகரியுமாய்ப் பல் வேறெழுத்துக்களா மென்பர் அறிந்தோர். எழுத்துக்கள் தனித்துந் தொடர்ந்தும் பொருடரின் அவை சொற்களாம்; சொற்கள் தனித்துந் தொடர்ந்தும் பொருடரின் அவை வாக்கிய மாய்ப் பாடையாம். சொல்லாவது ஆற்றலாற் பொருளை உணர்த் துகின்ற எழுத்தொலி, ஆற்றலாவது சத்ததிற்கு அதன்றன் மையையுடைய பொருளோடு உளதாகிய கற்பித சம்பந்தம். அவ்வாற்றல் "இப்பதத்தால் இப்பொருளுணர்த்துக" என்னும் நியமத்தாலாகியது. கடலொலி சங்கொலி விண்ணொலி முற்கு ஈழை முதலிய சத்தங்கள் பாடையெனப்படா. மாந்தர் எழுத் துப்பாடையை உபயோகித்தபொழுதே அதற்கு இலக்கண வரம் புஞ் செய்வாராயினர். இலக்கிய முள்ளபொழுதே இலக்கணமு முளதாகலின் அவற்றுக்கு முற்பிற்பா டில்லையெனினு மமையும்.

வடக்கே இமயமலையையும் ஏனைய திசைகளிலே பெரும் பாலுங் கடலையும் எல்லையாயுடைய பரதகண்டமெனப்படும் இந் தியாவில், வடக்க ணாரியமுந் தெற்கட் டமிழும் ஆதியில் விளங் கியுள்ள பாடைகளாம். அவை முறையே வடமொழி தென் மொழி யெனவும் பெயர்பெறுகின்றன. ஆரியத்தைப் பேசின வர் ஆரியரெனவும் தமிழைப் பேசினவர் தமிழரெனவும் பெயர்பெறுகின்றனர். தென்மொழி யென்பதற்கு அழகுடைய பாடை அல்ல திசையுடைய பாடையெனப் பொருள்கோடற்

கமையுமாயினும், ஆரியத்தை வடமொழியென்ற தமிழர் அதனை நோக்கித் தம்மொழிக்குத் தென்மொழியென்று பெயரிட்டன ரென்பதே பொருத்தமுடைத்து.

தமிழென்னுஞ்சொல் இனிமைப்பொருட்டு. முருகுஎன் னும் இளமைப்பண்பு அதனையுடைய முருகனென்னும் பண்பி மேனின்றவாறுபோல, இனிமைப்பொருட்டாகிய தமிழ் அத னையுடைய பாடைமேனின்றது. ஆரியாபிமானமுடையார் சிலர் திரமிளமென்னு மாரியச்சொற்றமிழெனத் திரிந்ததெனவும், தமிழ்ப்பாடை அவ்வாரியத்தினின்றுந் தோன்றிய பாடையே யெனவுங் கூறுவர். ஆரியர் தென்னாட்டை அடைந்த காலத் தே அதற்குத் திரவிடமென்று பெயரிட்டனர்; திராவிடத்தி ருந்தவர் பேசிய பாடைக்குத் திராவிட பாடையெனப் பெய ரிட்டனர். அவர்தாம் அந்நாட்டை அடைதற்குமுன்னர் அந் நாட்டுப் பாடைப் பெயராயுள்ளது தமிழாகலானும், ஆரியபதச் சம்பந்தமில்லாத தமிழ்நூல்களுளவாமாகலானும், தமிழ் திர விடத்தின் மரூஉமொழி யென்றலும், தமிழ்ப்பாடை ஆரியத்தி னின்றுந் தோன்றிய பாடையென்றலும் பொருந்தாமை யறிக. தேவபாடையெனப்படும் ஆரியம்போல உரப்புதல் கனைத்தல் முதலிய வல்லோசை வேறுபாட்டான் மாந்தராற் பேசுதற்குக் கடினமாயிராமையானும், அதன் ஓசையின் இசை இனிமை முதலிய சிறப்பானும் இந்நாள்காறும் அம்மாந்தராற் பேசப்படும் பாடையாய் இறந்துபடாமற் றமிழ் விளங்குவதாயிற்று. தே வர்க்கு விருப்பத்தைக் கொடுக்கும் ஆரியம்போன்று தமிழும் இறைவனருட்பேறு பெற்றுடைய தென்பதற்கு, அவ்வாரிய நூல்கள் போலவே அதன் முதனூல்களும், வழிநூல்களைக் காட்டினும் விரிந்து விளங்கிப் பூரணத்துவமடைந்திருத்தலே போதிய சான்று.

இமயமலையைச் சூழ்ந்து வடபுலத்திருந்த ஆரியருளொரு சாரார் பிற்காலத்துத் தென்புலத்து வந்து குடியிருப்பாராயி னர். அவ்வாரியர் அத்தென்புலத்துப் பாடையாகிய தமிழை யே பேசினராயினும், தத்தம் வருணாச்சிரமவழியே ஒழுகு வாராயினர். அவர் தம்மையொழிந்தோரை அநாரியரென் றிகழ்

பல ராயினும், தமிழரைமதித்து அவரோடு கலப்பா ராயினர். அங்ஙனங் கலந்தமையாற் பிற்காலத்தவருட் பெரும்பாலாரை வேறுபிரித்து அறிதலு மரியதாயிற்று. அற்றாகலினன்றே அவ்வாரிய ரென்னுஞ்சொற் பரதகண்டத்தின்கட் பிறந்துள்ளா ரல்லாதாரையே இக்காலத் துணர்த்துவ தாயிற்று. ஆரியமொழிகள்பல தமிழினுந் தமிழ்மொழிகள்சில ஆரியத்தினும் வழங்குதற்கு இக்கலப்பே காரணமாயிற்று. ஆலய வழிபாடு முதலாயின அவ்வாரியமொழியின் அம்முறையே யாவரானும் செய்யப்படுவனவாயின.

அங்கியு ஞாயிறுஞ் சோமனு மென்னும் இவர்வழித் தோன்றிய ஆரியவேந்தர் முறையே சேர சோழ பாண்டியரெனத் தமிழ் நாட்டை ஆள்வாராய் ஆண்டிருந்த குறுநில மன்னர்க்குத் தலைவராய் முடிமன்ன ராயினர். அவர் ஆண்டுத் தொன்றுதொட்டு நெடுங்காலம் மேம்பட்டு விளங்குவாராயிருந்துளர். ஆரியவேந்தராய அரிச்சந்திரனும் இராமனும் நளனுந் தருமனும் முதலாயினர் போலவே இம்மூவேந்தருஞ் சூரியசந்திராக்கினி வம்மிசத்தவ ராகலானும், தமிழ்வேந்தர் அவ்வந்நிலத்துக் குறுநிலமன்னரா யிருந்துளரேயன்றி முடிமன்னராய் இருந்தில ராகலானும், தென்புலத்தை அடைந்த ஆரியர் ஆண்டிருந்த மன்னரை வெற்றிகொண்டன்றி முதன்மை பெற்றிருத்தல் முடியா தாகலானும் இத்தமிழ் வேந்தர் மூவரும் ஆரிய வம்மிசத்தவரே. தென்புலத்திருந்துள்ள அம்மூவேந்தரை மாத்திரமன்று, வடபுலத் தாரிய வேந்தருட் டலைமைபெற் றிருந்துள்ள தருமன் வீமன் முதலாயினோரையுந் தமிழ்வேந்தரென்பாருமுளர்.

பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரரென ஆரியர் நான்கு வருணத்தரா யிருந்துளர். பிராமணர் சமயநூல்களைக் கற்றல் கற்பித்தல் முதலிய தொழில்கட்குரியர். சத்திரியர் அரசியல் நடாத்தல் முதலிய தொழில்கட்குரியர். தனவைசியர் பூவைசியர் கோவைசியரென மூவகையினராகிய வைசியர் முறையே வாணிகம் உழவு ஆன்காத்தலென்னுந் தொழில்கட்

கும் இவ்வபோல்வன பிறதொழில்கட்கு முரியர். தனவைசி யர் வணிசரெனவும், பூவைசியர் வேளாளரெனவும், கோவை சியர் இடையரெனவும் பெயர்பெறுவர். இம்முதன்மூன்று வருணத்தார்க்கும் "ஏவற்றொழில் செய்தற்குரியர் சூத்திரர். வண்ணாரும் நாவிதருந் தச்சருங் கொல்லருந் தட்டாருங் கன்னா ரும் புலையரும் மள்ளருஞ் சான்றாருங் குயவருஞ் சாலியருந் தயிர் விலையாளரும் பரதரும் பாணரும் முதலாயினோரே சூத்தி ரர். இவரைச் சங்கர சாதியாரெனவும் பூவைசியருங் கோவை சியருமே சூத்திரரெனவும் அறியாதார் சிலர் கூறுவர். சங்கர சாதியார் உளராதற்குமுன், ஆரியருள் இத்தொழில்கட் குரிய ராயிருந்தார் யாவரென்னும் வினாவுக்கு விடையின்மையானும், பூவைசியரையுங் கோவைசியரையும் வண்ணார் முதலாயினா ரோடு சமப்படுத்திக் கூறுதல் நடுவுநிலைமை யாகாமையானும் அவர் கூற்றுப் பொருந்தாமை அறிக. ஒரு பிராமணனுக்கும் சத்திரியப் பெண்ணுக்கும் அல்லது ஒரு சத்திரியனுக்கும் பிரா மணப் பெண்ணுக்கும் பிறந்த மக்கள், வண்ணான் நாவிதன் முதலாயினோர் தொழில்களுளொன்றைச் செய்தனரென்றல் சிறிதும் பொருந்தாமை உய்த்துணர்க. ஆரியரேயன்றி உலகத் துள்ள மற்றெந்தச்சாதியாரும் இந்நால்வகை வருணப் பகுப்பு ளடங்குவர். என்னை? சிலர் தெய்வசிந்தை யுடையராயும், சிலர் ஆண்மைக்குண முடையராயும், சிலர் பொருளீட்டுந் தொழின்முயற்சிக் குணமுடையராயும், சிலர் ஏவலையே செய் யுங் குணமுடையராயும் அவரெல்லாருங் காணப்படுகின்றன ராகலான்.

தமிழர் நிலவேறுபாட்டான் ஐவகைப் பகுப்பினரா யிருந் துளர். முல்லையுங் குறிஞ்சியும் மருதமும் நெய்தலும் பாலையுமே ஐவகை நிலங்கள். அவ்வந் நிலங்கட்குரிய மாந்தர் முறையே இடையர் குறவர் உழவர் பரதர் மறவரெனப் பெயர்பெறு வர். அவர்க்குரிய குலதெய்வங்கள் முறையே மாயோனும் முருகவேளும் இந்திரனும் வருணனும் ஆதித்தனுமென்னும் இவரேயாம். ஆரியருந் தமிழரும் ஒரே மார்க்கத்தவரென்பது, ஆரியர்க்குரிய குலதெய்வங்களே தமிழர்க்குமா மதனானே

அறியப்படும். தமிழருள் அவ்வச்சாதி அரசரே சிற்றரசராய அரசு செய்தனர். சேர சோழ பாண்டியர் காலத்தும் நூற்றுவர்க்கு மேற்பட்ட தொகையினராகிய தமிழ்ச் சிற்றரசர் அவரோடொற்றுமையுடையராய் ஆங்காங்கிருந் தரசு செய்தனரென நூல்கள் கூறுகின்றன. ஆரிய வேந்தராய சிற்றரசருமிருந்துளர். ஆரியர் தமிழரைச் சூத்திரரோடொப்ப மதித்தனராயினும், அவருட் டலைமக்களையும் குறுநில மன்னரையும் முறையே வைசியர் சத்திரியரோடொப்ப மதிப்பாராயினர். தமிழருள் வண்ணான் நாவிதன் முதலாயினோர் தொழில்களை அவ்வந்நிலைப் பகுப்பினுள்ளார் சிலரே செய்து வருவாராயினர். கடைச்சங்கம் நிலவிய காலத்துத் தமிழராய ஆரியரும் அவரோடு கலந்த தமிழருமாய தென்புலத்தாரை அந்தணர் அரசர் வணிகர் வேளாளரெனப் பகுத்து நூல்களிடத்துக் கூறப்பட்டுளது. பிற்காலத்து அந்தணர்முதலாய மேல்வருணத்தார் வேளாளரைச் சூத்திரரெனக் கூறி அவமதிப்பாராயினர்.

இவ்வுலகின்கட் சீவான்மாக்கள் தத்தங்கன்ம ஏற்றத்தாழ்ச்சி காரணமாகச் சூடுகுளிர்களின் வேறுபாடு முதலாயின வுடைய பல்வேறு வகைப்பட்ட இடங்களிற் பல்வேறு வகைப்பட்ட உடம்பு முணவுஞ் செயலும் அறிவினேற்றத்தாழ்ச்சியு முதலாயின வுடையனவாய்க் காணப்படுகின்றன. புண்ணிய மேலீட்டினுன் மேலாய மக்கட் பிறப்பினராய்ப் பிறந்த மாந்தருள்ளுங் கன்மவேற்றத்தாழ்ச்சிக ளுளவாமாகலின், மற்றெவைக் காட்டினும் புண்ணிய மேலீட்டையுடையார் பிறத்தற்கிடமாய்ப் பிரதம மகாசிருட்டி காலத்தமைக்கப்பட்டுள்ளது இப் பரதகண்டமெனப்படும் புண்ணிய பூமியேயாம். இப்புண்ணிய பூமியிற் பிறந்த ஆரியர்க்கும் அவர்க்கு அடுத்தபடியினராகிய தமிழர்க்கும் அருளுமாறு அரன் இமயமலையி னோர்சாரிற் கயிலைமலையிற் கோயில்கொண் டெழுந்தருளியிருந்துளர். புண்ணிய யுகங்களிலே அவர் அவ்வாரியர்க்கு முன்னிலையினின்றும் தமிழர்க்குச் சிதம்பரம் முதலிய ஆலயங்களிற் படர்க்கையினின்றும் விசேடவருள் செய்வாராயினர். அரியும் பற்பல

அவதாரங்கொண் டருள்வாராயினர். ஆரியர்க்குந் தமிழர்க்கும் அருளப்பட்ட வேதாகமப் போதனைகளே அவர் புண்ணிய மேலீட்டை யுடையராய்ப் பிறந்துளா ரென்பதை நன்கு புலப் படுத்தும்.

அசுத்த மாயையிற் றோன்றிய காலத்தைப் பரதகண்டத் துள்ளார் நாள் மாதம் வருடம் யுகமெனப் பூமிமுதலியவற்றி னதும் ஞாயிற்றினதும் செலவுமுதலிய ஏதுக்களானே வரை யறைப்படுத்தி அவ்வண்ணமே கணித்து வருவாராயினர். கிரே தத் திரேதத் துவாபர கலியுகங்களென ஒன்றின்னொன்று படி முறையே புண்ணியங் குறையப் பாவம் மிகுந்துவரும் யுகங் கள் நான்கு. இப்பொழுது நாலாம் யுகமாகிய கலியுகத்தில் ஐ யாயிரத் திருபத்தைந்து வருடங்கள் சென்றன. இங்ஙனமே உலகு முடமர்பும் முதலாயினவேயன்றிக் கால வேறுபாடும் உளது. அநேகம் யுகங்கள் கொண்டது கற்பமெனக் கூறப் பட்டுளதாயினும் இலகுவாத னொக்கி ஈண்டு முதல் யுகமே தொடக்கமாகக் கொள்ளப்பட்டது.

தென்மதுரைத் தமிழ்ச்சங்கம் இருந்தகாலத்துத் தமிழ்வ ழங்கும் நிலத்தெல்லை பரதகண்டத்துத் தென்பானிலத்தில் வடக்கண் வேங்கடமும் தெற்கட் குமரியும் கிழக்கும் மேற்கும் கடலுமெனக் கூறப்பட்டுளது. தென்மதுரை கபாடபுரம் முத லிய தமிழ்நாட்டு நகரங்களையும் தமிழர் பலரையும் சமயநூல் களையும் பிறவற்றையும் குமரிக்குத் தெற்கின்கணுள்ள பிற மொழி நாட்டையும் பிற்காலத்துக் கடல்கொண்டது.

ஆதியிலே இலங்கை பரதகண்டத்தின் ஓர் பாகமா யிருந் துளது; பின்னர் அதனைக் கடல் பிரித்தது போலும். முருக வேள் கயிலையை நீங்கி இலங்கைக்கு வந்தகாலத்து, அவருஞ் சேனையும் பிரித்தவக் கடலுக் கூடாக நடந்து வந்தனராயினும், இராமனுஞ் சேனையும் வந்தகாலத்து அணையிட்டே வந்தன ராகலின் படிமுறையே அஃதாழமாயதுபோலும். இவ்விலங்கை யில் ஆதியிலுள்ளவர் தமிழரே. முருகவேள் கிரேத யுகத் திற் குறவர் மகளாகிய வள்ளிநாயகியை ஈண்டே மணந்தனர்.

இவ்விலங்கை சூரனுடைய மகேந்திரத்துக்கு வடக்கரணு யிருந்துளது. முருகவேள் திருச்செந்தியில் வந்திருந்து வீரவாகு தேவரைத் தூதனுப்பியபின் இவ்விலங்கைக்கு வந்து சூரனோடு பொருது வெற்றிகொண்ட பின்னர் அக்காலத்துத் தமிழர்க்குச் சிறந்த மணமாயுள்ள காந்தருவ மணமுறையாய் வள்ளிநாயகி யை மணந்தனர். இவ்விலங்கையின் தென்கீழ்ப் பாகங்கள் பிற் காலத்துக் கடல் கொண்டனவேயெனினும், சூரன்போர் முத லிய சம்பவ நிகழ்ச்சிக்குரிய பல அறிகுறிகள் இப்பொழுதுங் காணக்கிடக்கின்றன. வடபுலத்து ஆரியப்பிராமணர் முதலாயி னோரும் இலங்கைக் குறவராய தமிழரும் பிறரும் முருகவேள் வள்ளிநாயகியை மணந்த அவ்விடமாகிய கதிர்காமத்தின்கண் அவர்கட் காலய மமைத்துத் தொன்றுதொட்டு வழிபாடு செய் து வருகின்றனர். அக்காலக் குறவர்வழித் தோன்றிய தமிழ ரே இக்காலத்து மிருகத் தன்மையராய்க் காணப்படும் வேட்டு வர். இவ்விலங்கையிற் சூரன்போர் நிகழ்ச்சியாலும், வைணவ மதத் தனகிய இராமனோடு பொருத சைவமதத்தனகிய இராவணன் காலத்து அரக்கராலும், பின்னர்ப் பரதகண்டத்து வடபானி லத்திருந்து வந்து குடியிருக்கும் சிங்களவராலுந் தமிழர்தொ கை குறைவதாயிற்று. பிற்காலத்துப் பரதகண்டத்துத் தென் பானிலத்திருந்த தமிழராகிய ஆரியரும் தமிழரும் வந்து குடி யிருப்பாராயினர்.

அரியயனரனென மூவராகும் முழுமுதற்கடவுளைப் பரத கண்டத்து வடபானிலத் துள்ளாரிற் பெரும்பாலார் சாத்துவிக குணத்தராய அரியென விசேடித்தும், தென்பானிலத்துள்ளா ரிற் பெரும்பாலார், சருவசங்காரகாலத்துச் சங்கார முதல்வரா கிய அரனொழிய ஏனையனைவருஞ் சங்கரிக்கப்பட்டொழிவராக லின், அச்சங்கார முதல்வராகிய அரனென விசேடித்தும் வ ணங்கு வாராயினர். முற்காலத்து அவ்வைணவ மதத்தரும் சைவ மதத்தரும் மதாபிமானங் காரணமாகப் பெரும்போர்கள் விளைத்தனராயினும், அவ்விரு மதங்கட்கும் வணக்கமுறையிற் பேதமேயன்றி வேறு பேதமின்மை உய்த்துணர்க.

தமிழ்வழக்கு உலகியல்வழக்குஞ் செய்யுள் வழக்குமென

இருவகைப்படும். உலகியல்வழக்கு, அரிதிற் பொருள் கோடற்குரிய ஆன்றோருறுதிக்கட்டுரையும் எளிதிற் பொருள் கோடற்குரிய மெல்லுரையுமென இருவகைப்படும். ஆன்றோருறுதிக் கட்டுரை செய்யுளோ டொத்தலின் உரைச்செய்யுளெனவும் பெயர்பெறும். செய்யுள்வழக்குப் பாச்செய்யுளுஞ் சூத்திரச் செய்யுளுமென இருவகைப்படும். எழுத்துப் பாடைவடிவாகிய நூல்கள், முதனூல் வழிநூல் சார்புநூலென மூவகைப்படும். அவைதாம் இலக்கணநூல்களும் இலக்கியநூல்களும் சமயநூல்களுமென மூவகையாயுள்ளன

அகத்தியமெனப் பெயர்தந்து தமிழிலக்கண முதனூல் இயற்றியருளினர் அகத்தியனார். வடமொழிக்குப் பாணினீயம்போலத் தென்மொழிக்கு இஃதோர் சிறந்த இலக்கணநூலாம். ஆரிய விலக்கணத்துக் கில்லாத திணை பால் வினைக் குறிப்பு வினைத்தொகை முதலிய சொல்லிலக்கணப் பாகுபாட்டானும், அகப்பொருள் புறப்பொருளென்னும் பொருளிலக்கணப் பாகுபாட்டானும் தமிழிலக்கணமே சிறப்புடைத்தென்று சொல்லலாம். அகத்தியத்துள், இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னும் முத்தமி ழிலக்கணங்களும் விரவிக் கூறப்பட்டன. இயற்றமிழுள் எழுத்தா மாறும், அவற்றாற் சொல்லாய்ப் பொருளுணர்த்துமாறும், அச்சொற்பொருள்களாற் செய்யுள் யாக்குமாறும், அவை அணியுறுமாறுங் கூறப்படும். இசைத்தமிழுள் மாபூதம் முதலியவற்றாற் புற்கலமாய் இசைக் காதாரமாமாறும், அவ்வாதாரந்தொடங்கியெழுஞ் சூக்கும நாதம் சரிகமபதநி யென்னும் எழுத்திசை ஏழாய்ப் பிறக்குமாறும், அவ்வெழுத்திசைகளை மாத்திரைப்படுத்துத் தொழில் செய்தலாற் சட்சம் முதலிய ஏழிசைகள் பிறக்குமாறும், இவற்றுள்ளே பண் பிறக்குமாறும், அவற்றினை இன்பம்பட மிடற்றுக் கருவியானே நரப்புக் கருவிமுதலியபற்றிப் பாடுமாறும், நரப்புக் கருவிமுதலிய செய்யுமாறும் பிறவுங் கூறப்படும். நாடகத்தமிழுள் கூத்துவிகற்பமும், அவினய விகற்பமும், தோரியமகளிர் முதலிய கூத்திய ரிலக்கணமும், தலைக்கோலியல்பும், ஆடலாசிரிய ரிலக்க

ணமும், குழலோன் யாழோன் இசையோன் கவிஞனென்பா ரிலக்கணமும் ஆடரங் கிலக்கணமும் பிறவுங் கூறப்படும்.

ஆசிரியர் அகத்தியனார் அகத்தியத்தைத் தொல்காப்பிய னார் முதலிய பன்னிரு மாணாக்கர்க்குக் கற்பித்தருளினார். தொல்காப்பியனார் முதலிய அம்மாணாக்கர் அகத்தியத்தின்க ணுள்ள இயற்றமிழை வேறுபிரித்துத் தொல்காப்பியம் முதலிய வழிநூல்களை யியற்றினர். அவற்றினுள்ளே தொல் காப்பியமே சிறந்தது. பெருநாரை பெருங்குருகு முதலிய நூலுடையார் இசைத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார். முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றியம் முதலிய நூலு டையார் நாடகத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார். அவ் விசைத்தமிழ் நூல்களுள்ளும் நாடகத்தமிழ் நூல்களுள்ளும் பல இக்காலத்து வழங்காவாயின. பல்காப்பியம் பல்காயம் காக்கைபாடினியமென்பன பல்காப்பியனார் முதலாயினோரால் செய்யப்பட்ட யாப்பிலக்கண நூல்கள்.

தமிழ்மொழி தலைச்சங்கம் முதலிய மூன்று சங்கங்களி னும் நன்றாராயப்பட்டது. இச்சங்கம் மூன்றினையும் இரீஇனார் பாண்டியர்கள். தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் அகத்தி யனார் முதலாயினோர். அக்காலத்துப் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியா விரையுமென இத்தொடக்கத்தன. அவைபின் இறந்துபட் டன. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப் பட்ட மதுரை. அவர்க்கு நூல் அகத்தியம்

இடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க்கருங்கோழியும் நிரையன் மாறனும் மோசியுங் கீரந்தையும் முதலாயினோர். அக்கா லத்துப் பாடப்பட்டன கலியுங் குருவும் வெண்டாளியும் வியாழமாலையகவலுமென இத்தொடக்கத்தன. அவை பின் இறந்துபட்டன. அவர்க்குநூல் அகத்தியமுந் தொல்காப்பி யமும் மாபுராணமும் இசைநுணுக்கமும், பூதபுராணமுமென்

னுமிவை. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்து. அக்காலத்துப்போலும் பாண்டியனாட்டைக் கடல்கொண்டது. மாபுராணம் முதலியன இக்காலத்து வழங்காவாயின.

கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியரும் சேந்தம்பூதனாரும் அறிவுடையனாரும் பெருங்குன்றூர்க்கிழாரும் இளந்திருமாறனும் நல்லந்துவனாரும் மருதனிளநாகனாரும் கணக்காயனார் மகனார் நக்கீரருமென இத்தொடக்கத்தினர். அக்காலத்துப் பாடப்பட்டன நெடுந்தொகைநானூறும் குறுந்தொகைநானூறும் நற்றிணைநானூறும் ஐங்குறுநூறும் பதிற்றுப்பத்தும் நூற்றைம்பதுகலியும் எழுபதுபரிபாடலும் கூத்தும் வரியும் பேரிசையும் சிற்றிசையுமென்னும் இத்தொடக்கத்தன. இவற்றுட்சில இக்காலத்து வழங்காவாயின. அவர்க்குநூல் அகத்தியமுந் தொல்காப்பியமும். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரை.

முச்சங்கத்து நிலவிய முதனூலாகிய அகத்தியம் பெருநூலாகலின் பிற்காலத்தார் அதனைக்கற்றல் முடியாதென்று கைவிட்டு அதன்வழிச் சுருங்கித்தோன்றிய தொல்காப்பியம் முதலிய இலக்கணநூல்களையே கைக்கொண்டுபோற்றிப் பயில்வாராயினமையின் அவ்வகத்தியம் கடைச்சங்க மொடுங்கிய பிற்றைஞான்று மறைவதாயிற்று தொல்காப்பியம் இடைச்சங்கமுதல் இன்றுகாறுமுளதாய் நிலைபெறுவதாயிற்று. அக்காலத்துக் களவியலென்னும் பொருளிலக்கணநூல் இறையனாரால் அருளிச்செய்யப்பட்டது.

கடைச்சங்கத்தின் பிற்றைஞான்று தொல்காப்பியத்திற்கு இளம்பூரணரும் கல்லாடரும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தனித்தனி உரையியற்றுவாராயினர். சொல்லதிகாரத்துக்கு மாத்திரம் சேனாவரைய ருரையியற்றினர். எழுத்ததிகாரத்துக்கு நச்சினார்க்கினிய ரியற்றியவுரையும் சொல்லதிகாரத்துக்குச் சேனாவரைய ரியற்றியவுரையும் பொருளதிகாரத்துக்கு நச்சினார்க்கினியரும் பேராசிரியரு மியற்றியவுரையும் சிறந்தனவென்பர். சிவஞானமுனிவர் தொல்காப்பியப் பாயி

ரச் சூத்திரத்திற்கும் எழுத்ததிகார முதற்சூத்திரத்திற்கும் விருத்தியுரை செய்தனர். ஐயனாரிதனாரென்பவர் வெண்பாமாலையெனப் பெயரியதோர் புறப்பொருணூ லியற்றினர். அகப்பொருள் புறப்பொருளென்பன பொருளிலக்கணத்தின் பகுதிகள். நாற்கவிராயநம்பியென்பவர் அகப்பொருள்விளக்கமென்னும் நூலியற்றினர். யாப்பருங்கலமென்னும் யாப்பிலக்கணநூற்குச் சிறந்ததோர் விருத்தியுரை யுளது. அமுதசாகரரியற்றிய யாப்பருங்கலக்காரிகையும் வச்சணந்தியியற்றிய வெண்பாப்பாட்டியலும் அணியிலக்கணங்கூறும் தண்டியலங்காரமும் எழுத்துஞ்சொல்லு முணர்த்தும் நேமிநாதமும் புத்தமித்திரனியற்றிய வீரசோழியமும் எழுத்துஞ்சொல்லு முணர்த்தும் நன்னூலும் சுப்பிரமணியதீக்ஷிதர் உரையுடனியற்றிய பிரயோகவிவேகநூலும் வைத்தியநாததேசிகர் உரையுடனியற்றிய இலக்கணவிளக்கமும் சுவாமிநாததேசிகரியற்றிய இலக்கணக்கொத்துமென்னுமிவைகளும் இலக்கணநூல்களாம்.

மதுரைமாநகரிற் கனகநன்மாப்பலகை வீற்றிருந்து தமிழாராய்ந்த நக்கீரனார்முதலிய கடைச்சங்கப் புலவரும் பிறருமியற்றிய இலக்கியங்கள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் பதினெண்கீழ்க்கணக்குமென வழங்குகின்றன. நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப்படையும், முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படையும், இடைக்கழிநாட்டுநல்லூர் நத்தத்தனார் பாடிய சிறுபாணாற்றுப்படையும், கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படையும், காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டும், மாங்குடி மருதனார் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடிய மதுரைக்காஞ்சியும், நக்கீரனார் பாடிய நெடுநல்வாடையும், கபிலர் ஆரியவரசன் பிரகதத்தனைத் தமிழறிவுறுத்தற்குப் பாடிய குறிஞ்சிப்பாட்டும், சோழன் கரிகாற்பெருவளவனைத் தானைகடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலையும், பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடிய மலைபடுகடாமுமென்பன பத்துப்பாட்டாம். இவற்றுக்கு நச்சினார்க்கினியரால் சிறந்தவுரை இயற்றப்பட்டது.

கபிலர் முதலாயினோரா னியற்றப்பட்டு அகப்பொருட்பகுதிகளை மிகத்தெளித்துரைக்கும் நற்றிணையும், திப்புதோளார் முதலாயினோரா னியற்றப்பட்டு அகப்பொருட்பகுதிகளைத் தெளித்துரைக்கும் குறுந்தொகையும், ஓரம்போகியாரான் முதனூறும் அம்மூவனாரான் இரண்டாநூறும் கபிலரான் மூன்றுநூறும் ஓதலாந்தையாரான் நாலாநூறும் பேயனாரான் ஐந்தாநூறுமாக இயற்றப்பட்டு முறையே மருதம் நெய்தல் குறிஞ்சி பாலை முல்லையென்னும் ஐந்திணைகளையும் பொருளாகவுடைய ஐங்குறுநூறும், பாக்கள் பப்பத்தாக ஒவ்வொருபுலவர் சேரர் குலத்தாரைப் பாடிய பதிற்றுப்பத்தும், திருமால் செவ்வேள் கார்கோள் வையை மதுரைமேலதாய் எழுபது பாக்களையுடைய பரிபாடலும், பாலை குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென்னும் ஐந்திணைப்பொருளும் அறிவுறுப்பதாய் ஆசிரியர் நல்லந்துவனாரான் இயற்றப்பட்டு நச்சினார்க்கினியரான் மிகச்சிறந்தவுரை செய்யப்பட்டுள்ள கலித்தொகையும், மாமூலனார் முதலாயினோரான் இயற்றப்பட்டு அகப்பொருட்பகுதிகளைத் தெளித்துரைக்கும் அகநானூறும், முரிஞ்சியூர் முடிநாகராயர் முதலாயினோரான் இயற்றப்பட்டுப் புறப்பொருட்பகுதிகளைத் தெளித்துரைக்கும் புறநானூறுமென்பன எட்டுத்தொகையாம். கல்லாடநாயனா ரியற்றிய கல்லாடம், பெருந்தேவனார் உரையிடையிட்ட வெண்பாவா னியற்றிய பாரதம்முதற் கடைச்சங்கநூல்கள் பிறவுமுள. பதினெண்கீழ்க்கணக்கைச் சேர்ந்தன நாலடியார் திரிகடுகம் நான்மணிக்கடிகை முதலியன.

தமிழ்க்காவியவிலக்கியங்கள், திருத்தக்கதேவ ரியற்றியதும் சச்சந்தன்மகனாகிய சீவகன் கதையைக் கூறுவதுமாய சிந்தாமணியும், இளங்கோவடிகள் இயற்றியதும் கோவலன் கண்ணகி மாதவியென்னும் இவர்கதையைக் கூறுவதுமாய சிலப்பதிகாரமும், மதுரைக்கூலவாணிகன் சாத்தனார் இயற்றியதும் மாதவிமகள் மணிமேகலையின் கதையைக் கூறுவதுமாய மணிமேகலையும், குண்டலகேசியும், வளையாபதியுமென்னும் இவைகளேயாம். அவை பஞ்சகாவியம் எனப்படும். அவற்றுட் குண்டலகேசியும் வளையாபதியும் முன்னோருரைகளில்

ஒவ்வொருகூறே மேற்கோளாய் வழங்குகின்றன. தோலா மொழித்தேவர் இயற்றியதும் பயாபதிகதையைக் கூறுவது மாய சூளாமணியும், இலங்கையிலுள்ள யாழ்ப்பாண நல்லூர்க் கரசனுன பரராசசேகரன் மருகன் அரசகேசரி இயற்றியதும் இரகுவின் வழித்தோன்றற்களின் சரித்திரத்தைக் கூறுவது மாய இரகுவம்மிசமும், அதிவீரராமபாண்டியன் இயற்றியதும் நளன் சரித்திரத்தைக் கூறுவதுமாய நைடதமும் பிறகாவியங் களாம். தமிழ்ப்புலவரான கம்பனுரான் இயற்றப்பட்ட இராமாயணமும் வில்லிபுத்தூரராலும் நல்லாப்பிள்ளையாலும் தமிழிலே தனித்தனியே இயற்றப்பட்ட பாரதங்களும் இதிகாச இலக்கியங்களாம. பெரியபுராணம் தணிகைப்புராணம் கந்தபுராணம் திருவிளையாடற்புராணம் முதலியனவும் இலக்கியங்களாம்.

ஆதியில் ஆரியபாடையிற் கூறப்பட்டுள்ள விசேட சமய சாத்திரங்கள்பல பிற்காலத்துத் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டன. பரமாத்தனுகும் இறைவன் பக்குவான்மாக்கட்கு ஆதியில் உபதேசித்ததே சமயசாத்திரங்களுள் முதனூலாகிய வேதம். நித்தமாயுள்ள வேதம் இறுதிக்காலத்து இறைவன் மாட்டொடுங்கிப் படைப்புக்காலத்து அம்முறையாற்றோன்றும். அக்காலத்து இறைவன் வேதத்தை அனந்ததேவர்க்கும் ஆகமத்தைப் பிரணவர்முதலியோர்க்கும் உபதேசித்தனரென சூத்த வாக்கியங்கள் கூறுகின்றன.

இறைமுதற்கடவுள் மாந்தர்தம் பக்குவ தாரதம்மியம் நோக்கிச் சோபானமுறையானே பொருள்களின் மெய்ம்மை தேறி வீடுபெற்று உறுதிப்பயன் தலைக்கூடுதற்கன்றே சமய நூல் ஒன்றேயாகாது வேதாகமங்களெனப் பலவாகப் பொதுவுஞ் சிறப்புமென இருவேறுவகைப்பட அருளிச்செய்தனர். உலகத்து மற்றெவரைக்காட்டினும் புண்ணியமேலீட்டையுடைய ஆரியர்க்கும் அவர்க்கடுத்த படியினராய தமிழர்க்கும் வேதாந்தசித்தாந்த மகாவாக்கியங்களும் வேதத்தின் ஞானகாண்டமாகிய உபநிடதங்களும் கிரியாகாண்டமும் ஆகமங்க

ளும் தமிழ்ச்சமயசாத்திரங்களும் ஒரேகாலத்தன்றிக் காலத்துக்குக்காலம் வேண்டியபோதெல்லாம் பரமாத்தனாலும் ஆத்தர்களாலும் உபதேசிக்கப்பட்டன. தமிழில் உபதேசிக்கப்பட்ட சமயசாத்திரங்கள்பல இடைச்சங்கத்தார் காலத்துத் தமிழ்நாட்டைக் கடல்கொண்டபொழுது அழிவெய்தின. இரேதயுகத்திலே திருவாதவூரடிகள் அருளிச்செய்த திருவாசகமே தமிழ்ச்சமயசாத்திரங்களுள் முந்தியுள்ளதாக இக்காலத்துக் காணப்படுகின்றது. வேதாந்த சாத்திரங்கள் இறைவன்மாட்டுச் சேதனாசேதனப்பிரபஞ்சந் தோற்றமுறையிற் கூறும்; ஒடுக்கமுறையிற் கூறுவன சித்தாந்தசாத்திரங்கள்,

வேதம் இறைவர்வாக் கன்றென்றும், உலகந்தோன்றி ஆயிரம் வருடங்கள் சென்றபின் மாந்தராற் கூறப்பட்டுளதாகலின் ஐயாயிரம் வருடத்தின்முன் தோன்றியதொன்றேயென்றும் சிலர் கூறுவர். அளவுப்பட்ட உடம்பினுட் சிற்றறிவு வெளிப்படத் தோன்றும் மாந்தர் அளவுப்படாத இப்பூதாகாயம் காலம் முதலியவற்றையேனும் இப்பெற்றியன வென்றறிய வல்லுநரல்லர். புறக்கருவியின்றி மாந்தர்தம் அகக்கருவிகளாய மனம்முதலிய விந்திரியங்கள், இறைவரையுந் தம்மையுந் தாமவரை யடையும் நெறியையும் அந்நெறிக்கட் சென்றெய்தும் பயனையும் இவைபோல்வன பிறவற்றையும் அறிதாற்கேற்ற பெற்றியின் அமைக்கப்பட்டுள்ளன அல்லவாகலின், அப்புறக்கருவியாக வேதம் இன்றியமையாமையின் அவ்விறைவரால் அருளப்பட்டது. இறைவருண்மை காட்சியளவையான் அறியப்படாது கருதலளவையின்வைத் தூகித்துணர்தற்பாலதாயினும், அவரையடையும் நெறிமுதலாயின சுருதியளவையின்றி அறியப்படாமையானும், அகக்கருவியை ஈந்தருளிய அவ்விறைமுதற்கடவுள் புறக்கருவியையும் ஈந்தருளாரேல் அவர்செய்யுந்தொழில் மாந்தர்க்குப் பயப்படாதாகலானும், அளவுப்படாத குணநீதராகும் அவ்விறைமுதற் கடவுளாகிய அருளுஞ்சித்தும் அவரோடத்துவிதமான சம்பந்தமுள்ள எண்ணிறந்த சீவான்மாக்களாகிய அருளைபெய்துஞ் சித்துக்களும் சிருட்டியும் வேதமும் அநாதிநித்தியமா

யுள்ளனவென்றும் விலங்கு முதலாயின சீவான்மாக்களென்றும் கன்மமும் மறுபிறப்பும் உண்டென்றும் உலகத்து மாக்கங்கள் சோபானமுறையானே அவ்விறைமுதற்கடவுளை மாந்தர் எய்துதற்கு உரியன்வாமென்றும் இடையீடுபடாத்தியானமே அவரை அடைதற்கேற்ற மேலான நெறியென்றும் இங்ஙனமே அஃதோதும் உண்மைகளெல்லாம் காட்சி கருத லளவைகட்கு மாறுபடாதன வாகலானும் அஃதிறைவன் வாக்கேயாம. சீவான்மாவுக்கு இந்திரியவிடய சம்பந்தத்தால் அறிவு தோன்றும். அவ்வான்மா அறிவித்தாலன்றி அறியா வியல்பினை யுடைத்து. ஒருவர்க்குப் பிறரும் அப்பிறருக்கு வேறு பிறரு மாக இங்ஙனமே ஈற்றின்கண் முற்றறிவுடைய அழல்விர் சோதி யருமறைக்கடவுளும் அறிவிக்கவேண்டுதலின் அஃ தறிவிக்கப்படாது மாந்தரான் அறியப்பட்டதென்றல் சிறிதும் பொருந்தாமை உய்த்துணர்க.

உலகந்தோன்றிப் பற்பன்னூறாயிரம் வருடங்கள் சென் றனவென்பதற்கு, இவ்வுலகத்திற்றானே பற்பல அறிகுறிகள் காணக்கிடக்கின்றன. உலகந் தோன்றியபொழுதே புண்ணிய மேலீட்டையுடைய மாந்தர்க்குப் பயன்பட வேதாகமங்கள் உபதேசிக்கப்பட்டன. சோதிடத்தின் மிகவல்லவராகிய பரத கண்டத்துள்ளார் யுகங்களுக்குச் சொல்லிய வருடங்களைத் தவறாது கணித்துவந்தன ரென்பதற்கு ஐயமில்லை யாகலானும், கிரேதயுகத்திலே விட்டுணு நரசிம்மமாய்த் தாரகாசுரன் வம் மிசத்தாராய இரணியனையும் இரணியாக்கனையும் திரேத யுகத்திலே இராமனாய் இராவணனையுங்கும்பகர்ணனையும் துவா பரயுகத்திலே கிருட்டிணனாய்ச் சிசுபாலனையுந் தந்தவக்கிரனை யுங் கொன்றனரெனக் கூறப்படுதலானும், கிரேதயுகத்திலே சூரன்போரும் திரேத யுகத்திலே இராவணன்போரும் துவாபர யுகத்திலே பாரதப்போரும் நிகழ்ந்தனவென்று கூறுவராகலா னும் உலகந்தோன்றிப் பற்பன்னூறாயிரம் வருடங்கள் சென்ற னவென்ப துண்மையேயாம்.

வேதங்களாவன தைத்திரியமும் பௌடியமும் தலவகா ரமும் சாமவேதமுமாம். இவற்றை வியாசமுனிவர் இருக்கு

எசுசு சாமம் அதர்வமென நான்காக வரையறைப்படுத்தியுளார். வேதங்களை அறிதற்கு உபகாரமாயுள்ளன, உலகியற் சொல்லை யொழித்து வைதிகச்சொல்லை யாராயும் நிருத்தமும் அவ்விரண்டனையும் உடனாராய்ந்த ஐந்திரத்தொடக்கத்து வியாகரணமும் போதாயனீயம் பாரத்துவாசம் பரமார்த்தம் பரமாத்திரயம் முதலிய கற்பங்களும் நாராயணீயம் வாராகம் முதலிய கணிதமும் எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும் செய்யுளிலக்கணமாகிய சந்தமுமென்னும் ஆறங்கமாயுள்ள நூல்களாம். புராணமும் நியாயநூலும் மீமாஞ்சையும் மிருதியுமென்னும் நான்கும் உபாங்கமாயுள்ளன. அவற்றுடன் ஆயுள்வேதமும் வில்வேதமும் காந்தருவவேதமும் அருத்தநூலுமென்னும் நான்குஞ்சேர வித்தைகள் பதினெட்டாயின. காமிகர் முதலிய ஆகமங்கள் வேதத்தின் பிரமகாண்டத்துள் அடங்குவன. மீமாஞ்சை நியாயம் வைசேடிகம் சாங்கியம் யோகம் வேதாந்தமென்னும் ஆறும் வைதிகசாத்திரங்கள். இவற்றை முறையே சைமினி கௌதமர் கணாதர் கபிலர் பதஞ்சலி வியாசரென்னும் முனிவர்கள் செய்தார்கள். வேதாந்த சூத்திரத்திற்கு நீலகண்டவாசிரியரும் அரதத்தாசாரியரும் சங்கராசாரியரும் இராமானுசாசாரியரும் வழிநூலுரை செய்தனர்.

திருவாதவூரடிகள் முதலிய உண்மைநாயன்மார் அருளிச்செய்த சாலச்சிறந்த சந்தப்பிரபந்தங்களாகிய திருமுறைகளும் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்த திருக்குறளும் நாலாயிரப் பிரபந்தமும் முதலியன தமிழ்வேதங்களாம். தமிழ்வேதாந்த நூல்கள், கைவல்லியம் வேதாந்தசூடாமணி வாசிட்டம் ஈசுரகீதை பகவற்கீதை பிரமகீதை பிரபோதசந்திரோதயம் முதலியனவாம்; சித்தாந்தசாத்திரங்கள், திருவுந்தி திருக்களிற்றுப்படி சிவஞானபோதம் சிவஞானசித்தி இருபாவிருபது உண்மைவிளக்கம் சிவப்பிரகாசம் திருவருட்பயன் வினாவெண்பா போற்றிப் பஃறொடை கொடிக்கவி நெஞ்சுவிடுதூது உண்மைநெறி விளக்கம் சங்கற்ப நிராகரணமென்னும் பதினான்குமாம்.

தமிழ்வேதங்களுளொன்றாயும் சங்கவிலக்கியங்களுட்டலையாயும் விளங்குந் திருக்குறள் அறம்பொருளின்பமென்னும்

மூப்பாலுடைமைபற்றி முப்பானூலெனவும்படும். இம்முப்பா னூலைத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் கடைச்சங் கத்தார் காலத்தியற்றி உக்கிரப்பெருவழுதியென்னும் பாண்டி யனும் கடைச்சங்கப்புலவரும் வணங்கிக் கீழிருந்துகேட்ப, உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மனாரோடு சங்கப்பலகை யிற்றிருந்து அரங்கேற்றினர். இஃதரங்கேறியபொழுது நாம களும் இறையனாரும் உக்கிரப்பெருவழுதியும் கபிலர் பரணர் நக்கீரர் முதலிய கடைச்சங்கப்புலவர்களும் பலவாறு புகழ்ந் தெடுத்துப் போற்றிக் கவிகள் கூறுவாராயினர். இந்நூற்கு உரையியற்றினர்பலர். அவ்வுரைகளுட் பரிமேலழகியார் இயற் றியவுரையே மிகச்சிறந்தது. பற்பல பாடைகளைப் பேசும் பற்பலசாதியார் இதனைத் தத்தம் பாடைகளில் மொழிபெயர்த்து விரும்பிக் கற்பாராயினர். இஃதறநூலன்றிச் சிறந்த நீதிநூலு மாம். தமிழ்நால்வகைப் பாக்களுட் சிறந்த வெண்பாக்களுண் மு தன்மைபெற்றுள்ள குறள்வெண்பாக்களான் இயற்றப்பட்டுளது.

வடமொழித் தொல்லாசிரியர் தசகுமாரசரித்திரம் முத லிய நூல்களை உரையானியற்றியவாறுபோலத் தமிழ்த்தொல் லாசிரியர் சூத்திரஞ் செய்யுளென்னும் இரண்டானுமன்றி உரையானே நூல்கள் செய்திலர். சூத்திரஞ் செய்யுளென்னு மிரண்டிற்கும் பின்னுள்ளார், அவற்றின் பொருளையுரைக்குங் காண்டிகையுரையும் ஆண்டைக் கின்றியமையாது இயை புடையவற்றையெல்லாம் இனிதுவிளக்கியுரைக்கும் விருத்தி யுரையுமென இருவகையுரைகளையே செய்வாராயினர். செய் யுளோடு உரையிடையிட்ட நூல்களுஞ் சிலவுள. பிற்காலத் தவர் மெல்லுரை நூல்கள் பலவற்றைச் செய்தனரேனும் அவர்செய்த உறுதிக்கட்டுரை நூல்கள் மிகச்சிலவேயாம்.

இக்காலத்து நன்மாணாக்கர் கற்றற்கேற்ற பெற்றியன உரைநூல்களேயாகலானும், புதினப்பத்திரம் முதலாயினவற் றில் நல்லாசிரியர் தமதெண்ணத்தை வெளிப்படுத்தற்கும் நல் லறிவாளர் பல்லோர் குழீஇய வவைக்க ணெழுந்தொருவர் பேசுதற்கும் இவைபோல்வன பிறசெய்தற்கும் அவ்வுரைநூல்

கள் இன்றியமையாதனவாகலானும், அவையிற்றையின்றி ஓர் பாடையும் அதனைப் பேசுவோருஞ் சிறப்பெய்துமா றில்லையாகலானும், செய்யின் அறநூலேபே செய்கவென்னும் ஆன்றோர் வாக்கைச் சிரமேற்றாங்கி அத்திருக்குறளையே வழிப்படுத்து, மற்றும் பற்பல நூல்களினுமுள்ள நீதி முதலாயினவற்றையுஞ் சேர்த்துத், தொல்லாசிரியர் நூற்பொருளையேயன்றி அவர் சொல்லையும் பொன்போலப்போற்றி அவ்வுரைநடையிற்றானே இந்நூல் இயற்றப்பட்டுளது. முதனூலின் வழிப்படுமிஃ தறம்பொருளின்பமென முப்பாலுடைத்தாய் அவற்றைச்சுருக்கிக் கூறுதலின் முப்பானூற்சுருக்கமென அளவினாற் றொருத்துப் பெயர்பெறுவதாயிற்று.

மாந்தர்க் குறுதியாயுள்ள அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கனுட் பொருண்முதலிய ஏனைமூன்றும் அறத்தினுளடங்கும். என்னை? யானெனதென்னும் இருவகைப்பற்றின் முறுகிய மாந்தர் இல்லறஞ் செய்தற்கும் இன்பந்துய்த்தற்கும் உபகாரமாகிய பொருளை அறத்தாற்றானீட்டி அறமுஞ்செய்து இன்பமுந்துய்த்து நன்னுகர்ச்சியான் அவற்றை வெறுத்துப் பொய்ப்பற்றற்று மெய்ப்பற்று நாடித் துறவறம் பூண்டு அந்தக்கரணங்கள் தூயவாதற்பொருட்டு விரதமனுட்டித்துச் சித்தசுத்தி யெய்தி ஞானமுற்றுப் பரம்பொருளைத் தலைக்கூடி இடையறாத மெய்யுணர்வி னுறைத்துநின்று சீவன்முத்தராய் விளங்குவ ராகலான். பொருளு மின்பமும் அறத்தின் வேறாதலின்றி அதன்வழிநிகழும் நீரனவாய் அதனுள் அடங்கும் இயற்கையவாமாயினும் ஈண்டு விரித்துக்கூறல்வேண்டி வேறு பிரிக்கப்பட்டன வாகலின் இஃதறநூலேயாம். நன்மாணாக்கர் ஐயந்திரிபறக்கற்று இதன் வழியொழுகி உறுதிப்பயன் றலைக்கூடுவாராக.

---

## ௨. அதி. கடவுள்வாழ்த்து

கடவுள் வாழ்த்தாவது நூல்செய்யும் புலவன் அந்நூல் இடையூறின்றி இனிதுமுடிதற்பொருட்டுத், தான்வழிபடு கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளை

யாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை வாழ்த்துவதாம். என்னை? சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் முக்குணங்களான் மூன்றாகிய அறம்பொருளின்பங்கட்கு, அச்சத்துவம் முதலிய குணங்களான் மூவராகிய முதற்கடவுளரோடு இயைபுண்டாகலான். அம்மூன்று பொருளையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறப்படுவதாயிற்று.

அகரவுயிர், சூக்குமநாதமாகிய தன்னைத் தோன்றற்கிடமாயுள்ள ஏனையுயிரும் மெய்யுமாகியும், அவற்றையியக்குதலால் அவற்றோடுடனாகியும், சத்தத்தன்மையால் அவற்றின் வேறாகியும் உளதாமாறுபோலப் பரமான்மாச், சூக்குமசித்தாகிய தன்னைத் தோன்றற்கிடமாயுள்ள சீவான்மாவுந் தத்துவப் பிரபஞ்சமுமாகியும், அவற்றை இயக்குதலால் அவற்றோடுடனாகியும், பொருட்டன்மையால் அவற்றின் வேறாகியும் உளது. தத்துவப்பிரபஞ்சம் இயற்கையானுளதன்றிச் செயற்கையானே விகாரமெய்துவதொன்றாகலானும், தோற்றமுமீறும் உள்ளதன்பாற் கிடக்குமாகலானும் அஃதோர் காரியமேயாம். அக்காரியத்துக்குப் பரமான்மாவாகிய நிமித்தகாரணம் இன்றியமையாதது. எண்ணியதொன்றெய்தமாட்டாக் குறைவுடைய சீவான்மா வுளதேயாக அதன் மறுதலையாய நிறைவுடைய பரமான்மாவுமுளது. இங்ஙனமே முழுமுதற் கடவுளுண்மை நிச்சயமாம்.

அம்முழுமுதற் கடவுள் "நிர்க்குணர்" "குணாதீத"ரென்று கூறப்படுவாராயினும், அருளெய்துஞ் சித்தாகும் ஆன்மாவுக்கு அருளுஞ் சித்தாதல்பற்றி முற்றறிவு முதலிய சிற்குணமுடையரெனப்படுவர். சிற்குணத்தராய அவர்தாம் முத்தொழில் செய்தல்பற்றிச் சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் சுத்தமாயா குணங்களான், முறையே மூவராய அரியயனரனுமுளர். இங்ஙனமே ஒவ்வோர் காரணத்தால் ஒருவரே பலராயுளர். அவரவர் கன்ம ஏற்றத்தாழ்ச்சிக்கேற்ப ஏற்றத்

தாழ்ச்சியான பற்பல மார்க்கவழி ஒழுகும் மாந்தர்க்கு, அவ்வம் மார்க்கக் கடவுளராய்நின்றும் அருள் செய்வர். சுதந்திரராகிய அம்முழுமுதற் கடவுளை அடையினன்றே பரதந்திரராகிய ஆன்மாக்கள் குறைவினீங்கி நிறைவினை எய்துவர்.

அழியாவானந்தப் பேரறிவே சுவரூபமாயுள்ளவரும், நல்லதன் நலனையுந் தீயதன் தீமையும் பகுத்தாய்ந்துணர்ந்து நன்னெறிக்கட் சென்று உய்தலே வேண்டிய மாந்தர்க்கு, இம்மைக்கண் அறம்பொருளின்பங்களையும் மறுமைக்கண் இன்பநுகருமாறு இந்திரன்முதலிய இறைபவர் பதங்களையும் இறுதிக்கண் அந்தமிலின்பத் தழிவில் வீட்டையும் அருளுதலையே இச்சையாயுடையவரும், யானெனதென் றிருப்பாரைப் படைத்துக் காத்தழித்தும் விளைக்கீடாகப் போகியப் பொருள்களில் அமிழ்த்தியும் அவற்றைத் துறந்தாரைத் தலைக்கூடியும் கூத்தாட்டுதலையே தொழிலா யுடையவருமாகிய முழுமுதற்கடவுளைப் பேரன்பாற்றியானித்துத் துதித்து வணங்கா நின்றேம்.

அருளெய்துஞ் சித்தாயுள்ள சீவான்மா அவிச்சையை நீக்கிக் கோடற்கு, அருளுஞ்சித்தாயுள்ள மெய்யுணர்வினையுடைய பரமாத்தராம் பரமான்மாப் புறக்கருவியாக அருளிய அற நூல்களைக் கற்று, அவ்விறைமுதற் கடவுளின் றிருவடிகளைத் தொழுது பிறவி யறுத்தலே மாந்தர் கற்றதனா லெய்தும் பயன். தம்மால் விரும்பப்பட்டதொருபொருளை இடைவிடாது நினைத்தலும் சொல்லலும் மதித்தலும் மாந்தர் குணமாகலின், மற்றெல்லாப் பொருளினுஞ் சிறந்த உயிர்க்குயிராயுள்ள இறைமுதற்கடவுளை விரும்பினவர், அவரை இடைவிடாது நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலுமே செய்வர் அன்பானினைவார துள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து வெளிப்பட்டிருந்து அருள் செய்பவரும், அவரின் கீழ் அதிகாரகிருத்தியஞ் செய்யு மேனையர்போலாது முற்றறிவு வரம்பிலின்பம் இயற்கையுணர்வு தன்வயம் குறைவிலாற்றல் வரம்பிலாற்றலென ஆறுப்ச் சத்துச்சித்து ஆனந்தமென மூன்றினடங்கும் இறைமைக்குணங்கள் முற்றவுமுடைய

ராகலின் மெய்ம்மைசேர்ந்த புகழுடையவரும், புலன்கட்செல்லும் அவாவில்லாதவராகலின் ஒருபொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவருமாகிய இறைவனைக், இடைவிடாது நினைத்து வாழ்த்தி அவர்நெறிநின்று வணங்கினவர், தம்மைப்பற்றி வருவனவும் பிறவுயிர்களைப்பற்றி வருவனவும் தெய்வத்தைப்பற்றி வருவனவுமென மூவகையான்வரும் பிறவித்துன்பங்களொழிய வீடுபெறுதலாகிய வரம்பிலின்பமெய்துவர்; அங்ஙனஞ்செய்யாதார் காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றிவரும் பிறவிப்பெருங்கடலை நீந்தமாட்டாராய் அதனுளழுந்தி வருந்துவர்.

---

## ரு. அதி. வான்சிறப்பு.

வான்சிறப்பாவது அக்கடவுளதாணையான் உலகமும் அதற்குறுப்பாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். ஊழித்தீயைத் தன்னகத்துடையதும், மண்ணானும் நீரானும் ஆக்கப்பட்டு மேற்புறம் அண்டவடிவமைப்பெற்றுளதும், அதன்மேற் காற்றுச் சூழப் பெற்றுளதுமாயுள்ள இவ்வுலகம், மக்களான் வேற்று வேற்றுகப் பிரித்தெடுத்தற்கரிய பஞ்சபூதங்களான் அமைந்துளதாய்ப், பூதாகாயமாகிய அந்தரத்திற் சுழன்று, தன் தோற்றவொடுககங்கட்கு இடனாய இச்சூரியனை, அதனதும் ஏனைய கிரகங்களினதும் கவர்ச்சியான் இழுக்கப்பெற்றுச் சூழ்ந்து செல்வதாயுளது. இவ்வுலகின்கட் பஞ்சபூதங்களான் அமைந்த பல்வேறுவகைப்பட்ட உடம்புகளையுடைய உயிர்கள், அப்பூதங்களானாய காற்று நீர் முதலாயவற்றையும் உருத்திரிந்த பிறவற்றையும் உண்டு வாழாநின்றன.

நீரானது ஏனைய காற்று முதலாயின போலாது என்ஞான்றும் எவ்விடத்தும் சுத்தமாயுங் காணப்படாமையானும், உண்பார்க்கு உணவாவதேயன்றி உணவுகளை உளவாக்கற்கின்றியமையாததாகலானும், உயிர்கள் மற்றெப்பொருளைக்காட்டினும் மேலாய் அவாவும் பொருள் அஃதாயிற்று அதனருமை நோக்கியன்றே கடவுளும், அதனைச் சூட்டினுற் காற்றினு

னொய்யதாய் மேலெழச்செய்தும், தன்னகமெங்கும் நிரம்பிய அங்கியாற் கடனீர் திடமாய் இறுகாத அத்துணைச் சூடுடைய பூமியானும், ஞாயிற்றின் கிரணம் அப்பூமியின்மேற் பட்டுப் பிரதிபலித்தலானும், அக்கிரணம் அடங்கியவழிக் கடுக விடுதல்செய்யாத காற்றுப் பூமியி னண்மைக்கண் இறுகியும் படிமுறையே சேய்மைக்கட் செல்லச்செல்ல இறுகுதல்குறைந் தற்றுப் போதலானும், உளதாய சூடு குறைந்த மேல்வெளியாகிய ஆண்டுக் குளிர்ந்து மழையாய் மீண்டும் பூமியைநோக்கி வரச்செய்தும், சுத்தமெய்தும் மாற்றத்துக்கும் எவ்விடத்துக்கும் எக்காலத்துக்கும் உரியதாக்கினர்.

விசும்பின்கட் சுத்தமாயுள்ள நீர் மழையாய் வீழ்ந்காண்பதல்லது வீழாதாயின் மண்மேற் பசும்புல்லினது தலையையுங் காண்டலரி தாகலானும், கடலைக் குறைத்து அதனால் உளதாய மேகம் மீட்டும் அதன்கண் மழையைப் பெய்யாதுவிடுமாயின் நீர்வாழுயிர்கள் பிறவாமை மணிமுதலாயின படாமை முதலியவற்றான் அதுவுந் தன்னியல்பு குறையு மாகலானும், அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தலாகிய தானமும், மனம் பொறிவழிப் போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல் முதலாயின செய்யுந் தவமும் உலகின்கண் உளவாகா வாகலானும் கடவுளாணையான் உயிர்களும் அவ்வுயிர்கட்கு உறுதியாகிய அறம்பொருளின்பங்களும் இவ்வுலகின்கண் உளவாதற்கு ஏதுவாயுள்ளது அம்மழையே.

இவ்வுலகத்தின்கண் உயிர்கள் உளவாதற்கு நீர் இன்றியமையாததேயன்றி இவ்வுலகமும் உளதாதற்கு அஃதின்றியமையாதது. ஆகாயத்தினின்று வாயுவும் அதனினின்று தேயுவும் அதனினின்று அப்புவும் அதனினின்று பிருதுவியுமாகச் சூக்கும பூதங்கள் தோன்றும்; அவைதோன்றியவாறே ஒடுங்கும். அதுபோலத் தூலமாய நிலம் நீரிலும் நீர் தீயிலும் தீ வாயுவிலும் வாயு ஆகாயத்திலும் ஒடுங்கும் ஒடுங்கியவாறேதோன்றும். ஆகவே பஞ்சபூதக்கலப்பானுய்த் தூலமாயுள்ள நிலமாகிய

இவ்வுலகும், உடம்போடு கூடிய உயிர்களும் நிலையின்றி அழைமயாமை உய்த்துணர்க.

## ச. அதி. அறன்வலியுறுத்தல்

அறன்வலி யுறுத்தலாவது மக்களுயிர்க்கு உறுதிபயக்கும் அறம்பொருளின்பங்களென்னும் மூன்றனுள், இம்மைமறுமையென்னும் இரண்டனையும் பயக்கும்பொருளும் இம்மையொன்றனையே பயக்கும் இன்பமும் போலாது அவ்வறம் இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தலான் அவற்றின் வலியுடைத்தென்பது கூறுதல்.

உலகுமுடம்புமாம் இருகூற்றுக் காரியப்பிரபஞ்சம் இத்துணைப்பொழுது நிற்குமென மாந்தரான் அறியவாராது நீர்மேலெழுத்தும் பேய்த்தேரும் கனவும் போல நிலைபெறுவனபோலத் தோன்றிக் காட்சிப்புலனாய் விரையக்கெட்டு மறைந்துபோதற்றன்மையுடைத்து. அங்ஙனம் மறைந்துபோகு நீர்மையுடையதனை நிலையுத லுடையதென்று திரியக்கொள்ளுமுணர்வு பிறப்புக் கேதுவாய்த் துயருறுத்தலின், அம்மயக்கவுணர்வை மெய்யுணர்வாற் களைந்து பிறப்பறுத்து நிலையாய வின்பநுகருமாறு மக்களாற் செய்யக்கிடந்தது அறமேயாம். அவ்வறமானது இல்லறம் துறவறமென இருவகைத்து. அவற்றுள் இல்லறமாவது இல்வாழ்க்கைநெறிக்கணின்று அதற்குத்துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படும் அறம்; துறவறமாவது இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத் துறந்தார்க்குரியதாய அறம்.

இல்லறத்தைச் செய்வார்க்கு அன்புடைமையும் துறவறத்தைச் செய்வார்க்கு அருளுடைமையுமே சிறந்த கருவிகளாம். மாந்தர் அன்புடையராயின் தாமெய்தியபொருளைப் பிறர்க்கும் பகுத்துக்கொடுத்துண்டு வாழ்வர். அவர் அருளுடையராயின் பிறிதோருயிர் பசியான்வருந்தப் பார்த்திருத்தலைச் சகியார்; பிறிதோருயிரை அது துடித்துப் பதைத்து வருந்தக் கொன்

றுண்ணூர்; நீரையுண்டாயினும் காற்றைச் சுவாசித்தாயினும் பிராணிகள் கொல்லப்படுமென் றஞ்சி நீர்த்தாகத்தைத்தானும் சுவாசத்தைத்தானும் அடக்கித் தவஞ்செய்வர்.

விலங்குமுதலாய வேனைப் பிராணிகள் போலாது, மாந்தர் தாம் நல்லதன் நலனுந் தீயதன் தீதும் உய்த்துணரவல்ல சித்தத் தானறியும் அறிவுமுடைய ஆறறிவுயிராய்ப் பிறந்துளர். நலனு வனவற்றையுந் தீதாவனவற்றையும் பகுத்தறிந்து, தீதாவனவற் றைச் செய்யாதொழித்து, நலனுவனவற்றையே செய்வாராயின், அவர் தமக்கு மேலாய மானுடப் பிறவியை எய்தியவதனாற் போதரற்பாலனவாய நன்மைப்பயன்கள் யாவும் இலவாம்.

பொருளீட்டலும் உண்டலும் உடுத்தலும் இவைபோல்வன பிறசெய்தலுமே இவ்வுலகத்து மாந்தர் செயற்பாலனவென் றெண்ணி, அவ்வண்ணமே செய்தொழுகுவாராயினர் சிலர்; சிலர், அங்ஙனமுமின்றி உண்ணாதும் உடாதும் தம்முடம்பு வருந்த மேன்மேலும் பொருளீட்டலையே மேற்கொண்டொழுகி, இம்மையின்பத்தையும் பொருட்படுத்தாராய், எல்லைகடந்த பொ ருளவாவெய்தி அல்லும் பகலும் அல்லலுழப்பர். சிலர், பொரு ளைப் பொருட்படுத்தாராய், உண்ணல் உடுத்தல் முதலாயின செய் தின்பநுகர்தலே மாந்தர்க் குரியதாமென்றெண்ணி, உள்ள பொருளையெல்லாம் எல்லைகடந்த செலவுசெய்தலான் இழந்து, தாம்விரும்பிய இன்பநுகர்வொழிந்து, விரும்பாத துன்பத்தை விரைந்து நுகர்பவராவர். அவர் யாவரும் "பிறந்த மாந்தர் இறப் பது திண்ணம்" என்பதை மறந்தவராவர்.

இவர் பொருட்செல்வம் உடையவரென்றும், இவர் யாசக ரென்றும், இவர் கல்விச்செல்வம் உடையவரென்றும், இவர் புல் லறிவாளரென்றும், இவர் வயோதிகரென்றும், இவர் சிசுவினைய ரென்றும், இவர் முடிமன்னரென்றும், இவர் குடிமாக்களென் றும், இவர் மிகப்பெரியாராயினாரென்றும், இவர் மிகச் சிறியராயி னாரென்றும், இவர் ஆண்பாலாரென்றும், இவர் பெண்பாலா ரென்றும் ஏற்றத்தாழ்ச்சி நோக்காது யாவரேயெனினும் எப்

பொழுதேயெனினும் அவரையெல்லாம் கூற்றுவன் கொன்று குவித்துவிடச் சுடுகாடுகள் அவர்தம் உடம்புகளை உண்ணுதலைப் பார்த்திருந்தும், நேற்றைத்தினம் ஒருவர் உடைமையாயிருந்தன இற்றைத்தினம் மற்றொருவர் உடைமையாவதையும், அதிவிசித்திரமான மாடமாளிகைக்கணிருந்து அறுசுவையுண்டி அமர்ந்து இல்லாள் ஊட்ட மறுசிகை நீக்கி மகிழ்ந்துண்டு யாழிசைமுதலாம் இன்னிசைகளைக் கேட்டு நன்மணங்கமழும் பஞ்ச சயனத்தின் கட்டுயின்ற பெருஞ்செல்வரும் வறிஞராய்ப் பசிக்கொடுமையைச் சகிக்கலாற்றாது வீடுகடோறுஞ் சென்று வறுங்கூழையேனும் யாசித்தலையும் கண்டுவைத்தும், மிக்கவிருளின்கண் மின்னலைப்போன்று துன்பத்தினெல்லைக்கட் டோன்றி மறைவதாயும் உள்ளபெற்றியை உய்த்துணர வல்லார்க்குக் கனவினுகர்வுபோலப் பொய்ந்நுகர்வெனப் புலப்படுவதாயும் உள்ளதே சிற்றின்பம் என்பதை அறிந்துவைத்தும் தமதுடம்பும் பொருளும் இன்பமும் நிலையாயுள்ள உறுதிப்பொருளென மனத்தைத் திரித்துக் கொள்ளும் மாந்தர்தம் அறியாமை இருந்தபடியென்னை?

பேதையாயினோர் அன்பையும் அருளையும் பொருளாக் கொள்ளாது, பொருளையே பொருளெனக்கொண்டு பொதிந்து வைத் தோம்புகின்றனரே. எப்படி ஓம்பினுமென்? அவர் இறக்கும்பொழுதேனும் அஃதிழக்கும் பொருளே. முற்பிறவிகளிலே செய்துவைத்த நல்வினையின் மேலீட்டினாலன்றிப் பெறுதற்கரிய மானுட யாக்கையைப் பெற்றோர், அன்போடும் அருளோடும் பொருந்தி வாராதபொருள் பசுமட்கலத்து நீர்போலச் செய்தாரையுங் கொண் டழிந்து படுதலின், அவற்றோடுபொருந்த அறத்தாற்றாற் பொருளையீட்டி அப்பொருளைப் பொதிந்து வைத்தோம்பாது செயற்கரிய பலவறங்களையுஞ் செய்தலே மக்கட்பிறப்பான் எய்தும் உறுதிப்பயன். இன்றைக்கிருந்தார் நாளைக்கில்லையாய், இன்றைக்கொருவருடைய தெனப்பட்ட பொருள் நாளைக்கு மற்றொருவருடையதாய், அன்றைக்கே இன்பம் பயத்தற் குரிய வெனப்பட்டன துன்பம் பயத்தற் குரியவாதலுண்மையின், நிலையாத யாக்கையும் பொருளும் நிலையின இன்றைக்கே அதுவும் இப்பொழுதே இம்மை மறுமைகளின் றுறுமே

அன்றி மேற்கதிக்கண்ணும் நிலையாய இன்பத்தை எய்துதற்குரிய அறங்களைச் செய்தல்வேண்டும். யாவரும் இன்சொல்லாகிய விளைநிலத்திலே ஈதலாகிய வித்தையிட்டு, வன்சொற்களாகிய களைகளைக் களைந்து, வாய்மையென்னும் எருவைப் பெய்து அன்பென்னும் நீரைப்பாய்ச்சி, அறமென்னும் பைங்கூழையே வளர்த்தல் வேண்டும். முற்பிறப்பின்கட் செய்துவைத்த அறப்பயனை இப்பிறப்பின்கணுகர்வார் மேல்வரும் பிறப்பின்கண் நுகர்தற்பொருட்டு அறஞ்செய்யாமை, ஆவின்பாலைக் கறந்துண்டும் அதனை ஓம்பாமைக்கொப்பாம். அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றுவாரே இம்மைக்கண்ணும் இன்பநுகர்பவராவர்; ஏனை மறத்தாற்றான் ஈட்டிய பொருளானும் பிறனில் விழைதன் முதலியவற்றானும் எய்துமின்பம், இம்மைக்கட்டுன்பத்தோடு பொருந்தி வருதலானும் மறுமைக்கட் டுன்பத்தையே பயத்தலானும் இன்பமென்று சொல்லப்படும் பான்மையுடைத்தன்று.

அறஞ்செய்வார், பிறர் அறிதல்வேண்டிச் செய்கின்ற சொல்லும் வேடமுமிலராய்த் தம்மனத்தின்கட் குற்றமுடையரல்லராய், இல்லறத்தைப் பொருளளவிற்கேற்பவும் துறவறத்தை யாக்கைநிலைக்கேற்பவும் நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்யாது கழியும் நாள் உளவாகாமற் செய்வாராயின், அவ்வாறு செய்தவறம் செய்த உடம்பழியவும் உயிரோடொன்றி ஏனையுடம்பினுஞ்சென்று பயன்றரும். இல்லறநெறிக்கணின்று அதற்குரிய ஒழுக்கத்தில் வழுவாதொழுகுவார், துறவறநெறிக்கட் சேறற்கும் உரியராவர். அத்துறவறநெறிக்கணின்று அதற்குரிய ஒழுக்கத்தில் வழுவாதொழுகுவார், மூவகைத் துன்பமுமெய்துதற் கேதுவாயபிறவியையறுத்து வீட்டினைத் தலைப்பட்டு நிரதிசயவின்பமெய்துவர்.

உடம்பும் பொருளும் இம்மைக்கண் ஒருவற் கறத்தை விளைத்தனவேயாயின் அவற்கு அவை நல்லவாயினவென்றும், அதனை விளையாதனவேயாயின் பயன்படாவாயினவென்றும், பாவத்தை விளைத்தனவேயாயின் தீயவாயினவென்றும் இவ்

வுண்மையை அறியவல்லவரே, எய்துதற்கரிய அவற்றை எய்தி யபொழுதே அவற்றான் எய்தற்பாலவாய நற்பயன்களை விரைந் தெய்த முயல்பவராவர். கரும்பின் சாற்றைக் கொண்டவர் அதன்கோது தீயிலே வெந்தகாலத்து மனம் வருந்தார். அது போல, உடம்போடு கூடியிருந்தன்றிப் பெறுதற்கரிய அறப்பய னைப் பெற்றுடையார் தாம் விரும்பிப் போற்றிப் பேணிய உடம் பைவிட்டு நீங்கும்போது அதுதான் தீயிலே வெந்து சாம்பரா தலைக் கண்டு மனம் வருந்தார். ஐவகைக் குற்றத்தான் வரும் நல்வினை தீவினையென்னும் இருவகை வினையும் உள்ளதுணையும் உயிர் யாக்கையோடும் கூடிநின்று அவ்வினைகளை இன்பதுன்ப மென்னும் இருவகைப்பயனையும் நுகருமாகலின், இல்லறத்தின்க ணிற்பார் துன்பத்திற்கேதுவாய தீவினைகளை யொழித்து இன் பத்துக்கேதுவாய நல்வினைகளை மனம் வாக்குக் காயமென்னும் மூன்றிடத்தும் முறையே செய்யப்படும் நற்சிந் தையும் நற்சொல்லும் நற்செயலுமுடையராய் அவ்வறத்தைச் செய்தொழுகுதலும், பிறப்பு வீடென்னும் இரண்டனது துன்ப வின்பக் கூறுபாடுகளை ஆராய்ந்தறிந்து அப்பிறப்பறுத்தற் குத் தமக்குரிய ஒழுக்கத்தின்கண்ணே வழுவாது நின்று துறந்தவர் அறிவாற் பொறிகளைப் புலங்கண்மேற் செல்லா மற்காத்து எல்லாவுயிர்கண்மேலுந் தண்ணளியைப் பூண்டொ ழுகி அவ்வைவகைக்குற்றமு மொழியும்பொருட்டுக் கடவுளிடத் துப் பத்தியைவளர்த்துப் பேரன்புடையராதலுமே மக்கட்பிறப் பினர் ஒழுகல் ஆறும்.

மனத்தையும் பொறிகளையும் அடக்கவல்லராகும் பக்குவம் எய்தப்பெறுதார், துறவறமே மேலானதெனக் கருதி அந்நெறிக் கட்புக்கு, அதன்வழி ஒழுகமாட்டாராய் அதன்பயனையுமே யன்றித் தாம் முன்னின்ற இல்லறப்பயனையும் ஒருங்கே இழக் கின்றனர். இல்லறத்தின் வழுவாதொழுகினோர் துறவறப்பயனை யும் எளிதின் எய்துவாராகலின், அத்துறவறமே மேலானதென அதன்வழி ஒழுகக் கருதுதல் பேதைமையே. அவ்விருவகை நெறிகளுள் மேலாயதெதுவென ஓராசிரியனை மாணக்கன் வினை வினன். வினவ, அவ்வாசிரியன் "காட்சிப்பிரமாணத்தானே அதனுண்மையை உணர்த்துவ" லென்று, அம்மாணக்கனைத்

தன்னுடன் கூடவழைத்து, அந்நாட்டுத் தலைநகரை நோக்கிச் சென்றனன். செல்ல, அந்நெறிக்கட் சென்ற துறவியொருவனை ஓரரசுவா வந்தெடுத்துத் தன்மத்தகத்தின் மேல்வைத்துத் தலைநகரை நோக்கிச் சென்றது. செல்ல, அதனைக்கண்ட அவ்விருவரும் பின்றொடர்ந்து சென்றனர். அரசுவாத் துறவியைக் கொடு சென்றமைச்சர்பாலுய்த்தது. உய்க்க, "தனக்குப்பின் அரசுக்குரியாரொருவன் தனது வம்மிசத்திலனாய் நம்மரசன் இறந்தனனாகப் பண்டைக்காலவழக்கப்படி நாம் விடுத்த பட்டத்தியானை கொணர்ந்த இத்துறவியே இனிநமக்கரச"னென்று அமைச்சர் முதலாயினோர் மனம் மிகமகிழ்வாராயினர். அவர் அத்துறவியை நோக்கி "அரசனே, இனி இவ்வுலகமும் இதன்கணுள்ள குடிகளும் பிறவுந் தேவரீரதுடைமையே" என்று கூறி வாழ்த்திப்போற்றி வணங்குவாராயினர். அதன்பின்னர் அவனை ஆடையாபரணங்களான் அலங்கரித்து முடிசூட்ட முயன்றனர். அவர் சொல்லும் முயலுஞ் செயலும் நோக்கி முனிவன் அவரைப் பார்த்து "அமைச்சீர் வம்மின்! யான் நுங்கோட் கியைந்திலனென்று வருந்தகில்லீர், என் நிலைமையின் மேன்மையை நீவிர் அறிதாற்கேற்ற தகுதியுடையீரல்லீர், உடையீராயின் இவ்வாறு முயலீர், இனி நீவிர் நுமக்கறிந்தவாறு யாண்டேனும் புக்கு நும் பான்மையான் ஒருவனைத் தேடிக்கொடுவம்மின், வந்து அவனையே அரசனாக்குமின், அஃதவற்கொக்குமன், மற்றுப் பற்றிலான் பற்றினைப்பற்றுவோன் யானெனவெனும்பற்றொழிந்தேற்கு அஃதொவ்வாமை பெரிதுடைத்து, துறந்தார் வாழ்வுக்கு அரசவாழ்வு எட்டுணையேனும் ஈடாமோ" வென்று, அதனை எள்ளி நகையாடிப் புறங்காட்டி நடந்தோடிக் காட்டகம் புக்கான். புக்கு, ஓர் மரத்தின்கீழ் இருந்தனன். ஆசிரியனும் மாணக்கனும் அவனைப் பின்றொடர்ந்து சென்று மற்றொரு பாங்கரின் மறைந்திருந்து பார்த்தனர். அப்பொழுது அம்மரத்தின்மேல் இருந்த சேவற்புள்ளொன்று தன்பெடையை நோக்கிப் "பெண்ணே நாம் முன்பு செய்துவைத்த நல்வினைப்பயனாகவோ அல்லது இப்பொழுது செய்யும் இல்லறப்பயனாகவோ இன்றிரவு நல்விருந்தொன்று வரப்பெற்றேம் இல்வாழ்வார்க்கு விருந்தோம்பல் இன்றியமையாததொன்றன்றோ? குளிரான் வருந்துந்துறவி அங்ஙனம் வருந்தாமைப்பொருட்டுத் தீமூட்டுதல் நங்கடனன்றோ?"

என்று கூறிப் பறந்துபோய் யாண்டோ ஓரிடம்புக்கு நள்ளிர வின்கண் நெருப்புகொள்ளியொன்றை வாயிற் கௌவிக் கொடு மன்னிருட்கண் மின்னுப்படைத்தென்ன மீண்டுவந்து அதனைத் துறவிமுன்னர் இட்டது. இட, அதனைக்கண்ட துறவி விறகுசேர்த்து நெருப்புவளர்த்துக் குளிர்காய்ந்தனன். அப் பொழுது சேவலைப் பெடைநோக்கி "எனதருமைநாயகனே! இந்நள்ளிருட்கண் உணவூட்டி விருந்தோம்பற்கு வேறொன்றுங் காணேன், நானே எரியும் அங்கியுள் வீழ்ந்திறந்து உணவாவ" னெனச், சேவல் உன்னுடம்பு முனிவன் பசியைத் தணிக்குமளவினதோ" வென்று கூறி அவ்விரு பறவைகளும் எரியும் அங்கியுள் வீழ்ந்திறந்தன. இவ்வறத்தை இனிது நடாத்திய பறவைகளையும், துறவறத்தை மயங்கிக் கைவிடாத முனிவனையுங் காட்டி, அவ்வவ் வறத்தினின்றோர் அதனதன் வழித் தவறாதொழுகலே இன்றியமையாச் சிறப்பிற்றன்றி மேம் பட்டதெதுவென வாராய்தல் பேதைமையேயென, அவ்வவ் வறன் வலியுறுத்துவான் இங்ஙனம் மாணாக்கற் கறிவுறுத்தி ஆசிரியன் போயினன்.

---

## இல்லறவியல்

### ரு. அதி. இல்வாழ்க்கைச்சிறப்பு

இல்வாழ்க்கைச்சிறப்பாவது இல்வாழ்வான் இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. கற்பென்னு மாடையையுடுத்து, அன்பென்னுமளகத்தை முடித்து, நாணமென்னும் நறுஞ்சாந் தை மெய்யிற் பூசி, நற்குண நற்செய்கைகளென்னு மாபரணங் களைப் பூண்டு, மக்கட் பேறென்னுஞ் செல்வத்தை உடையளாய இல்லாளோடுகூடி இல்வாழ்வான் பிறர்க்குப் பகுத்துண்டு, இல் லறத்திற் கோதிய நெறியிற்றவறாதொழுகுதலே இல்வாழ்க் கைச்சிறப்பு.

அறப்பண்ட மேற்றிய இல்வாழ்க்கையென்னுஞ் சகடத் தின் செலவு, கண்ணிரண்டும் ஒன்றையே காணுமாறுபோல,

இல்வாழ்வானும் இல்லாளும் நல்லொழுக்கமாகிய நுகத்தின் இருபுறத்தும் பூண்டிழுத்துச் செல்லினன்றே கடைபோகாநிற் கும் நறுமணமலரில்லாச் சோலையும், தாமரைமலரில்லாத் தடா கமும், கண்ணில்லா வுடம்பும், திங்களில்லாக் கங்குலும், நன் மந்திரியில்லா வரசும், கற்றறிந்தவரில்லா வவையும், அன்பும் அருளுமில்லா நெஞ்சமும், கற்புடை மனைவியில்லா வில்லமும், நன்மக்கட்பேறில்லா வில்வாழ்க்கையும் உளவாயினபோற் கா ணப்படினும் பயன்படாமையின் ஒருபெற்றியவாய் இலவாயின வேயாம்.

இல்வாழ்வானென்பான் அறவியல்பினையுடைய பிரமசாரி வானப்பிரத்தன் சந்நியாசியென்னும் ஏனை மூவருஞ் செல்லும் அவ்வவ்வொழுக்க நெறிகளை முடியச்செல்லுமளவும் அவர் செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலியவுதவி அவ்வவநெறிகளின் வழுவாமற் செலுத்துதலும், களைகணை வாராற் றுறக்கப்பட்டார்க்குத் தாமே களைகணாய் நின்று வேண் டுவன செய்தலும், நல்கூர்ந்தார்க்கு உணவு முதலாயின கொடுத் தலும், ஒருவருமின்றித் தன்பால்வந் திறந்தார்க்கு நீர்க்கடன் முதலாயின செய்து நல்லுலகின்கட் செலுத்துதலும், படைப் புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதியா கிய தென்புலத்தார்க்கும், பண்டறிவுண்மையிற் குறித்துவந்தா ரும் அஃதின்மையிற் குறியாது வந்தாருமென இருவகை யின ராய்ப் புதியராய் வந்தார்க்கும், உறவினர்க்கும், ஏனை . . . . . . ளும் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின், தலைக் . . . செய் யவேண்டிய அறநெறியை வழுவாமற் செய்தலும், பழையனவும் புதியனவுமாயுள்ள தேவாலயங்களில் விசேடமாய் வெளிப்பட் டருள் செய்யும் தேவர்கட்கு இவ்வுலகின்கண் மக்களாற் செய் யப்படும் நித்திய பூசையும் அதன் குறைவுதீரச் செய்யப்படுத லான் நைமித்திகமெனப்படும் விழவும் நடைபெறச்செய்தலும், அவ்வாலயங்கள் மடங்கள் முதலாய விடங்களிற் கற்றுவல்லார்க் குங் கல்லாதார்க்குங் கல்வியறி வொழுக்கங்களானும் கடவுட் பத்தியானுஞ் சிறந்த போதகர்களைக் கொண்டு கடவுளை வழிபடு

முறை முதலிய நல்லொழுக்க நெறிக்கட் செலுத்தும் போதனை களைப் போதிப்பித்தலும், வித்தியாசாலைகளைத் தாபித்துக் கல்வி கற்பித்தலும், குருடர் முடவர் நோயாளர் விருத்தர் பாலர் முதலாயினோர்க்கு உணவூட்டல் முதலாயின செய்தற்குரிய அன்ன சாலை வைத்தியசாலை முதலியவற்றைத் தாபித்து நடைபெறச் செய்தலும், யாவர்க்கும் பயன்படக் கிணறுங் குளமும் முதலாயின தோண்டுவித்தல் ஆவுரிஞ்சுகன் றூட்டுவித்தல் முதலாயின செய்தலும், இவைபோல்வன பிறதருமங்களைச் செய்தலுமுடையவனா யிருத்தல்வேண்டும்.

இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியானவள், நிறைக் காவலில் வழிச் சிறைக்காவலாற் பயனில்லை யாகலின் கற்பினின் றும் வழுவாமற் றன்னைத்தானே காப்பவளாய்த், தன்னைக் கொண்டவனையும் உண்டி முதலியவற்றாற் பேணுபவளாய், நாயகனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையையு முடையவளா யிருத்தல்வேண்டும். ஒருவனில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சிமை யுடைத்தாயினும் இல்லாள் நற்குண நற்செய்கைக ளுடையளல்ல ளாயினக்கால் அவ்வாழ்க்கை மாட்சிமையுடைத் தாகாது; மற்றுச் செல்வத்தாற் குறைந்ததாயினும் அவள் அவற்றை யுடையளாயினக்கால் அஃததனை யுடைத்து. நற்குண நற்செய்கைகளில்லாதவளாயும் தீயகுணமும் வன்சொல்லும் தீயசெயலுமுள்ளவளாயுமுள்ள இல்லாளிருந்த வில்லத்தை யாவருமணுகற் கஞ்சுவ ராகலின் அது புலிகிடந்த புதலுக் கொப்பாம். கற்றுணர்ந்த பெரியவர்வா யுறுதிச்சொற் கற்றுணர் வில்லாரைக் கொல்லுமாகலின் அஃதவர்க்கியமனாம். அதுபோல அறக்கடவுள் அறமல்லவற்றைச் செய்யுமாந்தரைக் கொல்லு மாகலின் அக்கடவுள் அவர் தமக்கு இயமனாம். வாழைபானது காயீன்றபின்னர் வளர்ந்துயாதாதல் இல்லையாகலின் அஃதீன்ற காயே அதற்கு இயமனாம். அதுபோல ஒருவனில்வாழ்க்கை அதற்கிசைந் தொழுகும் இல்லாளை இல்லாதவன்மேற் கடை போகா தழிவெய்துமாகலின் அவனறனில்வாழ்க்கைக்கு அவன் கொண்ட இல்லாளே இயமனாம்.

என்பில்லாத வுடம்பை ஞாயிறு சுட்டாற்போல, அறமில்லாத உயிரை அறக்கடவுள் சுடுமாகலின் அஃதில்லா வில்வாழ்க்கை, வாழ்வார்க் கென்றுந் துன்பம் பயப்பதொன்றேயாம். இல்லாட்குங் கணவற்கும் நெஞ்சொன்றாகாவழி இல்லறங் கடைபோகா தாகலின் அவர் தாம் ஒருவர்மாட்டொருவர் அன்புடையராதல்வேண்டும். யாவதொருவர் பாவத்தான் வந்த பிறர்பொருளைப் பகுத்துண்ணின், அறம் பொருளுடையார் மேலும் பாவந் தம்மேலுமாய் நின்று இல்லறங் கடைபோகாமைக்கும் அவர்வழி உலகத்தின்கணில்லாமைக்கும் ஏதுவாகும். இவ்வாழ்வார் பொருள்செய்யுங்காற் பாவத்தையஞ்சி யீட்டி, அப்பொருளை அறவியல்புடைய மூவர்முதலாயினோர்க்கும் தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தாமுமுண்டு தருமமுஞ் செய்வரேல், இல்லறம் இனிது கடைபோகாநிற்குமேயன்றி அவர்வழி உலகத் தென்ஞான்றும் நிற்றலல்ல திறத்தலுமில்லை.

இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக விறுக்கப்படூஉங் கடன் மூன்றனுள் முனிவர்கடன் கேள்வியானுந் தேவர்கடன் வேள்வியானுந் தென்புலத்தார்கடன் புதல்வரைப் பெறுதலானுமல்ல திறுக்கப்படாமையின் அத்தென்புலத்தார்கடன் இறுத்தற்பொருட்டு அறியவேண்டுவன அறிதற்குரிய புதல்வரைப் பெறுதலே இவ்வாழ்வானெய்தும் பேறுகளெல்லாவற்றுள்ளுந் தலையாயது. ஆலமரத்தை வீழூன்றித் தாங்கினாற்போன்று தந்தையின் தளர்வின்கண் மைந்தனே அவன் குடியைத்தாங்குவன். இல்லைவிட்டுப் பற்றினைத் துறந்து வனத்திற்குச் சேறற்கும் அவனே அவற்குத் துணையாம்.

பெற்றெடுத்து வளர்த்த தாயைத் தெய்வமெனவும் தந்தையைக் குருவெனவுங்கொண்டு வணங்கி அவரைப்பேணி அவரிறந்தபின் செய்யவேண்டும கடன்களைச் செய்து அவரை நற்கதிக்க னுய்ப்பதே மைந்தர் கடன். தந்தை புதல்வனுக்குச் செய்யும் நன்மைகளுட் பொருளுடைய னாக்குதல் முதலாயின ஒருபோதவற்குத் துன்பமும் பயத்தற் கேதுவா மாதலின், கற்றோரவையின்கண் அவரினும் மிக்கிருக்குமாறு கல்வியுடைய

ளுக்குதலே சிறப்புடைத்தாய நன்மை. அங்ஙனங் கல்வியுடைய ளுக்கிய தந்தைக்கு மகன் செய்யுங் கைம்மாருகிய கடனாவது, தன்னறிவு மொழுக்கமுங் கண்டார் இவன்றந்தை இவனைப் பெறுதற்கு என்ன தவஞ்செய்தான்கொல்லோ வென்று சொல் லுஞ் சொல்லை நிகழ்த்துதலேயாம். புத்திர னறிவுடைமை கண்டு தந்தையினும் அறிவுடையார் உவப்பரேயெனினும், ஈன் றெடுத்துக் கவானின்கட் கண்ட பொதுவுவகையினுஞ் சால் புடைய னெனவறிந்த சிறப்புவகை பெரிதாகலின் தாயுவகைக் களவில்லை.

ஒருவ னுடற்குக் கண்ணிற் சிறந்த உறுப்பில்லை, அது போல ஒருவனில்வாழ்க்கைக்கு, வெஃகாமை கண்டது விழை யாமை நல்லறிவுடைமை நாணுடைமை முதலிய நற்குணங் களும், அவன் வெறுப்பன செய்யாது குறிப்பின்வழி யொழுகல் பகுத்துண்டு வாழ்தல் முதலிய நற்செய்கைகளுமுடைய இல் லாளிற் சிறந்த உறுப்பில்லை; இல்லாட்கு நாயகனிற் சிறந்த தொடர்புடையாரில்லை; அவ்விருவர்க்கும் நன்மக்கட் பேற்றி னுஞ் சிறந்த செல்வமில்லை; அம்மக்கட்குத் தாயிற் சிறந்த கண் கண்ட தெய்வமுந் தந்தையிற்சிறந்த குருவுமில்லை

---

## ௮. அதி. அன்புடைமை.

அன்புடைமையாவது இல்வாழ்வான் இல்வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலாயினர்மாட்டு விருப்ப முடைய னதல். இல்லறம் இனிது நடத்தலும் பிறவுயிர்கண்மேல் அருள் பிறத்தலும் அவ்வன்பின் பயனும். அவ்வன்பே மானுடவன் பெனப்படுவது.

பெறுதற்கரிய மக்களுயிர்க்கு உடம்போடுண்டாகிய தொ டர்ச்சி அன்போடு பொருந்துதற்குவந்த நெறியின் பயனுகலின், இல்வாழ்வான் மனைவி மக்க ளொக்கலென்னுமிவர் ஒருவர்மாட் டொருவர் அன்புடையரா யிருத்தல்வேண்டும். அவ்வன்

புடைமை பிறர்மாட்டும் அத்தன்மையான் விருப்பமுடைமை யைத் தந்து அருள் பிறத்தற்கேதுவாய் இல்லறத்திற் குறுப் பாதலே யன்றித் துறவறத்திற்கும் ஏதுவாகும். யாக்கை யகத் தின்கணின்று இல்லறத்திற் குறுப்பாகிய அன்புடைய ரல்லா தார்க்கு இடனும் பொருளும் ஏவல்செய்வாரும் முதலாய புறத் தின்கணின்று உறுப்பாவனவெல்லாம் அவ்வறஞ் செய்தற்கண் என்ன உதவியைச் செய்யும்?

அன்பானது தன்னுயிரை நோக்கிச் சென்று கன்மார்ச்சிப் புக்கேதுவாய்ப் பிறவிப் பிணிக்கு வித்தாவதூஉம், பிற வுயிரை நோக்கிச்சென்று கன்மநுகர்தற் கேதுவாய்ப் பிற விப்பிணிக்கு மருந்தாவதூஉமென இருவகைப்படும். ஒருவன் தன் சுவாயங் கருதித் தொடர்புடையார் மாட்டும் பிறர்மாட்டுஞ் செய்யுமன்பு பிறவிக்கு வித்தாம். மக் கட்குப் பாலூட்டித் தாலாட்டிச் சீரட்டும் பெற்றதாயரிடத் துக் குழவிப் பருவங்தொட் டுளதாம் விருப்பமும், அத்தொடர் பாற் றொடர்புடைய தந்தையு முடன்பிறந்தாரும் முதலாயி னோர்மாட்டுப் படிமுறையே உளதாகும் விருப்பமும், அம்மக் கடாம் தம்மாட்டுத் தமக்கியல்பாயெழும் விருப்பங் காரணமா கச் சுவாயங் கருதி அவர்மாட்டுச் செய்யும் அன்பேயாம். அவ் வன்பு தம்மாட்டு நிறைந்துவருதலும் ஏனையோர்மாட்டுப் படி முறையே குறைந்துபோதலு முடைத்து. தம்மாட்டுப் படி முறையே குறைந்தும் ஏனையோர்மாட்டுப் படிமுறையே மிகுந் தும் வாரா தொழியுமேயாயின் அவ்வன்பு தன்னையுடையானைத் தப்பாது தீநெறிக்கட் செலுத்திப் பாவத்தை மேன்மேலும் மிகுவித்துப் புண்ணியத்தைப் படிமுறையே குறையச்செய்து கன்மார்ச்சிப்புக் கேதுவாய்ப் பிறவிப்பிணிக்கு வித்தாகும்.

பிறவிப் பிணிக்கு மருந்தாவது, தந்தைதாயென்னும் இரு முதுகுரவரும் வித்தியாகுருவும் தீக்கைசெய்குருவும் அரசனும் பெரியாருங்கடவுளுமென்னும் இவர்சொற்கேட்டு நன்னெறிக்கட் சேறற்கு ஏதுவாயதாம். நன்னெறிக்கட் செல்வார்க்குப் பாவங் குறையப் புண்ணியம் மிகும். மிகப், படிமுறையிற் கன்மநுகர்

வுளதாய்ப் பிறவியறும். தன்னை நோக்கலாற் பாவமிகுதியும் பிறவுயிரை நோக்கலாற் புண்ணிய மிகுதியும் உளவாமன்றே? அவர் அங்ஙனம் நன்னெறிக்கட் செல்லுங்கால் அக்குரவர் முதலாயினோர்க்கு அஞ்சுதலானே தீமையாயினவற்றைச் செய்தலைப் படிமுறையிற் குறைப்பர். குறைப்பப், பிறவுயிர்கண்மேல் மிகவிருப்பமும் அவ்வுயிர்கள் துன்பங் கண்டுழி இரக்கமும் உளவாம். உளவாக, அவ்வுயிர்கட்கு நன்மையாயினவற்றை மேன்மேலுஞ் செய்வர். செய்ய, அச்செயலாற் றமக்குளவாகும் மெய்வருத்தம் முதலாயவற்றைப் பொருட்படுத்தாப் பெற்றியிற் றம்மாட்டுத் தமக்குள்ள விருப்பம் படிமுறையிற் குறையும். குறையக் குரவர் முதலாயினோர்மாட்டுப் பயபத்தியும் பிறர்மாட்டு விருப்பமும் படிமுறையே வளரும். வளரச், செய்த பாவப்பயன் நுகர்ந்தொழியும். ஒழியப், புண்ணியச் செயல்களினும் படிமுறையே விருப்பு வெறுப்பிலவாகக் கடவுட்பத்தி மிகும். மிக, ஈற்றின்கண் அக்கடவுட்பத்தி அவ்விறைமுதற் கடவுளைத் தலைக்கூடச்செய்யும். செய்ய, அவ்வுயிர்க்குப் பிறப்பிலதாம்.

ஒன்றற்கொன்று மாறாய தன்மையுடைய பயமும் பத்தியும் ஒருவர்மாட்டு ஒரேகாலத்து உளவாமோவெனின், உளவாம். என்னை? தம்மிடத்துத் தமக்குளதாய அன்பு, தீமையாயின செய்யாமற் குரவர் முதலாயினோர்க்குப் பயப்படுதலானே படிமுறையிற் குறைய, அப்பயமும் தீக்காய்வார்போன்று அவரை அகலாதும் அணுகாதும் உளராய்ப் பின் அவர்வயத்தராய்ப் போதலாற்றானே படிமுறையிற் குறையப் பத்தியொன்றே வளரு மாகலானென்க. அப்பத்தி வளர்ந்துழிப் பேரன்பெனப்படும்.

பசிநோயைத் தணிக்குமாறு சிங்கம் ஏனைமிருகங்களைக் கொன்றுண்டலும் ஒருவன் களவுசெய் துண்டலும் முதலாய சுவநயங் கருதிச் செய்யும் செயல்கள், பாவத்துக் கேதுவாயின வாகலின் அச்செயல்கட்கும், புகழ் முதலாயினவை நோக்கிச் செய்யப்படுஞ் செயல்கட்கும் ஏதுவாய அன்பு மிருகத்தன்மை

யான அன்பெனப்படும். புகழ்முதலாய ஏதுக்களாற் செய்யப் படுவனவற்றுக்கும் நுகரப்படுவனவற்றுக்கும் முன்னாகிய காரணமாம். சுவநயங் கருதாத இல்லறச் செயல்கட்கு ஏதுவாய அன்பும், துறவறத்துக் கேதுவாய அன்பும் மானுடத்தன்மை யான அன்பெனப்படும்; அவ்வன்பு ஊழையும் புறங்கண்டு தன்னானே உளதாக்கப்படுவது. அன்பே சுவரூபமாயுள்ள முழுமுதற் கடவுண்மாட்டுச் சுவநயங் கருதாது தடையின்றி இயல்பானெழுந்து கலக்கும் அறிவின் வியாபாரமாகிய சிறந்த அன்பே தெய்வீகத்தன்மையான அன்பெனப்படும். இப்பேரன்பு கன்ம நுகர்ந்துழி விளக்கமெய்துவது. இன்பமுந் துன்பமும் நீங்கியுளதாவது பேரின்ப மெனப்படுமாறுபோல, விழைதலும் வெறுத்தலும் நீங்கியுளதாவதே பேரன்பெனப்படும்.

இல்லறம் இனிது நடத்தற்கும் பிறவுயிர்கண்மேல் அருள் பிறத்தற்கும் மானுடவன்பே துணை. தம்மால் அன்புசெய்யப் பட்டாரது துன்பங்கண்டுழி அன்புடையார் கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே உண்ணின்ற அன்பினை எல்லாரு மறியத் தூற்று மாகலின், காட்சியளவைக்கு வெளிப்படாதாயினும் அஃதனுமானவளவையாற் பிறரறிய வெளிப்படுவ தொன்றேயாம். அவ்வன்பில்லாதார், பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானுந் தமக்கேயுரியர்; அதனையுடையாரோ வெனின், அவர்தாம் அப்பொருளானேயன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியவராவர்.

மனத்தின்கண் அன்பில்லாத உயிர் இல்லறத்தோடு கூடி வாழ்கின்ற தென்னுமது, வன்னிலத்தின்கண் வற்றலாகிய மரந் தளிர்த்ததென்னு மதுபோலும். வெறுப்பின்றி எங்கு மொரு தன்மைத்தாகிய வெயிலின்முன் என்பிலது தன்னியல்பாற் சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லாத உயிர் தன்னியல்பானெந்து கெடும். அன்பில்லா தார்க்குக் கல்வியறிவொழுக்கங்களும் தானதருமங்களும் கடவுட்பூசையும் சீரும் புகழும் முதலாயின இல்லையாகலின் இல்லறமும், விரதமுந் தூய்மையும் அருளும் மெய்யுணர்வும் முத

லாயின இல்லையாகலின் துறவறமும் இல்லை. அவர் பெறுதற்கரிய மானுடயாக்கையைப் பெற்றதனால் எய்தும் பயன், துன்பத்துக் கேதுவாய தீவினையையும் அதன் பயனையும் மேலும் மேலும் ஈட்டுவதும் நுகர்வதுமேயாம். அன்புமுதலாக அதன் வழிநின்ற உடம்பே உயிர்நின்ற உடம்பாவது, அவ்வன்பில்லாதார்க்கு உளவாய உடம்புகள் அறம்பயவாமையின் என்பினைத் தோலாற் போர்த்தன, உயிர்நின்றன வாகா. ஆகவே யாவரும் மானுட யாக்கையைப் பெற்றதனா லெய்தும் பயனாகிய அம்மானுடவன் புடையராய் அறஞ்செய்து, முதிர்ந்த போன்போ டுருகி அகங்குழைவார்க்கு உரியனாய இறைமுதற் கடவுளை அடைதலே இல்வாழ்க்கையா னெய்தும்பயனென்பதை யறிந்து அதன்வழி யொழுகுதல் வேண்டும்.

அன்பின்மையும் அருளின்மையும் நடுவுநிலைமையின்மையும் பொறையின்மையும் அழுக்காறுடைமையும் அடக்கமின்மையும் வெஃகலும் வெகுடலும் வஞ்சமும் பகையும் காமமும் செய்ந்நன்றி கோறலும் முதலாயின இல்வாழ்வார் தம்மாட்டுளவாகாமற் கடிந் தொழித்துவிடவேண்டிய மனக்குற்றங்கள்.

---

## எ. அதி. விருந்தோம்பல்

விருந்தோம்பலாவது இருவகை விருந்தினரையும் புறந்தருதல். விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதன பொருளேயன்றி இன்முகமும் இன்சொல்லுமாம்.

தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்னும் ஐம்புலத்துள் முன்னையவிரண்டும் கட்புலனாகாதாரை நினைந்து செய்வன வாகலானும், பின்னையவிரண்டும் பிறர்க்கீத லன்மையானும் இடைநின்ற விருந்தோம்பலே சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயது. வேதமோதலாகிய பிரமயாகமும் ஓமம் வளர்த்தலாகிய தேவயாகமும் விருந்தோம்பலாகிய மானுடயாகமும் நீர்க்கடனாற்றலாகிய பிதிர்யாகமும் பலியீதலாகிய

பூதயாகமுமென்னும் ஐம்பெருவேள்வியினொன்றாய்த் துறந்தாரையுமுள்ளிட்ட விருந்தினரை யோம்புதல், மிகச்சிறியதோர் ஆலம்வித்து முளைத்து வளர்ந்து உயிர்கட்கு மிகப்பெரிய நிழலைக் கொடுத்தாற்போலச் செய்த அவ்வறம் அளவுமுதலியவற்றான் மிகச்சிறியதேயெனினும் அருளேதுவாய் ஞானவொழுக்கங்களான் உயர்ந்த தக்கார் கைப்பட்டதேயாயின் அதன் பயனுக் களவில்லை. அத்தன்மைத்தாகிய விருந்தோம்பல் யாவரானும் விரும்பிச் செயற்பாலதொன்றேயாம். அட்டுண்டுவாழத் தகுதியில்லாதவனே அதிதி, அவனையோம்புதலே விருந்தோம்பலெனப்படும்.

யாக்கையோடு கூடிப் பிறந்த வுயிர்கட்கு உளவாய பிணிகள் பலவற்றுள்ளும் பசிப்பிணியே மிகக்கொடியது. ஏனைப் பிணிகள் சிற்சில காலங்களின்மிக்கு வெளிப்பட்டுத் தோன்றும், பின்னர் ஒழிவன ஒழியும், ஒழியாதன கொல்லும். அவ்வாறின்றிப் பசிப்பிணியோவெனின், அஃதுடம்புள்ள துணையும் தினந்தோறும் சிறிதுசிறிது பொழுதினுட் டோன்றி வருத்துவதாய், ஒருஞான்றும் ஒழியாததாய், ஏனைப்பிணிகளெல்லாந் தோன்றற் கேற்றதாய், இறுதிக்கண் அதனைக் கொல்வதாயுளது. அத்துணைக்கொடிய நோயான் எத்துணைப் பெருஞ் செல்வரும் மேன்மேலும் வருத்த முற்றுளரேயன்றி வருந்தாதார் உலகத்தில்லை. அப்பசியைச் சிறிதுபொழுது தணித்தற்குரிய உணவுப்பொருள்களோவெனின் அவையும், முற்பிறப்பிற் செய்து வைத்த கன்ம ஏற்றத்தாழ்ச்சியானும், முயற்சியும் அதனின்மையும் முதலிய ஏதுக்களானும், எல்லாவுயிர்கட்கும் ஒரே பெற்றியானன்றி அளவு சுவை முதலியவற்றான் ஏற்றத்தாழ்ச்சி மிகவுடையனவாய் அமையப்பெற்றுள்ளன. அற்றாகலினன்றே அவ்வுணவுப்பொருளின்மையான் வருந்துமுயிர்கட்கு உணவூட்டல் முதலிய அறச்செயல்கள் அறிவினேற்றமுடைய மக்கட்பிறப்பினர் கடனாயிற்று. அறிவினேற்றத்தானே அன்பும் அருளு முடையராதற்குரிய மாந்தர் அவ்வன்பும் அருளுமுடையரல்லராய்ப் பிறிதோருயிர் பசித்திருக்கப் பார்த்துச் சகித்திருக்கும் பெற்றியினராவரேயாயின், அவர்தாம் விலங்கு

முதலிய பிராணிகளோடும்வைத் தெண்ணப்படமாட்டார். ஓரறிவுடைய மரங்களென்றே எண்ணப்படுவர். உணவுப்பொருள்களை யீட்டிப் பசியான் வருந்து முயிர்கட்கு மீந்து தாமுமுண்டு வாழ்வதையே பொருளாகக்கொண்டு இல்லறம் பூண்டார் அவ்வாறு செய்யாது தம்வயிற்றைமாத்திரம் நிறைக்கும் விருப்பினராயினரேல், அல்லது அதுவுஞ்செய்யாது வாளா பொருளைக் காத்திருப்பவ ராயினரேல், அவர்தமக்கு அவ்வில்லறம் கருதிய நன்மையைப் பயவாது கருதாத தீமையையே பயப்பதாகும் இல்வாழ்வார்க்கு விருந்தோம்பலே இன்றியமையாத கடனும்.

ஒருவன் மனத்தையும் பொறிகளையும் ஒறுத்தடக்க வல்லனுயவழிச் செய்யப்படும் அருமையுடைத்தாய துறவறத்திற் புகுதலையொழித்து, அவற்றை பொறுக்கவேண்டாது ஐம்புலவின்பங்க ளாரத்துய்க்கும் மென்மையுடைய இல்லறத்திற் புகுதல், ஈட்டன்முதலியவற்றாற் றுன்பமுற்றும் பொருள்களைப் போற்றி விருந்தினரைப்பேணி அவர்க்குபகாரஞ் செய்தலான் அத்துறவறப்பயனையும் எளிதி னெய்துதற் பொருட்டேயாம். உண்ணப்படும்பொருள் சாவாமைக்குக் காரணமாகிய மருந்தேயெனினும் குறைந்த வளவினதேயெனினும் யாவரும் பகுத்துக் கொடுத் துண்ணின் அவர்க்குத் துறவறமும் எளிதிற் சித்தியாதொருதலை. அங்ஙனஞ்செய்யாது தம்மைநோக்கிவந்த விருந்து தம்மில்லின்புறத்ததாகத் தாமேயுண்ணுமவர், இரையைக் கண்டுழி இனத்தை வரவழைத்து அவற்றோடுடனுண்ணும் பெற்றியனவாய காக்கைமுதலிய பிராணிகளினும் இழிந்த பிறப்பினரென்று யாவரானு மெள்ளப்படுவாராய், இம்மையின் மெய்போலத் தோன்றிச் சிறிது பொழுதுள்ள பொய்யின்பமே நுகர்பவராவர்; அவர்க்கு இல்லறமு மொருஞான்றுஞ் சித்தியாதவில்லை.

தன்னை நோக்கிவந்த விருந்தினரை நாடோறும் புறந்தருவான தில்வாழ்க்கை, துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவான் வருந்திக்கெடுதலில்லை; இறைக்குந்தோறு மிறைக்குந்தோறும் ஊற்றுநீர் பெருகிக்கொண்டே வருமாறுபோல, அவன்றன்

செல்வமும் பெருகிக்கொண்டேவரும்; திருமகளுந் தன்செல்வம் நல்வழிப்படுதலான் அவன்ற னில்லின்கண் மனமகிழ்ந்து வாழ்வள்; அவன் மறுபிறப்பிற் றேவனாய் வானினுள்ளார்க்கு நல்விருந்தாவன். விருந்தோம்பலை யிகழும் பேதையார் பொருளுடையராயினும் அப்பொருளாற் கொள்ளும் பயனையிழந்து உடைமையை இன்மையாக்கலின், நிலையாப்பொருளை வருந்திக் காத்துப் பின் அதனையிழந்து இதுபொழுது யாம் பற்றுக்கோடிலமாயினேமென் றிரங்குபவராவர்.

செய்மைக்கட் கண்டுழி இன்முகமும் அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும் அதுபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலுமென விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்முக மில்வழிச் செய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், முகம் வேறுபட்டு நோக்கக் குழையும் அவ்விருந்தினர் மோந்துழியன்றிக் குழையாத அனிச்சப்பூவினும் மெல்லியர். ஒருவன் விருந்தினரைக் கண்டபொழுதே முகமினியனாய், மனத்தின்கணுவகையையும் அன்புடைமையையும் வெளிப்படுப்பனவாய் வஞ்சனையில்வாயிருக்கின்ற சொற்களையு முடையனாயின், அவை யீதல்போலப் பொருள்வயத்தவன்றித் தன்வயத்தவாயினும் அறநெஞ்சுடையார்கக்கல்ல தியல்பாக வின்மையின் பொருளில்வழிக் கொடாமையினும் நன்று; அஃதேயுமன்றிப் புகழ்முதலியன காரணமாகப் பொருளுடையார் நெஞ்சுவந்து கொடுத்தலினும் ஆற்றாமையின்வந்த விருந்தினர்க்கு இன்முகமின்றிக் கடுஞ்சொல்லாய்க் கொடுத்தலினும் நன்று.

நீரைக் காய்ச்சுங் கிரணங்களையுடைய ஞாயிற்றின் வருகையாற் பொங்காத சமுத்திரம் குளிர்ந்த கிரணங்களையுடைய திங்களின் வருகையாற் பொங்குமாறுபோலக் கடுஞ்சொற்கு மகிழாத மாந்தரும் ஏனை யிழிந்த பிராணிகளும் இன்சொற்கு மகிழ்தலைக் கண்டுவைத்தும் அவற்றைக் கூறாது அக்கடுஞ்சொற்களையே கூறும் பேதையார் உலகத்தின்கட் பெறக்கருதிய பெரும்பயன்றான் யாதோ? குயிலின் சத்தம் யாவர்க்கும் விருப்பையும் கழுதையின் சத்தம் யாவர்க்கும் வெறுப்பையுந் தரு

தலைக் காண்டலின், ஒருவன் கூறுஞ் சொற்கள் பொருளானே யன்றிச் சத்தத்தானும் இனியவா யிருத்தல் வேண்டும். எல்லார்மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லை யுடையார்க்குப் பகையும் நொதுமலுமின்றி உள்ளது நண்பேயாமாகலின் அவர் எல்லாச் செல்வமுமெய்துவர். ஒருவனுக்கு அணியாவது தன்னாற் றாழப்படுவார்கட் டாழ்ச்சியுடையனாய் எல்லார் கண்ணும் இனியசொல்லையு முடையனாதலேயாம்; இவையிரண்டுமேயன்றி மெய்க்கணியும் பிறவணிகள் அவைபோலப் பேரழகும் நற்பயனுங் கொடாமையின் அணிகளாகா. பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ் சொற்களை மனத்தா னாராய்ந்து இனியவாக ஒருவன் சொல்லுமாயின், அவற்குத் தம்பகையாகிய அறம் வளர்தலிற் பாவங்கடேயும். பிறர்கூறிய வின்சொற் றனக்கு மின்பம் பயத்தலையும் கடுஞ்சொற் றுன்பம் பயத்தலையும் அனுபவித்தறிகின்றவன், பிறர்மாட்டு மின்பம் பயக்கும் இனிய சொற்களைச் சொல்லாது துன்பம் பயக்குங் கடுஞ்சொற்களைச் சொல்லின், அவன் தனக்குத்தான் நல்ல னல்லன்; அருள் நடுவுநிலைமை முதலாயின வுடையனுமல்லன். அறம் பயக்கும் இனிய சொற்களும் தனக்குளவாயிருக்க அவற்றைக் கூறாது பாவம் பயக்கும் இன்னாத சொற்களை ஒருவன் கூறுதல், ஔவை யுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாகுங் கனிகளும் தன் கைக்க ணுளவாயிருக்க அவற்றை நுகராது காஞ்சிரங்காய் போல நஞ்சாகும் இன்னாத காய்களை நுகர்ந்ததனோடொக்கும். ஆகவே இல்வாழ்வார்க்கு விருந்தோம்பல் இன்றியமையாத நல்லறம், அங்ஙனம் விருந்தோம்புவார்க்கு உள்ளத்தின் உவகையையும் அன்பையும் வெளிப்படுத்து அவ்விருந்தினரை மகிழ்விக்கும் இன்முகமும் இனியவை கூறலும் இன்றியமையா வேதுக்கள்.

---

## அ. அதி. நடுவு நிலைமை

நடுவுநிலைமையாவது பகை நொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்பநிற்கும் நிலை

யேயாம். ஒருவற்கு நடுவுநிலைமையுடைமை பூர்வமாயின அனு காமைக்கு ஓர் சிறந்த அரணும். அதனையுடையவன் தன்னையுந் தனதுடைமையையும் போலவே பிறனையும் பிறனுடைமையையும் நோக்கி ஒழுகுவனாகலின் அவ னைக் கொலை களவு வியபிசாரம் முதலிய பாவங்கள் சென்ற டையா. இயல்பாக மனத்தின்கண் நடுவுநிலைமையுடையவன் நடுவுநிலைமையாகாதனவற்றைச் சொல்லாமலும் செய்யாமலும் நன்னெறிக்கணொழுகுவன். அப்பெற்றியானை உலகங் கை கூப்பித்தொழும்.

ஒருபொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முண் மாறுபட்டு வழக்குரைத்தனரா யின், முன்னே தான் சமனாக நின்று பின் தன்கண்வைத்த பாரத்தை வரையறுக்குந் துலாம்போல, முன்னே தாம் இலக் கணங்களா னமையப்பெற்றுத் தொடைவிடைகளாற் கேட்ட வற்றை ஊழானுள்ளவாறுணர்ந்து சீர்தூக்கி அவ்வுள்ளவாற் றை மறையாது, பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத் தாருள் அவர் யாவராயிருப்பினும் அவர்க்கு அவ்வுள்ளவாற் றுக் கொப்பக் கூறுதலே அறிவா னமைந்தார்க்கு அழகாவது. தீவினையாற் கேடும் நல்வினையாற் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்துகிடந்தனவாகலின், அவை இப்பொழுது வருவனவாகக் கருதிக் கேடு வாராமையைக் குறித்தும் பெருக் கம் வருதலைக் குறித்தும் ஒருதலைக்க ணில்லாது, அவர் தாம் மனத்தின்கட் கோட்டமின்மையைத் திண்ணிதாகப்பெற்று, ஊழா னறுத்துச்சொல்லும் சொல்லின்கண்ணும் கோட்டமில ராவர்.

நடுவுநிலைமையுடையவன் தன்னுயிர் தனக்கு அருமை யாய் உளதாமாறுபோலவே பிறனுயிரும் அப்பிறனுக்கு அரு மையாய் உளதாமென்பதை நோக்கலாற் கொல்லாமை முதலிய தன்மைகளையும், தன்பொருள் தனக்கு அருமையாய் உளதா மாறுபோலவே பிறன்பொருளும் அப்பிறனுக்கு அருமையாய் உளதாமென்பதை நோக்கலாற் கள்ளாமை முதலிய தன்மை

களையும் உடையனாய் விளங்குவன். அவன் தன்னை ஒருவன் வருத்தின், அதனாற் றான் வருந்துமாறுபோலவே, தான் பிறனொருவனை வருத்தின் அதனால் அவனும் வருந்துவனென்பதைநோக்கலாற் பிறிதோருயிர்க்கும் அகிதமாயினவற்றைச்செய்யாமையையும், பிறனொருவன் தனக்கு நன்மையாயினவற்றைச் செய்யின் அதுதான் தனக்கு இன்பந்தருமாறு போலவே தான் பிறனொருவனுக்கு நன்மையாயினவற்றைச் செய்யின் அவனும் இன்புறுவனென்பதை நோக்கலாற் பிறவுயிர்கட்கு இதமாயினவற்றைச் செய்தலையும் மேற்கொண்டொழுகி நற்குண நற்செய்கைகளான் விளங்குவன்.

நடுவுநிலைமை யுடையவனது செல்வம் பிறர்செல்வம்போல் அழிவிலதாய், அறத்தொடுவருதலின் அவன் இறக்குந் துணையும் அவனுக்கும் அவன் இறந்தபின் வழியினுள்ளார்க்கும் வலியாதலையுடைத்து தக்கார்க்கு மக்கள் உளராதலும் அவர் நல்லராதலும் தகவிலார்க்கு அவர் இலராதலும் ஒரோவழியிருப்பினும் தீயராதலும் ஒருதலையாகலின், இவர் நடுவுநிலைமையுடையர் இவர் நடுவுநிலைமையிலரென அறிதற்கு அவரவருடைய நன்மக்களதுண்மையும் இன்மையுமே குறியாம். ஈன்றதாய்முதலிய தொடர்புடையார்பொருட்டேயெனினும், அல்லது கண்ணோட்டத்துக்குரிய அயலார் பொருட்டேயெனினும். அல்லது உயிர்போற்சிறந்த நட்டார்பொருட்டேயெனினும், அல்லது தனக்குப் பொருளிழவு வாராமைப்பொருட்டேயெனினும், அல்லது தான் இறந்துபடாமைப்பொருட்டேயெனினும், அல்லது இவைபோல்வன எவற்றின் பொருட்டேயெனினும் ஒருவன் நடுவுநிலைமையிற் றவறலாகாது.

செய்ந்நன்றிகோறல் உய்தியில் குற்றமேயெனினும் நடுவுநிலைமையை அவ்விடத்துஞ் சிதைய விடுதலாகாது. தனக்கு முன்னொருதவி செய்யாதிருக்கத் தான் ஒருவற்குச் செய்ததாகிய காரணமின்றிச் செய்ததூஉம், மறித்துதவமாட்டாமை உள்ளவிடத்துச் செய்ததாகிய பயனோக்காது செய்ததூஉம், ஒருவற்கு இறுதிவந்த வெல்லைக்கட் செய்ததாகிய காலத்தினாற்

செய்ததூஉம், இவர்க்கு இது செய்தால் இன்னது பயக்கு மென்று ஆராய்தலின்றிச் செய்ததாகிய பயன்றூக்காது செய் ததூஉமெனப் பலதிறத்தவாய நன்றிகளுள், யாவனொருவன் யாதொன்றைப் பிறனொருவனுக்குச் செய்தனனாயினும், அப் பிறன் அவன்செய்த நன்றியை மறவாமையும் தன்னாலியன்ற நன்றியைச் செய்தலுமே வேண்டற்பாலனவன்றி, அந்நன்றியை நினைந்து நடுவுநிலைமையிற் றவறிப் பாவத்துக் காளாதல் யாவ ராலும் வேண்டற்பாற்றன்று. நடுவுநிலைமையைச் சிதைய விடு தலான் உளதாய அந்நன்றி செயப்பெற்றானும் பின்னிருந் திகழ் தற்கும் பாவத்துக்குமே அஃதேதுவாகும். எத்துணைப்பெரிய நன்றி செய்தவரேயெனினும் தஞ்சொல்லால் அவர்க்கு இறுதி விளையுமென்ப துண்மையேயெனினும், அக்காரணம்பற்றியாயி னும் ஒருபாற் கோடாத மனத்தோடுகூடி அறங்கிடந்தவாறு சீர்தூக்கி உள்ளவாறுரைப்பவரே நடுவுநிலைமை யுடையரெனப் படுவர். நீரின்மேலெழுதப்பட்ட எழுத்துப்போல அப்பொ ழுதே அழிந்துவிடுந் தீயகுணமுடையார்க்குச் செய்த நன்றி போலாது, அடியினாலுண்ட வெறுநீரை முடியினான் மதுரமா கிய இளநீராக்கித் தருந் தென்னைக்கொப்பாய நல்லகுண முடை யார்க்குச் செய்த நன்றி கல்லின்மேலெழுதப்பட்ட எழுத்துப் போல அவர்மாட் டெப்பொழுதும் விளங்கித் தோன்றுமே யெனினும், தமக்கு முன் ஒருநன்றிசெய்தவர் பின் கொன்று லொத்த தீமைகள் பலவற்றைச் செய்தாராயினும் அவையெல் லாம் அவர்செய்த நன்மை யொன்றனையும் நினைக்க இல்லையா மேயெனினும், ஒருஞான்றும் விட்டுநீங்காத மிக்கவன்புடைய தந்தைதாயரும் குருவும் பெரியாரும் பாலரும் பாவையருமென் றிவர்போல்வாரைக் கொல்லினு முய்யலாம் செய்ந்நன்றிகோ றல் உய்தியில் குற்றமேயெனினும், நடுவுநிலைமையைச் சிதைய விடுதலான் வருங்கேடு அச்செய்ந்நன்றிகோறலான் வருங்கேட் டினும் மிகப்பெரிதாம்.

ஒருவன் நடுவுநிலைமையாகிய குணமொன்றைத் தன்க ணொஞ்ஞான்றுமெவ்விடத்துஞ் சிதையாமற் காக்க வல்லனாயின் அவனே கொலைமுதலிய குற்றங்களொன்றுந் தன்கணணுகாமற்

காக்கவும் வல்லுனவன். நடுவுநிலைமையிற் றவறுதவன் உலகத்துள்ளா ரனைவரும் தனக்குத் தந்தையும் தாயும் உறவினரும் நட்டாரும் அயலாரும் ஒரேசாதியாருமென் றிவர்போல்வாரே யென வேற்றுமையின்றி அவர் யாவரையும் ஒரேபெற்றியின ராகக் கருதுவன். இவர் தந்தையென்றும் இவர் தாயென்றும் இவர் உறவினரென்றும் இவர் நட்டாரென்றும் இவர் அயலா ரென்றும் இவர் ஒரேசாதியாரென்றும் இங்ஙனமே வேறு பிரித்து உரிமையி னேற்றத்தாழ்ச்சி நோக்கி நடுவுநிலைமையிற் றவறிப் பழிபாவங்கட் காளாயினோரே மீளா நிரயத்துக் காளா யினர். ஒருவன் தன்னெஞ்சம் நடுவுநிற்றலை யொழிந்து நடு வல்லவற்றைச் செய்ய நினைக்குமாயின் அந்நினைவை யான் கெடக் கடவேனென்று உணரும் உற்பாதமாக அறிக. தாமே தமக்குக் கேட்டை எய்துவித்துத் துயருற எவரும் விரும்பா ராகலின், அங்ஙனம் அறிதல் நடுவல்லவற்றைச் செய்யாமைக் கோருபாயமாம்.

---

## ௧௰. அதி. ஒழுக்கமுடைமை.

ஒழுக்கமுடைமையாவது ஒருவன் தீயவற்றைச் செய்து தீநெறிக்கட் செல்லாது, நல்லவற்றைச் செய்து நன்னெறிக்கட் சேறல். மக்கட்பிறப்பின ரொழுகலாற்றானே வருணாச்சிரம வேறுபாடுகளுளவாயின. மிருதிமுதலாய நூல்களுள் வருணாச் சிரம பேதங்கள் விதிக்கப்பட்டமைக்கு அதுவே காரணமாம். அம்மக்கடங் கன்ம வேறுபாட்டானே வருணங் குடிப்பிறப்பு முதலிய வேறுபாடுகளு முளவாயினவெனினு மமையும். என்னை? முற்பிறப்பிற் புண்ணிய மேலீட்டை யுடையார் உயர்ந்த வருணத்து உயர்ந்த குடிக்கண்ணும், அப்புண்ணியக் குறை வுடையார் தாழ்ந்த வருணத்துத் தாழ்ந்த குடிக்கண்ணும் பிறப்பாராகலான். உயர்ந்த வருணாச்சிரம வொழுகலாற்றிற் றவறிற் படுமிழுக்குத் தாழ்ந்த வருணாச்சிரம வொழுகலாற் றிற் றவறிற் படுமிழுக்கினும் மிகப்பெரிதாம். அந்தணர்முத

லிய வருணத்தார் வேதமோதன்முதலிய தமதொழுக்கத்திற் றவறலாகாது. பிரமசரியமுதலிய ஆச்சிரமத்துள்ளார் ஆசிரியனை வழிபட்டுக் கற்றன்முதலிய தமதொழுக்கத்திற் றவறலாகாது. பிறந்த வருணத்துள் இழிந்த குலத்தாராயினும் ஒழுக்கமுடையராக உயர்ந்த குலத்தராவ ராகலானும், உயர்ந்த வருணத்துப் பிறந்தாராயினும் ஒழுக்கத்திற்றவறத் தாழ்ந்த வருணத்தாராவராகலானும் அந்நூல் வழிப்படுங் குணத்தினும் இவ்வழிப்படுங் குற்றம் மிகப்பெரிதாம். ஒருவன் பிறவியாற் றீயொழுக்கமே யுடையராய நீசரு ளொருவனாய்ப் பிறந்துளனேயெனினும் நல்லொழுக்கத்தான் மேம்படுவனாயின் அவன் அந்தணர்முதலிய மேல்வருணத்தாரானுந் துதியைப்பெற்று மேற்கதியை எய்துவனாதலின் யாவர்க்கும் ஒழுக்கத்தின்மிக்க உறுதி பிறிதொன்றில்லை. நல்லொழுக்க நெறியிற் றவறினோர் வீழுமிடம் நரகமே. ஒருவனுக்கு நல்லொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்; தீயொழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினும் துன்பம் பயக்கும்.

மெய்மொழி மனங்களைத் தீநெறிக்கட் செல்லவிடாது அடக்கினவரே ஒழுக்கமுடையராவர். ஆமை ஐந்துறுப்பினையும் இடர் புகுதாமல் அடக்குமாறுபோல ஒருவன் ஐம்பொறிகளாற் புலன்களை நுகாாநின்றே ஒருபிறப்பின்கண் அவற்றைப் பாவம் புகுதாமல் அடக்கவல்லனாயின், ஒருமைக்கட் செய்த வினையின் பயன் எழுமையுந் தொடருமாகலின் அவ்வன்மை அவனுக்கு அவ்வெழு பிறப்பின்கண்ணும் அரணாதலையுடைத்து. உயர்குடிப் பிறப்பு முதலியவற்றாற் பெருமிதமெய்தினோர் எளிதி னொழுக்கத்திற் றவறுவர். பெருமிதமின்றி அடங்குதல் எல்லார்க்குமொப்ப நன்றேயெனினும், அப்பெருமிதத்தினைச் செய்யும் கல்வியுங் குடிப்பிறப்புமுடையார் அஃதின்றி அவைதம்மானே அடங்கியவழி அவ்வடக்கஞ் சிறந்து காட்டாதாகலின், அவ்வெல்லாருள்ளுஞ் செல்வமுடையார்க்கே அது வேறொரு செல்வமாஞ் சிறப்பினையுடைத்து.

ஒருவ னொழுக்கத்தைக் கெடுக்குங் குற்றங்கள் பலவுள. பொய் குறளை கடுஞ்சொல் முதலிய தீய சொற்களின் பொருள் களாற் பிறர்க்கு வருந் துன்பமொன்றாயினும் ஒருவன்பக்க லுண்டாவதாயின் அவனுக்குப் பிறவறங்களா லுண்டாய நன்மை தீதாய்விடும்; அஃதேயுமன்றி நாவைக் காவாதவன் சொற்குற்றத்தின்கட்பட் டதனாற் றுன்புறுவன். ஒருவனை யொருவன் தீயினாற் சுட்டபுண் மெய்க்கட் கிடப்பினும் மனத் தின்கண் அப்பொழுதே யாறும், அவ்வாறன்றி வெவ்வுரை யுடைய நாவினாற் சுட்டவடு அதன்கண்ணு மெஞ்ஞான்று மா ருது. காணுதவழியும் பிறரை யிகழ்ந்துரையாமை யாவர்க்குஞ் சிறந்த வொழுக்கம்.

மனத்தின்கட் காமம் வெகுளிமுதலிய குற்றங்க டோன் ருமற் காத்தலே ஒழுக்கமுடையராதற்குச் சிறந்த கருவி. காம மயக்கத்தாற் பிறனுக்குப் பொருளாந்தன்மை யுடையாளைக் காதலித்தொழுகுவார்க்கு அறமும் பொருளுமேயன்றி இன்பமு மில்லை. அறன்கடைநின்ற பெண்வழிச்செல்வாரும் வரைவின் மகளிரோடும் இழிகுல மகளிரோடும் கூடி இன்ப நுகர்வாரும்போல அறமும் பொருளு மிழத்தலே யன்றி, எய்துதலெளிதென்று பிறனில்லாளகண் நெறிகடந்து செல்லும் பேதையார் அச்சத்தாற் றாங்கருதிய இன்பத்தையு மிழந்து பழியையும் பகையையு மெய்துகின்றனராகலின் அப் பிறன் மனையாளை உட்கொள்ளாத ஆண்டகைமையே நிரம்பிய வொழுக்கமாம்.

கடவுட்பத்தியும் உயிர்கண்மாட் டருளுடைமையுமே நல் லொழுக்கத்துக் கேதுக்கள். கடவுளு மான்மாவும் கன்மமுஞ் சுவர்க்க நரகங்களும் மறுபிறப்பும் முத்தியுமுளவென்னு மிவ் வுண்மையை எஞ்ஞான்றும் மறவாது, துன்ப நுகர்தற்குரிய நரகத்தையும் இழிந்த பிறவிகளையும் எய்தாமைப்பொருட்டும், இன்ப நுகர்தற்குரிய துறக்கத்தையும் மேலான மானுடப்பிற வியையும் இறுதிக்க ணந்தமிலின்பத் தழிவில்வீட்டையும் எய் துதற்பொருட்டும், முயல்வாரே நல்லொழுக்க முடையராவர்.

நல்லொழுக்க நெறிக்கணிற்பார் ஒருயிர்க்குந் தீங்குசெய்ய நினைத்தலுமாகாது. தமக்குத் தீமைசெய்தவர்க்கும், அவர் செய்த தீமையை அப்பொழுதே மறத்தலோ டமையாது இயன்றமட்டும் நன்மையைச் செய்தல்வேண்டும். நடுவுநிலைமை பொறையுடைமை அழுக்காறாமை புறங்கூறாமை கள்ளாமை வெகுளாமை கள்ளுண்ணாமை சூதாடாமை பகையாமை முதலியவற்றை ஒழுக்க நெறியாகக்கொண்டு அன்பும் அருளுங் கடவுட்பத்தியு முடையராயொழுகுதல் வேண்டும். தெய்வபக்தி யில்லாதவர் கொலைஞர் கள்வர் தூர்த்தர் கள்ளுண்போர் பொய்யர் சூதாடுவோர் புறங்கூறுவோர் முதலாயினாரோடு கூடுதலாகாது. தந்தை தாய் பாட்டன் பாட்டி வித்தியாகுரு தீட்சாகுரு கடவுட் பத்தியிற்சிறந்த பெரியோர் முதலாயினோரை விரும்பலும் மதித்து வணங்கலு முடையராய் அவருடனே கூடி யொழுகல் வேண்டும்.

உலகத்தவ ரியல்போ டொட்டவொழுகிப் பழி பாவங்கட் கஞ்சி உயிர்கட் கிதமாயினவற்றைச் செய்து மனத்தையும் பொறிகளையும் முழுமுதற்கடவுளை வழிபடுதலாகிய சைவசிவ நெறியிற் செலுத்தி அவ்விறைவ னருளைப்பெற யாவரும் முயலுதல் வேண்டும். ஒழுக்கமுடையார் தாம் பிறரையும் நல்லொழுக்க நெறிக்கட் செலுத்த முயல்பவரா யிருத்தல் வேண்டும் அறியவேண்டுவனவற்றை அறிந்தடங்கி அஞ்சவேண்டுவனவற்றுக் கஞ்சிச் செய்யவேண்டுவனவற்றை உலகத்தா ருவப்பச்செய்து இறைவனருளைப்பெற்ற அடியார் கூட்டத்தை விரும்பிச் சேர்ந்து அவாவையறுத்து அவ்விறைவ னடியைக் கூடுதலே மக்கட்பிறப்பினராய நமக்குரிய ஒழுக்கம்.

---

## ௧௦. அதி. பொறையுடைமை.

பொறையுடைமையாவது காரணம் பற்றியாதல் மடமை யானாதல் ஒருவன் தமக்கு மிகைசெய்தவழித் தாமும் அதனை அவன்கட் செய்யாமை. பிறர் மிகைசெய்தவழி யாவர்க்கும் அவரவின் வினைவாய வெகுளி வெளிப்பட்டுத் தோன்றும். அதனைத் தோன்றாவண்ணம் அடக்கினவரே பொறையுடையராவர்.

அன்பு மருளு முடையார், தமக்கு மிகையாயினவற்றை யாவர் செய்தாரேயெனினும், அவர்மாட்டுத் தமக்கு இயல்பாயுள்ள அவ்வன்பும் அருளும் அவரை யொறுத்தற்குத் தடையாகு மாகலிற் பொறையுடையராவர். பிறர் தமக்கு மிகை செய்தவழி அறிவுடையராயினர், அவரவர் செய்த வினைப் பயனை அவரவரே தப்பாது நுகர்தல் வேண்டுமென்னும் இவ் வுண்மையை அறிந்துளராகலின், தாமும் அவர்க்கு மிகையாயினவற்றைச் செய்ய நினையார்; ஒருவற்குப் பேரறமெனப் படுவது பொறையுடைமையே என்பதை மறவார்.

பிறனொருவனுக்குத் தாம் முன்னர் அறிவின்மையாற் செய்துவைத்த காரணம்பற்றியாதல் அல்லது தனதறிவின்மையானாதல் அப்பிறன் தமக்குத் தீமையாயினவற்றைச் சொல்லிய வழியுஞ் செய்தவழியும் தாமும் அவற்றை அவன்கட் செய்யாது, தன்னையகழ்தல் முதலியவற்றைச் செய்வாரையும் வீழாமற் றாங்கும் நிலம்போலப் பொறுத்தலேயன்றி அவற்றை அப்பொழுதே மறத்தலும் தம்மாலியன்ற நன்மையைச் செய்தலும் வேண்டும். இல்வாழ்வார்க்குக் கேடு வாராமற் காத்தலிற் றலையாய வறம் அதுவேயாம். மரணபரியந்தம் தனக்குத் தீமையே செய்தவனுஞ் செய்பவனுமாய்த் தோன்றிய துரியோதனனைத் தருமன் அவன் செய்த மிகையாயினவற்றை யெல்லாம் பொறுத்தலோடமையாது வானோர் சிறையினின்றும் மீட்டனனேயாக, ஒருவன் சால்புடைமை ஒருகாற் றீமை செய்தாரையும்

பொறுத்த விலதேயாயின் அஃதென்ன பயனுமுடைத்து. தமக்கு இன்னாதவற்றைச் செய்தார்க்கும் இனியவற்றைச் செய்யும் விருப்பத்தை மேற்கொண்டு யாவர்க்கும் எப்பொழுதேயெனினும் மிகைசெய்யாமையை விரதமாக வுடையவரே சால்புடைய ரெனப்படுவர்.

பொருண்மிக வில்லான் கொடையே கொடை, இளையானடக்கமே யடக்கம், அவைபோல ஒறுக்கவல்ல மதுகையுடையான் பொறையே பொறை. தன்னின் வலியவனுந் தன்னோடொத்தவனுஞ் செய்த மிகையாயினவற்றைப் பொறுத்தவரைக்காட்டினும் தன்னின் மெலியவன் செய்த மிகையாயினவற்றைப் பொறுத்தவரே சால்புடையாராவர். என்னை? வலியவற்கும் ஒத்தவற்கும் மீட்டுத் தாமும் மிகைசெய்யுங்கால் உளவாகும் அச்சமுந் துன்பமுமென் றிவைமுதலாயின மெலியவற்குச் செய்யுங்கால் இலவாய்ச் செய்தற் கருமையாகா தாகலான். வலியார் செய்த மிகையைப் பொறாதவன் அவரானிறந்துபடுவன்; ஒத்தார் செய்த மிகையைப் பொறாதவன் அவரான் வலிதொலைந் தழிவெய்துவன்; மெலியார் செய்த மிகையைப் பொறாதவன் மீளா நரகத்துக் காளாவன். ஆகவே தீமை புகுதாமற் காத்தலிற் பொறைபோன் றுயிர்க்குத் துணையாவது பிறிதொன்றில்லை.

நல்லொழுக்க நெறிக்கட் செல்லாத பேதையார் நன்மைய வல்லாதவற்றைக் கூறினராயினுஞ் செய்தனராயினும் அவரதறியாமையே அச்செயல்கட் கேதுவாமென் றெண்ணி அறிவுடையாராயினோர் அவற்றைப் பொறுத்தல் வேண்டும். நாய் தன் வாயாற் றம்மைக் கடித்ததேயாயின் மீட்டுத் தாமும் அதனைத் தம்வாயாற் கடிப்பவருலகத்தில்லை; அதுபோலக் கீழோர் தமக்கு மிகையாயினவற்றைச் செய்தனரேயாயின் மேலோர் தாமு மவற்றை யவர்க்குச் செய்யார். அறிவினிற் பெரியராயினோர் அறிந்துவைத்துப் பிறர்க்கு மிகையாயினவற்றைச் செய்யார்; அஃதேயுமன்றி அறிவினிற் சிறியராயினோர் அறிந்துவைத்துஞ் செய்த மிகையையும் பொறுப்பர். யாவர்க்கும் வன்

மையுள்வைத்து வன்மையாவது அறிவின்மையான் மிகைசெய்தாரைப் பொறுத்தலேயாம். மனச்செருக்காற் றங்கட் டீயவற்றைச் செய்தாரைத், தாமு மவர்கட் டீயவற்றைச் செய்து தோலாது பொறையான் வென்றவரே எல்லாரினும் பெரியர். பிறர் தமக்குத் தீங்குசெய்தவழிப் பொருது அவரை யொறுத்தாரை, அவர் தாமும் அத்தீங்கு செய்தவரோ டொத்தலின், அறிவுடையார் ஒருபொருளாக மனத்துக் கொள்ளார்; அவரைப் பொறுத்தவரையோவெனின், அவர் சால்புடைமைபற்றி இடைவிடாது நினைப்பாராகலின் அப்பொறையுடையாராயினார்க்கு உலகமழியுமளவும் புகழுண்டாம்; அவ்வொறுத்தார்க் குண்டாவது கருதியது முடித்தேமெனத் தருக்கியிருக்கும் அவ்வொரு நாளை யின்பமே.

விரதங்களான் ஊணைத் தவிர்ந்து உற்ற நோயைப் பொறுக்குந் துறந்தாரினும், இருவகைப் பற்றோடு நின்றே அறிவிலாதார் செய்த மிகையாயினவற்றைப் பொறுக்கும் இல்வாழ்வாரே பெரியர். மறைக்கப்படவேண்டிய உடலுறுப்புக்களையெல்லாம் ஆடையான் மறைக்குமாறுபோலப் பொறுக்கப்படவேண்டிய பிறர் செய்த மிகையாயினவற்றை யெல்லாம் பொறையான் மறைக்க, அம்மிகைசெய்த பிறர் தாமும் நாணிப் பின்னர் ஒருஞான்றும் மிகையாயின செய்யாதொழிவர்; அஃதேயுமன்றித் தமக்குப் பிறர் செய்த மிகையையும் பொறுப்பர். மறந்தும் பிறர்க்கு மிகைசெய்யாராய் அவர் செய்த மிகையைப் பொறுத்தலேயன்றி அப்பிறர் தாந் தமக்குச் செய்த மிகையாயினவற்றான் எரிவாய் நிரயத்துக் காளாவரேயென் றிரங்குவதூஉஞ் சான்றோர் கடன்

மாந்தர் பொறையுடைமையைத் தங்கணெஞ்ஞான்றும் நீங்காமற் போற்றிப் பாதுகாப்பதையே விரதமாகக்கொண் டொழுகவல்லராயின், அஃது உலகத்துப் பற்பல தீச்செயனிகழ்ச்சிகளுளவாகாமைக் கேதுவாகும். பொறையுடைமையைத் தமக்கோர் பூணாரமாகப் புனைந்தொழுகுவாரை உலகங் கைகூப்பித் தொழும்.

## கக அதி. அழுக்காறுமை

அழுக்காறுமையாவது பகைவர் நொதுமலர் நட்டாரென்னும் முத்திறத்தார்மாட்டும் ஆக்கங்கண்டவழிப் பொறுக்கமாட்டாத தன்மை. அஃது உயிர்கட் கியல்பினுள்ள விழைவு வெறுப்பென்னுங் குற்றங்களின் விளைவுகளு ளொன்று. நல்லறிவாளர் தம்மைப் பல தீமைகட்கு மாளாக்கிவிடுமென் றஞ்சி அதனைத் தோன்றும்பொழுதே அறிவாகிய கருவியினாற் களைந்துவிடுவர். அழுக்காறு பொறைக்கு மறுதலையாயுள்ள பொறாமையெனப் பெயர்பெற்றுளதேயாயினும், அஃதொருவற்குப் பிறர் மிகையாயின செய்தவழி யுளதாகும் அப்பொறாமை போலாது யாவர்மாட்டுங் கல்வி செல்வம் முதலியன வுளவாயிருப்பக் கண்டவழி யுளதாவது. வஞ்சனை பொருளாசை முதலிய மனக்குற்றங்கட்கெல்லா மஃதே தறுவா யுள்ளது.

அழுக்கா றுடையான் மனத்தின்க ணென்ஞான்றுந் துன்பமே குடிபுகுந்திருக்கும்; அவனுக்கெத்துணைப் பெருங் கல்வி செல்வம் முதலியன வுளவேயெனினும் அவற்றுளொன்றானு மின்ப மின்றாம்; அவன்முகத்திற் சேட்டை குடிகொண்டிருந்து விளங்குவள்; மூங்கில்வனத்தின்கட்டீ தானே தோன்றி வளர்ந் தெரியுமாறுபோல, அவன் மனத்தின்க ணப்பொறாமையென்னுந்தீ தானே தோன்றிச் சுவாலித்தெரியும்; துயரப்படுத்துவார் பிறரொருவருமின்றி அவன் தானே தன்னைத் துயரப் படுத்துகின்றான். அந்தோ! பேதையாயினான் அருமருந்தன்ன மனத்தை அழுக்காற்றினால் அழுக்காக்கிவிடுகின்றான்; இடையீடுபடாமல் அழுக்கறுத்தலே அவன் சிந்தனையாம்; அம்மனத் துக் கின்பமு மமைவு மொருஞான்று மில்லாப்; அங்கிக்கட் பட்ட பதர் எரியுமாறுபோன் றழுக்காற்றின்கட்பட்ட அம்மன மெரிகின்றதே. அங்ஙன மெரியுங்கால் அது படுந்துயரத்தி னளவு சொல்லுந்தரத்ததன்று. அத்துணைப்பெருந் துயரத்தை அஃதெய்தாமற் றடுக்க வல்லுநர் பிறரொருவ ருளராமோவெனின், அம்மனந்தானே அதனைச் செய்ய வல்லதன்றி மற்றெத்

துணைப் பெரிய வல்லமை யுடையரேயெனினும் பிறர்க்கு அஃ தரியதேயாம்.

தன்மனத்தை அழுக்காற்றின்கட்படச்செய்து தானே தன்னைத் துயரப்படுத்துகின்றதை உய்த்துணர வல்லனல்லனுய், அம்மனத்தின்கணின்று மதனை அறவேகளைந் தின்புற்றிருக்குமா வழியையும் நாடானுய், அவ்வழுக்காறென்னுங் கொடிய பாவி யைத் தனக்கு மிகநல்லனென்று கருதி அத்தியந்த நண்பனுகக் கொண்டு சகிக்கலாற்றுத் துயர்க்கடலுளமிழ்ந்திய அப்பேதை பின்னரு மவ்வளவோ டமையாது அவ்வழுக்காற்றின் பின்னவ ராகிய வஞ்சனை பொருளாசை முதலாயினுரைக் கூவி,“நண்பரே! வம்மின், யான் உங்களைப் புறந்தரற்பால னுயினேன், நும்முன் னவனுகிய அழுக்காறே எனதத்தியந்த நண்பனுயினுன், யான் படும்பாடு சொல்லி முடியுமோ? என்மனம் புதியதோர் செய லிகழ்ச்சியாற் சகிக்கலாற்றுத் துயருறுகின்றது, என்மாட்டு நெருநற்றுங் கூழிரந்தானெருவன் இற்றைஞான்று மிக்க செல் வனுயினுன், பிற்றைஞான்று யானு மவன்பாற்சென் றிரப்ப தாமோ? நெருநற்றுப்போன்று அவன் இன்று மிரத்தலை வேண் டினேன், அஃதேயுமன்றி யான் அவனைக் காட்டினும் மேற் பட்ட செல்வனுதலையும் வேண்டினேன். நீவிர் நுமக்கறிந்த வாறு அவன்மாட்டுப்புக்கு அவன் எய்திநின்ற செல்வம் “செல்வ” னென்று சொல்லிச் செல்லச் செய்ம்மின், அஃதேயு மன்றி அவனிடத்தேனும் அல்லதியாண்டேனும் யாவர்மாட் டேனும் எவ்வாற்றுனேனும் புக்குப் பொருளை வாரிவந் திறைத்து அவனைக்காட்டினு மென்னை உயரச் செய்ம்மின். என்னை? தாழ்த்துகின்றீர். விரைந்துவந்து துணைபுரிமின், என் றுயர் களைமி” னென மனங்கொதித்து அஞருழந்து உற்றதுணை வேண்டியிரப்ப, அற்றம்பார்த்து அகமகிழ்ந்து அன்னுருழை மெல்லநுழையும் பாதகருட் கொடியனுகிய வஞ்சனை தன் தம்பி யாகிய பொருளாசையை நோக்கி, “என்னை? பாவம்! நண்பற் குக் கவற்சி மிகப்பெரிதாயிற்று, நாம் அதனைத் தீர்க்கற்பால மல்ல மாயினக்கால் நம்மை யுலக மென்னென்ன சொல்லி நகை யாடாநிற்கும்? இதுகாறு மீட்டிய புகழையெல்லாம் அவமாய்ப்

பாழாக்கிவிட்டவ ராவேமே, அன்றியும் நம்மோ டுடன்பிறந்த முன்னவற்கு நம்மா லெய்தற்பாலனவாய பயன்கள் யாவுமில வாமே, எத்திறத்தானும் புக்கு நம்முன்னவன் தோழற்கு உற் றுழியுதவி புரிதும், விரைந்து வருதி, நண்பன் பகைவனை நான் எவ்வாற்றானுங் கெடுக்க முயல்வதனோ டமையாது நீயும் புக் குழிப்புக்குத் துணை புரிவ" லெனப், பொருளாசை "பிறர் பொருள் கவரத் துணைபுரிவாரி னிற்கொப்பாரு மிக்காருமில்லை, நின்றுணை பெற்றார்க்குப் பிறர்பொருள் வழிவினவித் தானே வந்துசேரும், அஃதங்ஙனமாக நீ என்னுடன் பிறந்தது மற் றென் செயற்கு? நின்னைத்துணைகொண்டு யான் தப்பாமலெப் பாலார் பொருளும் இப்பாரின் மாரிபோல் வாரிவந்திறைத்து நண்ப னகட்டின்புறத் தண்ட முகட்டளவுங் குவிப்ப" லென, அவ்விருவரும் விரைந்து புகுந்து அவன் மனத்திற் குடிகொண் டிருந்து செயக்கிடந்தன யாவோ அவற்றையெல்லாஞ் செய்து துணைபுரிவாராயினர். யார் என்செய்துமென்! அவன் அல்லும் பகலும் ஊணு முறக்கமுமின்றி யுலைந்து மீட்டும் மீட்டும் பழி பாவங்களைச் செய்து தீவினைக்கன்மத்தை யீட்டியதுமேயன்றி முன்னிருந்த பொருளையுமிழந்து இடையீடின்றி யழுக்கறுத் தாலா லீற்றிற் பித்தனுயதுமே பெறுபேறாயிற்று.

யாவருந் தத்தம் மனத்தின்கட் பொறாமையென்னுங் குற்ற மில்லாத அறிவோடு கூடிய தன்மையையுடைய ஒழுக்க நெறி யைக்கைக்கொள்ளுதலில் விழிப்பாயிருத்தல்வேண்டும். மறுமை க்கும் இம்மைக்கும் அறமுஞ் செல்வமுமாகிய உறுப்புக்களைத் தமக்கு வேண்டாதாரென்று சொல்லப்படுவாரே பிறர் செல்வங் கண்டவழி அதற்குவவாது அழுக்காற்றைச் செய்வார். பிறராக் கங் கண்டவழிப் பொறாமையுடையானைத் திருமகள் தானும் பொறாது தன்றவ்வைக்குக் காட்டி நீங்கும். பொறாமைகொண்ட மனத்தினையுடையார் யாவர்க்கும் அவராக்க மழிந்துபட் டில்லாமற்போதலை யாண்டுங் காண்டலின், யாவரும் தமது மனத்தின்கட் பொறாமை எப்பொழுது குடிபுகத் தொடங் கிற்றோ அப்பொழுதே தமதாக்கமு மழிந்துபடத் தொடங்கிற் றென்பதை மறவற்க.

அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத கொடிய பாவி தன்னையுடையானை இம்மைக்கட் செல்வத்தைக்கெடுப்பதனோடமையாது மறுமைக்கண் நரகத்துட் செலுத்திவிடும். ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதன்கண் அழுக்காற்றைச் செய்வாரும் அவரது சுற்றமும் உடுக்கப்படுவதூஉம் உண்ணப்படுவதூஉமின்றிக் கெடுமேயென்றால் அதன் கொடுமைக்கும் அதனால் எய்துங் கேட்டிக்கும் எல்லையில்லை. பொறாமைபொருந்திய மனத்தை யுடையவன தாக்கமும் அஃதில்லாத மனத்தை யுடையவனது கேடும் உளவாயின் அவைக்கேதுவாய பழவினைகள் யாவென்று அறிவுடையாரா னாராயப்படு மாகலின் ஊழானன்றி அவை அங்ஙனமாகாவென்ப துண்மையேயாம்.

ஒருவன் பிறருடைமை கண்டவழிப் பொறாமையான் அதனைத் தான் வெளவக் கருதின், அவன்மாட்டு நடுவு நிலைமை அடக்கம் முதலியன இல்லையாகப் பழிபாவங்கட் கேதுவாய செயல்களைச் செய்து விரையக்கெடுவன். யான் வறியனென்று கருதி அது தீர்தற்பொருட்டே யெனினும் ஒருவன் பிறன் பொருளை வெஃகின் அவ்வெஃகுதல், இல்லற நெறியான் அறிவு முதிர்ந்துழியல்லது துறக்கப்படாமையின் அருளாகிய அறத்தை விரும்பி அதற்கு வழியாகிய அவ்வில்லறத்தின்கணின்ற அவனை அவ்விரண்டறங்களையுஞ் சேர விழுக்கச் செய்வதனோடமையாது அவன் குடியையுங் கெடுத்துவிடும்; அவன் ஐம்புலன்களையும் பாவநெறிக்கட் செல்லவிடாது அடக்க வல்லனாகான். அஃதத்தன்மைத்தேயாயின் மற்றழுக்காற்றிற் பிறன்பொருளை வெஃகுவான் கேட்டுக் கெல்லையில்லை யென்ப தறிக.

அழுக்காறுடையார் அவ்வழுக்காறேதுவாகச் சுவநயங் கருதி வஞ்சனையுடையாராவர். வஞ்சனையுடையாரே உலகத்திற் பலபல கேட்டிக்கெல்லாங் காரணராகின்றனர். வஞ்சனையுடையார் மறைந்த வொழுக்கம் அறிவுடையாரையும் ஐயுறச்செய்யாமையாற் பலரும் வருந்துதற் கேதுவாகிய கேடுகள் பல முளவாகின்றன. நாகபாம்பு தான் நஞ்சுடையதாயிருத்தலை அறிந்து பலருங்காணப் புறத்துப் போதராது மறைந்து கிடக்கு

மாறுபோல, மனத்தின்கண் வஞ்சனையுடையார் அவ்வுடைமையைப் பிறர் அறியாவண்ணம் மறைந்தவொழுக்கமுடையராவர்; தன்னிடத்து நஞ்சில்லாத நீர்ப்பாம்பு தான் அஞ்சாமற் புறத்தே கிடக்குமாறுபோல, நெஞ்சிலே வஞ்சனையில்லாதார் அங்ஙனம் மறைந்த வொழுக்கமுடைய ரல்லராவர். எறிதுமென்று வாளைக் கையிலேந்தி வரெதிர்த்த பகைவர்க்குத் தப்பி உய்யினு முய்யலாம், வஞ்சனையைத் துணைக்கொண்ட அழுக்காறுடையார்க்குத் தப்பி உய்தல் அரிதினுமரிது.

அழுக்கா றேதுவாகத் தக்கார்மாட்டுந் தகாதார்மாட்டும் இழிந்தனவும் கடியனவுமாகிய செயல்களைக் கற்றறிவில்லாதாரே யன்றி அஃதுடையா ரெனப்படுவாரும் செய்தொழுகாநின்றனர். அவர் தாந் தம்மை மற்றெவரைக்காட்டினுங் கற்றறிந்தவரென நன்குமதித்துக் கற்றறிந்த பிறரை அவமதித்து அவரறிந் துரைத்தவற்றில் வழுவில்லையாயினும் வழூஉட்பட உரைத்தனரென நூதனமதம் நாட்டித் தம்வெள்ளறிவைப் பிறர்க்குப் புலப்படுத்துவாராயும், வழுவிருந்துளதேயாயினும் அதனை இகழ்ச்சிமுகத்தா னெடுத்துக் காட்டுவாராயும், தாமறிந்தவற்றைப் பிறர்க்குக் கற்பிக்கும்போது மெய்ப்பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் கூறுவாராயும், மற்றுமிவைபோல்வன பலவாற்றானும் அழுக்கறுப்பவராவர். நுண்ணிதாய் எல்லா நூல்களினுஞ் சென்ற அவர்தம் அறிவு அழுக்கறுத்தலாற் பழுதடைவதாயிற்று. நல்லறிவாளர் அவரைக் கற்றவரென்று கருதார்.

ஆகவே யாவரும் மனக்குற்றமாகிய அழுக்காற்றைச் செய்யாமையைத் தமக்கோதிய ஒழுக்க நெறியாகக்கொண்டு அதனை உயிரினு மோம்புதல் வேண்டும்.

---

## ௧௨. அதி. புறங்கூறாமை

புறங்கூறாமையாவது காணாதவழிப் பிறரை இகழ்ந்துரையாமை. பிறராக்கங்கண் டழுக்காற்றைச் செய்தலாகிய மனக்குற்ற மடியாகக் காணாதவழி அவரை இகழ்ந்துரைத்தலாகிய புறங்கூறலென்னும் மொழிக்குற்ற முண்டாம். அறிவுடையாரொருவன் குணத்தை அவனுக்கெதிரே நின்று கூறுதல் அறிவானமைந்தார்க்கு அரியதேயாக, அறிவிலாரொருவன் குற்றத்தைப் புறத்துநின்று கூறுதல் அவ்வறிவா னமைந்தார்க்கு எத்தன்மைத்தாகும்? பேதையாரே புறங்கூறலைத்தமக்கோர் தொழிலாகக்கொண்டு தம்மைப்போல்வாரோடு கூடி மகிழ்வர். வண்டுகள் நறியமலர்த்தேனை விரும்புமாறுபோலப் பெரியாராயினார் ஒருவர் குற்றங்களை எண்ணாராய் அவர்தங் குணங்களையே விரும்பிப் பாராட்டுவர்; காக்கைகள் வேம்பின் கனியை விரும்புமாறுபோலச் சிறியாராயினார் அவர்தங் குணங்களை யொழித்துக் குற்றங்களையே விரும்பிப் புறங்கூறுவர்.

புறங்கூறுவார் ஒருவர்மாட்டில்லாத குற்றங்களையும் உள்ளனவாக நாட்டத் தலைப்படுவர். பின்னர்ப் படிமுறையே எல்லார்மாட்டுங் குற்றமேற்றிப் புறங்கூறலை தமது தொழிலாகவும் பொழுதுபோக்காகவும் பிதற்றித்திரிந்து வாழ்நாள் முழுவதையும் வீணிற் கழிப்பர்.

கேளிரு நட்டாருமென் றிவர்முதலாயினாரோடு முன்னின்று மனமுருக உரையாடி அவர் காணாதவழி நகையாடலைப் பயனாகக்கொண்டு இழித்துரைத்து மறைந்தொழுகும் பேதை, மணலின்கண் மறைந்து கிடக்குந் தவளை தன்வாயொலியாற் காக்கை முதலிய பிராணிகளுக்கிரையாகிக் கெடுமாறுபோலப் புறங்கூறலாகிய தன்கூற்றானே தன்னைத் துயரத்துக்காளாக்கிக் கெடுவன்.

யாதொரு பகையு மில்லையாகவும் பொறாமையே காரணமாகப் புறங்கூறி நகுவார்க்கு உறவினர் பிறர், அயலார் பகை

யாவர், நட்டாரிலராவர். அவர்தன்மையை அறிந்தார் பலரும் அவர்தம் வசையை அவர்க்கெதிரே நின்று கூறுவர். அயலார் முதலாயினாரோடு கூடிமகிழுமாறு இனிய சொற்களைச் சொல்லி நட்பாடலை அறியாதார் இங்ஙனமே அவர்தாம் தம்மைவிட்டு நீங்குமாற்றாற் புறங்கூறி அவரைப் பிரியப்பண்ணுவர்; அக் கொடியவர்க்கு யாவரும் பகையாவர். "யாம் அவரைப் புறங் கூறினே" மெனச் சிறிதுபொழுது தோற்றும் பொய்யின்பமே யன்றி இம்மையினும் மறுமையினும் அவர்க் கின்பமே யில்லை.

ஒருவன் அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங் களைச் செய்யுமாயினும் பிறனைப் புறங்கூறானென்று உலகத் தாரார் சொல்லப்படுதல் நன்று. என்னை? புறங்கூறாமையாகிய குணமொன்றுமே அவன் அக்குற்றங்களான் இழிக்கப்படாது மேற்பட்டுத் தோன்றுமாகலான். ஒருவனைக் காணாதவழி, எல் லாரானும் நன்குமதிக்கப்படுதலென்னும் அவன்றனொளியைக் கோறற்கு இகழ்ந்துரையான் இழித்துச்சொல்லிக் கண்டவழி அவனோடு பொய்த்து நகுதல், அறனென்பதொன் றில்லையென் அழித்துச்சொல்லி அதன்மேற் பாவங்களைச் செய்தலினுந் தீமையுடைத்து. பிறனொருவன் பழியை அவன் புறத்துக் கூறுமவன், புறங்கூறியவாறு கேட்ட அப்பிறன் தன்பழி பல வற்றுள்ளுந் தான் இறந்துபட்டு உளையுந் திறத்தனவாகிய பழி களை நாடித் தன்னெதிரேநின்று கண்ணோட்டமறக் கூறும் போது, தன்குற்றம் நோக்கித் தான் அக்கூற்றா னெய்திய வருத்தத்தைச் சகித்திருத்தற்கு அல்லது பகைத்தற்கும் பழி பாவங்களைச் செய்தற்கும் ஆளாவே னென்பதை எண்ணக் கடவன்.

தம்மோடு செறிந்தாரது குற்றத்தையும் அவர்புறத்துத்தூ ற்றும் இயல்பினையுடையார், அதனிற் கொடியது பிறிதொன்று காணாமையின் ஏனைச்செறியாதார்மாட்டும் பகைவர்மாட்டும்செய் யக் கிடந்தது யாதுகொல்லோ? பிறர் நீங்கினவளவு பார்த்து அவர் பழித்துரையை உரைப்பான் றுடற்பாரத்தை, எல்லாவற் றையும் பொறுத்தலியல்பாயினும் இதுபொறுத்தற் கரிதாகவும்

இக்கொடியது பொறுத்தலை தனக்கறமாவதெனக் கருதிப் போலும் நிலம் பொறுக்கின்றது. ஏதிலாரைப் புறங்கூறுவார் அதற்கு அவர் குற்றங் காணுமாறுபோலப் புறங்கூறலாகிய தங் குற்றத்தையுங் காண வல்லராயின் அவர் நிலைபேறுடைய வுயிர்க்கு வருவதொரு துன்பமுண்டோ? அது குற்றமென்றும் அதனைச் செய்தலாற் றமக்குத் துன்பம் எய்துமென்றும் உய்த் துணராமையானன்றே அவர் அதனைச் செய்து எல்லாரையும் பகையாக்கித் துன்ப மெய்துவாராயினர்.

வீடுபேறும் மேற்கதிச்செலவும் முதலாய அறிதற்கரிய பயன்களை ஆராய்ந்தறியவல்ல நல்லறிவினையுடையார் முன்பே, இனிமை மெய்ம்மை முதலிய குணங்களை யில்லாதனவும் நீதி யோடுபடாதனவும் பயனில்லாதனவுமாகிய சொற்களைப் பலகா லுஞ் சொல்லிப் பாராட்டுவான் "இவன் மக்களுட் பத" ரென்று அவ்வறிவுடையோரால் கூறப்பட்டு எல்லாரானு மிகழப்படு வனே யென்றாற் பிறர்க்குந் தமக்குந் தீங்கு பயத்தற் கேது வாகும் பிறர் பழிமொழிகளைப் புறத்துக் கூறுவானெய்து மிகழ்ச்சிக் களவுளதாமோ?

புறங்கூறல் போலவே பயனில சொல்லல், பொய்சொல்லல், கோட்சொல்லல், கடுஞ்சொற்கூறல், பிறரை வைதுரைத்தல், இறைவனையும் அவனருளிய நூலையும் நிந்தித்தல், ஐம்பெருங் குரவரும் அருந்தவரும் முன்னோரும் அந்தணரும் உயர்ந்தோ ருமாகிய பெரியாரை நிந்தித்தல், தன்னை வியந்து தருக்கிக் கூறல், மனத்தொன்றும் புறத்தொன்றுமாக மறைத்துக் கூறன் முதலியனவுஞ் சொற்குற்றங்களாம். கேட்டார்க்குக் கன்ன கடூரமாயினவாய்த் தமக்குக் கேட்டைத்தரும் இப்பெற்றியவாய சொற்களை யாவரும் மறந்துங் கூறலாகாது.

## காடு. அதி. தீவினையச்சம்.

தீவினையச்சமாவது பாவங்களாயின செய்தற்கஞ்சி அவற்றைச் செய்யாமை. அழுக்காறு முதலிய மனக்குற்றங்களும் புறங்கூறன் முதலிய மொழிக்குற்றங்களு மேதுவாக மெய்யின்கணிகழும் மிகக்கொடூரமான குற்றங்களுளவாம். தனக்கொரு பயனோக்கியாதல் செற்றம்பற்றியாதல் சோர்வானுதல் ஒருவன் எவ்வுயிர்க்குந் தீவினை செய்யவொண்ணுது.

அறிவுடையாராயினுர் தாமோர் தீவினையை முன்பு செய்யாதிருக்கப் பிறனொருவன் ஓர்பயன் கருதித்தமக்குத்தீவினைசெய்தவிடத்தும் செற்றங்கொண்டு மீட்டுத்தாமும் தீவினைசெய்யாது அவன் நாணுமாறு நன்னயங்களைச் செய்தலானுறுத்து அவன்செய்த தீவினைகளையும் தாம்செய்த நன்னயங்களையும் உடனே மறந்துவிடுவர். பிறர்செய்யு மின்னுதன தன்னுயிர்க்கின்னுவாந்தன்மையை அனுபவித்தறிகின்றவன் தான் செய்யு மின்னுதன பிறர்க்கு மவ்வாறே இன்னுதனவாமென்பதனை அனுமானத்தானும், அப்பிறர்க்குச்செய்த இன்னுதன பின்பு வந்து தன்னையும் வருத்துமென்பதனை அவ்வனுமானத்தானேயன்றி ஆகமத்தானு மறிந்து மயக்கமிலனுய் அவற்றைச் செய்யாதொழிவனேயாயின் அவனே அறிவுடையானெனப்படுவன்.

தீவினையென்று சொல்லப்படும் மயக்கத்தை மேற்கொண்டுச் செய்து கைவந்தமையான் அம்முன்செய்த தீவினையுடையார் அஞ்சாது செய்வர்; செய்யாமையைப் பயின்றமையின் அஃதிலராகிய சீரிய ரஞ்சிச்செய்யாராகலின், அதனைச் செய்யாமற் பயிலும் பயிற்சி இம்மையினன்றி மறுமையினும் பயன்றரும். தனக்கின்பம் பயத்தலைக் கருதிச் செய்யுந் தீவினைகள் பின்ன ரஃதொழித்துத் துன்பமே பயத்தலான் மயக்கத்திற் றீர்ந்து விளைவைக் கருதி யாவரு மவற்றைச் செய்யா தொழிதல்வேண்டும்.

பிறிதொருகாலத்தும் பிறிதொரு தேயத்தும் பிறிதோருடம்பினுஞ் சென்று சுடுதலில்லாத தீயினும், அங்ஙனஞ்

சென்று சுடவல்லனவாய தீவினைகள் மிகக்கொடியனவென் றறி வுடையா ரவற்றைச் செய்தற் கஞ்சுவர். தான்செய்த தீவினைப் பயனைத் தானே யனுபவிக்கவேண்டிய தன்மையாகலின், அறி வுடையார் தீவினையைச் செய்து தம்மைச் செறுவார்மாட்டுந் தாம் அதனைச் செய்யார். எத்துணைப்பெரிய பகையுடையாரும் அப்பகையை யொருவாற்றாற் றப்புவர், அவ்வாறன்றித் தீவினை யாகிய பகை நீங்காது புக்குழிப்புக்குக் கொல்லுமாகலின் சுவ நயத்தை விரும்பினுரெவரும் பிறனுக்குக் கேடுபயக்கும் வினை களை மறந்து மெண்ணு தொழிதல்வேண்டும்.

எல்லா வுயிர்களாயும் இறைவனுளனென்றும், அவன்முன் னர் எல்லாவுயிர்களு மொரேபெற்றியி னருளெய்தற் குரியன வாமென்றும், ஓருயிர் மற்றோருயிர்க்குத் தீங்குசெய்தல் அவற் குப் பிரீதியாகாதென்றும், ஓருயிர் மற்றோருயிர்க் கிதமாயின வற்றைச் செய்தலே அவற்குப் பிரீதியாமென்றும், எல்லா வுயிர்களும் இன்பமடைதலே பேரருளுடைய அவ்விறைவன் விருப்பென்றும், அங்ஙன மெல்லாவுயிர்க்கும் இன்பமுளதாவது ஓருயிர் மற்றோருயிர்க் கிதமாயினவற்றைச் செய்தலாற்றானே யென்றும் இவ்வுண்மைகளை யாவரும் ஒருபோதும் மறத்த லாகாது. அவற்றை யறிந்துவைத்துந் தீவினைகளைச் செய்வார் அவ்விறைவன்மாட் டன்புடையரென்றும் உயிர்கண்மாட் டரு ளுடையரென்றும் ஒருபோது மெண்ணப்படவேமாட்டார். தாந் தாஞ்செய்த தீவினைப்பயனாகிய துன்பத்தை இப்பிறப்பிலேனும் மேல்வரும் பிறவிகளிலேனும் தப்பாது தாந்தாமே அனுபவித் துத் தொலைத்தல்வேண்டுமென்னும் இவ்வுண்மையை அறிந் துள ராகலினன்றே அறிவுடையார் தாமிறந்துபடத்தக்க தீவினை களைத் தமக்குப் பிறர் செய்தாராயினும், அச்செயலால் அவர்க்கு வரற்பாலனவாய துன்பங்களைநோக்கி இரங்குவராய்த் தாம் அவர்க்கு ஒருதீவினையுஞ் செய்யாது நன்மைகளையே செய்வா ராயினர். கடவுளை வழிபடாமை, அக்கடவு ளருளிய ஞான நூலை ஓதியுணர்ந்தும் பிறரறிய வோதியும் தாம் அதன்வழி யொழுகாமை, தந்தையும் முன்னோரும் வித்தியாகுருவுந் தீட்

சாகுருவும் அரசனுமென்னு மிவர்சொற்கேட்டு அதன்வழி நடவாமை, பெரியாரைப்பேணி வணங்காமை முதலிய குற்றங் களையுடையவரே தீவினைகளை அஞ்சாது செய்வர். தீவினைசெய் வாரோடு கூடுதலுந் தீவினை செய்தற் கேதுவாம்.

தேவாலயந் தருமசத்திரந் தருமக்கிணறு முதலியவற்றை யழித்தல், அவற்றின் தருமநிதியைக் கவர்தல், களைகணீ யென்று தன்னைவந் தடைந்தோர்க்குத் துயர்விளைத்தல், உயிர் களைக் கோறல், அவற்றின் மாமிசங்களை யுண்டல், மற்சமாமிசங் களை விற்றல், பறவை விலங்கு முதலியவற்றை மறைந்து கண்ணி முதலியவற்றிற் படுத்தல், அவற்றை ஒன்றோடொன்று பகைத் துப் போர்பொர விடுத்தல், இழிந்த பிராணிகளை வருத்தல், இர வலர்க் கீவாரை விலக்கல், இல்லிற் றீக்கொளுவுதல், பிறர்செய்த பயிரை மறைவி னழித்தல், மகளிர் கருப்பஞ் சிதைத்தல், நஞ் சூட்டிக் கோறல், விசுவாச காதகஞ் செய்தல், பரிதானம் வாங் கல், அடைக்கலப்பொருளைத் தான் கவர்தல், தாயபாகத்தைப் பங்கிட்டுக் கொடாது வஞ்சித்துக்கோடல், களவுசெய்தல், கள் ளுண்ணல், வியபிசாரஞ்செய்தல், சூதாடல், மெலியாரை நலி தல், ஆறலைத்தல், சூறைகோடல். ஒப்பிப் பணிசெய்யாமை, கூலி கொடாமை, சிறைபாடல், ஒருசாதியார் மற்றொரு சாதியா ரோடு பொருது அவரைத் தமக்குக் கீழ்ப்படுத்திச் சுவநயம் பெற வாளுதல், ஓரரசன் மற்றோரரசனோடு அநீதியாய்ப் பொருள்கவரக் கருதிப் பொருதல், அவர் நாட்டை யழித்தல், அதனைத் தான் கவர்ந்து தன்னாட்டுடன் சேர்த்தல், கொடுங் கோன்மை செய்தல், மன்னரைச் சேர்ந்தொழுகி அவரை வஞ் சித்து அவர்பொருளுங் குடிகள் பொருளுங் கவர்தல், அவர் தாஞ் சுவநயங் கருதி வழக்குகளை உளவாக்கல், நடுவு நிலைமை யின்றிக் கொள்வது மிகையுங் கொடுப்பது குறையுமாக வாணிகஞ்செய்தல், பிறர்பொருளைக் கவர்ந்து தருமஞ்செய்தல், களவுப்பொருள் முதலாய தீநெறியால் வரும் பொருளிற் பங்குபெறல், ஒன்றைக் கொடுத்தற் குடன்பட்டுப் பின் கொடா தலைத்தல், தீவினை செய்வார்க்கு மறைவா யுதவிசெய்தல். அவ ரோடு கூடுதல், தவவேடத்தின்மறைந்தல்லவை செய்தலென்

றிவைமுதலாய தீவினைகள் இம்மை மறுமை யிரண்டினும் தப்பாது செய்தவர்க்குக் கேட்டை எய்துவிக்குங் கொடூரமான செயல்களென் றஞ்சி அத்தீவினைகளை யாவருஞ் செய்யாதொழிதல்வேண்டும். ஒருவன் நல்வினைகளைச் செய்யானெனினும் மறந்துந் தீவினைகளைச் செய்யாமை அவற்கு மிகநன்றாம்.

---

## கச. அதி. ஈகை.

ஈகையாவது ஒருபொருளு மில்லாதார்க்கு அவர் வேண்டியதொன்றைப் பயனோக்காது கொடுப்பதேயாம். அஃதொழிந்த எல்லாக்கொடையும் வறியராயினோர்க்கும் அல்லாதார்க்கும் அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பதாகிய ஒருபயனோக்கிக் கொடுப்பனவாகலின் ஈகையெனப்படா. முற்காரணமும் பிற்பயனும் நோக்காது நல்லகாலத்தே நல்லவிடத்தே நல்லவர்க் கீதல் சாத்துவிக வீகையெனவும், புகழ் முதலிய பயனோக்கி யீதல் இராசத வீகையெனவும், நல்லனவல்லவாய பொருள்களை நல்லனவல்லவாய காலத்து மிடத்தும் நல்லவரல்லாதார்க்கு மனமின்றி யீதல் தாமத வீகையெனவும் பெயர்பெறும். ஈகையாளரிற் றலையாயினோர் கேளாதீவர், இடையாயினோர் கேட்டபின்னீவர், கடையாயினோர் கேட்டபின்னும் பன்னாட்சென் றீவர். மனமொழிமெய்களிற் குற்றமிலராய இல்வாழ்வார் செய்தற்குரிய நல்லறம் சாத்துவிக வீகையேயாம் அதனைச் செய்வோர் வணக்கம் இரக்கம் பொறை முதலிய நற்குணங்களையும் இன்சொல்லையுமுடையரா யிருத்தல்வேண்டும். பொருள் வைத்திருந்துந் தரித்திரன்போல நடித்து யாசிப்போரும், தொழில்செய்து சீவனம்பண்ணச் சத்தியிருந்தும் அதுசெய்யாத சோம்பேறிகளும், தீச்சிந்தைநிறைந்து பொருள் பெறும் நோக்கமாய்ப் பொய்யுபசாரஞ் செய்து பொய்மரியாதை காட்டித் திரிவோரும் பாவிகளும் முதலாயினோர்க்குக் கொடுத்தலும் புகழாதிய பயனோக்கிக்கொடுத்தலும் ஈகையாகா.

ஈகையாளனுவான் யான் வறியனென்று இரப்பான்சொல்லு மிளிவரனவத் தான் பிறர்கட் சொல்லாமற் கொடுத்தலும், அவ்விளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதற்குமுன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தலும், அதனைப் பின்னும் பிற னொருவன்பாற் சென்று அவனுரையாவகையாற் கொடுத்தலும், யான் இதுபொழுது பொருளுடையேனல்லே னெனைக் காப்பார் சொல்லு மிளிவரவை ஒருவற்குஞ் சொல்லாது கொடுத்தலு மென்னும் இத்தன்மைகள் அமையப் பெற்றவனு யிருத்தல் வேண்டும். தமக்கு நீருதவுகின்ற மேகங்களினிடத்து உயிர் கள் என்ன கைம்மாறு செய்யாநின்றன? அம்மேகங்கள்போல் வார் செய்யும் ஈகைகளும் கைம்மாறு நோக்குவனவல்ல. செல் வம் ஈகையைச் செய்யும் பெரிய தகைமையை யுடையான்கண் ணே படுமாயின் அச்செல்வன் ஊரின்கண் வாழ்வா ருண்ணும் நீர்நிறைந்த குளத்தையும், ஊர்நடுவே பழுத்த பயன்படுமரத் தையும், எல்லாவுறுப்பும் பிணிகட்கு மருந்தாய்க் கோடற்கரிய இடங்களினின்றுதல் மறைந்து நின்றுதல் காலத்தான் வேறு பட்டாதல் பயன்படாமை தப்பாத மரத்தையும் போல்வன்.

பொருள் பெற்றொருவன் அதனைத் தனக்குதவ வைக்கு மிடம் வறியாரது மிக்கபசியைத் தீர்த்தலாகிய அறமேயாம். ஓரோவெண்களைக் குறித்து அத்துணை யீட்டுதுமென ஈட்டத் தையே மேற்கொண்டு இவறிக்கூட்டித் தாமுமுண்ணாது வறி யார்க்கு மீயாது வைத்து அப்பொருளைப் பின்னிழந்துபோம் அருளில்லாதார், தாமு முண்டுவந்து வறியார்க்கும் வேண்டிய வற்றைக் கொடுத்து அவருவத்தலான் அருளுடையாரெய்தும் இன்பத்தினைக் கண்டறியார்கொல்லோ? முதலில்லாதவர்க் கூதிய மில்லையாயினாற்போல முற்பிறப்பி லீகையைச் செய்யாதார்க்கு இப்பிறப்பி லீகையைச் செய்யுங் குணமும் பொருட்செல்வமு மின்பமுமில்லையாகலிற் செல்வமுடையாராயினார் இப்பிறப்பினும் இவ்வுண்மையைக் கடைப்பிடித்து அவ்வண்ணமே ஈகையைச்செ ய்யாது வாளாவிருத்தலும் வறியராயினார் மிக்க செல்வத்தை ப்பெற அவாவுதலும் பேதைமையே. அவர்தாம் இப்பிறப்பின் கண் இயன்றமட்டும் பொருளீட்டி ஈகையைச் செய்துவைப்பின்

மேலெய்தும் பிறவிகளிற் பொருட்செல்வராயும் ஈகை யாளராயும் விளங்குவர். வெறும்பானையை அடுப்பிலே வைத் தெரித்தாற் பொங்காதவாறுபோல. இப்பிறப்பி லீகை யைச் செய்யாதார் வரும்பிறவிகளினும் செல்வராதலும் ஈகை யைச் செய்தலும் அரியவ்ரமென்னு மிவ்வுண்மையைக் கடைப் பிடித்து இயன்றமட்டும் முயன்று பொருளீட்டி ஈகையைச் செய்தலே இம்மானுட யாக்கையைப் பெற்றதனு லெய்துநற் குரிய நற்பயனும்.

மக்கட்பிறப்பினர் ஈகையைச்செய்யாரேயாயின் ஏனைப் பிறவிகளிற் பிறந்த உயிர்களைக்காட்டினும் அவர் என்ன மேம் பாடுடையர்? மழையானும் ஈகையானுமே உலகம் நடைபெற வேண்டுதலின் ஈகையைச்செய்யாத மாந்தர் மழைபெய்யாமை யைநோக்கி ஏன் வருந்துகின்றனர்? அவர் தாம் ஈகையைச் செய்யாத தம்மை நோக்கி வருந்தாத தேனே? பெருங்கருணைத் தடங்கடலாகு மிறைமுதற்கடவுள் பொருட்செல்வர்க்கு உணவு முதலியவற்றுக் கேற்றவளவின் அப்பொருளைக் கொடாது அவ் வளவுக்கு மேற்படக் கொடுத்தது, ஊழான் வறியராயினோர்க்கு ஊணுடை முதலியவற்றின்பொருட் டுதற்கேயன்றி வீணே அழிந்துபட விடுதற்கும், தேனீயைப்போன்று வலிதிற் பிறர் கொள்ள ஈட்டிவைத் திழத்தற்குமன்று. தம் மக்கட்கென மிக்க பிரயாசத்துடன் பொருளையீட்டி உண்ணாமலும் உடாமலும் சிறிதும் புறம்போகாமலும் வருந்திக் காத்துவைத்துத் தாம் இறக்கும்போ ததனை யிழந்துபோகும் மாந்தர், தமக்கென அத னோர் பாகத்தையேனும் மேலைக் குதவுமாறு தக்கார்க்கீந்து வைப்பாக்காமை பேரறியாமையே. நமதுடைமை யெனப்படும் பொருளை நாம் பிறக்கும்பொழுது கொடுவந்தேமுமல்லேம், இறக்கும்பொழுது கொடுபோவேமுமல்லேம், அஃதிடைநடுவே முன்னை வினையான் வந்ததெனவுட்கொண்டு மேலைக் குதவுமாறு சற்பாத்திரமாயுள்ளவர்க் கீந்துவைத்தவரே அறிவுடையராவர். உண்ணுதற் குதவாத கடலி னுவர்நீரை மேகம் மொண்டு நன்னீ ராக்கி உயிர்கட் கீயுமாறுபோல, ஈயாதார் பொருளை முன்னை

நல்வினையான் ஈகையாளராயினார் பெற்றுப் பிறர்க்கீவர். தான் சேர்ந்த நிலநலத்தாற் றண்ணீர் உயிர்கட்கு நல்லுணவாய்ப் பெருமையடையுமாறுபோல, ஈகையான் மக்களெய்திய பொருள் பெருமை யடையும்.

தாஞ் செய்யத் தகுவன விவையென் றறிந்தவர் முய றலைச் செய்தீட்டிய பொருள்களெல்லாம் தாமே யுண்டற்பொருட்டும் வைத்திழத்தற்பொருட்டு முள்ளனவல்லப் பிறர்க் குதவுதற் பயத்தவாம். தாமும் நுகராது பிறர் நுகர்தற்பொருட்டு அவர்க்கு மீயாது அறிவிலாதார் எமதெமதென்று சொல்லி வைத்திருந்து பின்னர் இழந்துவிடும் பொருளை, அவரை யொழிந்த ஏனையோரும் தமதுதமதென்று சொல்லியிருத்தல் அவர்தமக்கு மிக நன்று. என்னை? முன்னையவர்க்கு அதனை யீட்டியுங் காத்து மெய்துந் துன்பம் பின்னையவர்க் கில்லை யாகலான். பிறரையு முண்ணவிடாது தானு முண்ணாது நாய் வைத்திருந்து காக்குந் தேங்காய்போன்று அறிவிலாதார் பெற்று வைத்துக் காக்கும் பொருள் அவர்க்கும் பயன்படாது பிறர்க்கும் பயன்படாது.

ஈகையைச் செய்வாரே உயர்ந்த சாதியார்; அதனைச் செய்யாதவரே இழிந்த சாதியார். ஈந்தார்க்கு இம்மைப்பயன் இன்பமும் புகழு மெய்துதலும் மறுமைப்பயன் தேவருளொருவராய் வைத்து நன்குமதிக்கப்படுதலுமேயாம். உண்ணாது முடாதும் அழியாப் புகழாக்கையைப் பெறாதும் மேற்கதியை யடைதற்குரியரல்லராயும் ஈயாது பொருளையீட்டிப் பிறர் கொள்ள வைத்து அதனையிழந்தவரா யிறந்தவர் இம்மைக்க ணீட்டன் முதலியவற்றா னெய்திய துன்பத்தை நுகர்ந்ததனோ டமையாது மறுமைக்கண் வறிஞராய்த் துயருறுவர். நல்கூர்ந்தார் உணவு முதலியன பெறாமையாற் றுயருறுவர்; செல்வராயினார் ஈகையைச் செய்யாராயின் அச்செல்வத்தை ஈட்டலானும் காத்தலானும் இழத்தலானும் துயருறுவர்; செல்வத்தாற்றருக்கினார் பழிபாவங்களைச்செய்து துயருறுவர்; ஏற்றார்க்கில்லையென்று

கரப்பார் செத்தாரின் வேறல்லராகலின், சாதல்போன் றின்னாத்துயருறுவர்.

இறந்தவர் யாவரெனின் ஈயாது பொருளை யீட்டிவைத் திறந்தவரே; ஈந்தவர் இறந்தவரேயாயினும், அவர்தம் புகழாக் கைக் கழிவில்லையாகலின் இருந்தவரேயாவர். மன்னுவுலகத்து மன்னியது வேண்டினோர் சற்பாத்திரமாயுள்ளவர்க் கீந்து இம் மைக்கட் புகழாக்கையை நிலைநிறுத்திச்சென்று மறுமைக் கண்ணு மின்புற்றிருப்பராகலின் அவர் இறந்தவரேயாயினும் இருந்தவரேயாம். நிலையாதனவாய பூதவுடம்பும் பொருளும் நிலையினபொழுதே அவற்றா னெய்தற் பயத்தவாய உலகத் திறவாது நிற்கும் புகழுடம்பையும் சற்பாத்திரமாயுள்ளவர்க் கீதலானெய்தும் புத்தேளுடம்பையும் ஒருங்கேபெற முயன்று வைத்தவரே சதுரப்பாடுடையர். கடலு ளமிழ்ந்திய கல்லைப் புணையேயன்றி மற்றொரு கல்லுக் கரைசேர்க்க மாட்டாதவாறு போலப் பாவிகளாயினாரைப் பாவமிலாராயினாரேயன்றி மற்றைப் பாவிகளாயினார் மேற்கதிக்க ணுய்க்க வல்லாரல்லராகலிற் சற் பாத்திரமாயுள்ள துறந்தார் குருடர் முடவர் முதலாயினோர்க்கே ஈதலைச் செய்தல்வேண்டும். மக்களாய்ப் பிறக்கின் ஈகையைச் செய்து அவ்விருவகை யுடம்பையும் பெறுதற்கேதுவாகிய குணத்தோடு பிறத்தல்வேண்டும்; அக்குணமில்லாதார் மக்க ளாய்ப் பிறத்தலினும் விலங்கு முதலிய அறிவிற் குறைந்த பிரா ணிகளாய்ப் பிறத்தல் நன்று.

ஆற்றுநீரற்ற காலத்தும் அவ்வாறூற்று நீரான் உலகத் தவர்க் கூட்டுமாறுபோல ஈகையாளர் கைப்பொருளற்றகாலத் தும வருந்தமுற்றுப் பொருளையீட்டியும் அவ்வீகையையே செ ய்வர். ஆற்றுநீர் வற்றினும் அதன்கண் ஊற்றுநீர் வற்றாதவாறு போலஈகைக்குண முடையார்க்கு முன்னிருந்த பொருள் குன் றியபோதும் ஈதற்குப் பொருள் வருவாய் குன்றாது. வறியரா யேற்றார்க்கு மாற்றாது கொடுத்தற்குப் பொருள் தம்மிடத் தில்லையாயினும் ஈகைக்குணமுடையார் அவர் மனத்தை முக மலர்ச்சியானும் இன்சொல்லானுங் குளிர்விப்பர். ஒருவன்

ஈகையைச் செய்யவியலாத அத்துணை நல்குரவுடையனுயினும், அகத்தின்கண் அன்பை வெளிப்படுத்தும் இன்முகமும் இன் சொல்லு முடையனல்லனுப் அவற்றினும் நல்குரவுடையனுயின் நிலவுலகின்கட் கொடியரினுங் கொடியனுப்ப் பிறந்துள்ளவன் அவனே.

ஒருபொருளை இரந்தவர் அதுபெற்றதனுல் அல்லது இரக் கப்பட்டவர் தன்மையைக் காண்டலால் இனிதாகிய அவர்முகங் காணுமளவும் இரத்தலையன்றி இரக்கப்படுதலும் இனிதன்று. சந்தனக்கட்டை தான்தேய்ந்த காலத்துங் கந்தங்குறைபடாத வாறுபோல, ஈகையாளர் செல்வங் குறைந்தகாலத்தும் மனத் தின்கட் சிறுமையை யுடையராகார். உயிரையேயெனினும் ஏற்றறீது, கொடுத்தனன்று. பற்றெழிதற் கேதுவாகலின் வறியராயேற்றல் வீட்டுலகிற்கு நல்லநெறியென்பா ருளராயி னும், அது துறந்தார்க்கேயன்றி ஏனையோர்க் கன்ருகலிற் றீது; ஈந்தார்க்கு அவ்வீடெய்துதல் இல்லையென்பா ருளராயினும் வீடெய்துதற்கேதுவாய் அஃதீயாதாரினும் மேற் கதியைத் தரலான் நன்று.

## துறவறவியல்

## கரு. அதி. அருளுடைமை.

அருளாவது தொடர்பு பற்ருது இயல்பாக வெல்லாவுயிர் கண்மேலுஞ் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடை மைபோல இவ்வருளுடைமை துறவறத்திற்குச் சிறந்தது.

துறவறமானது வினைமாசுதீர்ந்து அந்தக்கரணங்க டேவா தற்பொருட்டுக் காக்கப்படும் விரதங்களும் அவற்ருன் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமுமென இருவகைப்படும். அவற்றுள் விரதங்களாவன இன்னவறஞ் செய்வலெனவும்

இன்னபாவ மொழிவனெனவும் அத்துறவறத்தினின்றார் தம் மாற்றலுக்கேற்ப வரைந்துகொள்வன. வினைமாசுதீர்ந்து அந்தக் காணங்க ளேயவாயவழி உதிப்பதாய வீடுபயக்கு முணர்வே ஞானம்.

தம்முயிர்போன் மன்னுயிரோம்பும் விரதமே துறந்தார்க்குச்சிறந்த விரதம். மனைவி மக்களென்னுந் தொடர்புபற்றிச் செல்லு மன்பு முதிர்ந்துழி அயலார் முதலாயினோர் மாட்டுமே யன்றி விலங்குமுதலிய இழிந்த பிராணிகண்மேலுஞ் செய்வதாய கருணை யுளதா மாகலின் அஃது அன்பீன் குழவி யெனப் படும். அருளிலாயினோர் தீமையே செய்தொழுகுதலையும் அஃதுளராயினோர் நன்மையே செய்தொழுகுதலையும் காண்டலின் அவ்வருளுடைமை யாவரானும் விரும்பப்படற்பாலதும் போற்றி யொழுகப்படற்பாலதுமா யுள்ளது.

முழுமுதற் கடவுண்மாட்டே உயிர்கட்குத் தோற்றவொடுக்கங்கள் கூறப்படுகின்றன. பரமான்மாவுஞ் சீவான்மாவுங் கலந்துள்ள கலப்பு அத்துவிதமாகலின் அப்பரமான்மாவையின்றிச் சீவான்மாவும் சீவான்மாவையின்றிப் பரமான்மாவு மில்லையாகலானும், அவைதாம் ஒரேபெற்றியின் அநாதிநித்தியமா யுள்ளனவாகலானும், எவ்வுயிரும் அக்கடவுளுடம்பாயும் எவ்வுடம்பும் அக்கடவுள் கோயிலாயு முள்ளனவாகலானும், அவிச்சையும் பிறவிபேதங்கட் கேதுவாய கன்மமும் அக்கடவு ளருளானொழிந்துழி அவ்வுயிர்கட்குச் சுத்தாத்துவிதமுத்தி யுளதாகலானும் உயிர்கட் கொன்றோடொன்றும் கடவுளோடு முளதாய இத்தொடர்பி னுண்மையை யுணர்ந்து, அக்கடவுண்மாட்டுப் பேரன்பும் ஏனையுயிர்கண்மாட்டருளு முடையவரே அறிவுடையரெனப்படுவர். அத்துவிதமாவது இரண்டன்மை. இரண்டன்றேல் ஒன்றுமோவெனின் அற்றுமன்று. அஃதெதத்தன்மைத்தென்று அவிச்சை மறைப்புடைய மாந்தரறிதாற்கேற்கு மதிநுட்ப முடையரல்லர். பரமான்மாவுஞ் சீவான்மாவும் ஒன்றோ வேறோவென்பார்க்கு ஒன்றுமன்று வேறுமன் றென்பதனை யிவ்வத்துவித வுண்மை தெளிக. முத்தியினும் ஏகமுத்தியன்று

சுத்த அத்துவித முத்தியே யுளதாவதெனக் கூறப்பட்டுள்ள வாற்றானும் அதனுண்மை உய்த்துணர்க.

இவ்வுலகின்கண் இல்லற வின்பத்துக்குக் காரணம் பொருளாமாறுபோலத் துறவறவின்பத்துக்குக்காரணம் அருளேயாம். அவ்வருளுடையார், திங்கள் தன்மாட்டுள்ள கறையாகிய விருளை நீக்க முயலாது உலகத் திருளை நீக்குமாறுபோலத் தமக்குள்ள குறைவை நீக்கமுயலாது பிறவுயிர்கட்குள்ள குறைவை நீக்குவர். அவர்தாந் தம்மைமறந் தெஞ்ஞான்று மவ்வுயிர்கட் கிதஞ்செய்தலானெய்து மின்பமே வடிவமா யிருப்பர். பொருளான் வருஞ் செல்வங்கள் இழிந்தார்கண்ணு முளவாமாகலின், செல்வங்கள் பலவற்றுள்ளும ஆராய்ந் தெடுக்கப்பட்ட செல்வமாவது உயிர்களை யோம்பி அவ்வறத்தான் மேம்படுதலாகிய அருளான் வருஞ் செல்வமே; அஃதுயிரை விட்டுநீங்காது இருமையினு முதவி இன்பம் பயத்தலின் யாவரு மதனை யெய்தும் விருப்புடையராதல்வேண்டும்; உயிர்கட் கதுபோலத் துணையாவது பிறிதொன்றில்லை.

நிலைபேறுடைய உயிர்களைப்பேணி அவற்றின்கண் அருளுடையராயினார்க்குக், கொலை முதலிய பாவங்கள் செய்பாராகலின் தம்முயிரஞ்சுதற் கேதுவாய தீவினைக ளுளவாகா உயிர்கண்மாட்டுச் செய்யப்படும் அருளைத் தவிர்ந்து தவிரப்படுங் கொலைமுதலிய தீவினைகளைச் செய்தொழுகுவார், இம்மையினும் பிறவித்துன்பங்கள் மூன்றனையு நுகர்ந்து மறுமையினுந் திணிந்த விருளையுடைத்தாய்த் தன்கட் புக்கார்க்கு மிக்க துன்பத்தைச் செய்யும் நிரயத்தை யெய்துவர். உயிர்கட் கிதமாயினவற்றைச் செய்யாமையாகிய குற்றமுளதாதலோ டமையாது அகிதமாயினவற்றைச் செய்தலாகிய மிகக்கொடிய குற்றமுமுளராய் அருளையொழித்து வன்கண்ணராகும் அப்பேதைமாந்தர்க்கு உய்யும் வழியு முளதாமோ? மக்கட்பிறப்பின ரல்லர் புலிமுதலிய கொடிய விலங்குகளேயென்று சொல்லத்தக்க அவர்தாம் உய்யுமா றொருஞான்று மில்லையேயாம் ஒன்றை மற்றொன்று கொன்றுண்ணும் விலங்குமுதலிய இழிந்த பிராணிகளுட் சில

போல மனிதனுங் கொன்றுண்டனேயாயின் அவன்பெற்றுள்ள நல்லவுந்தீயவு மாயவற்றைப் பகுத்தறியவல்ல நல்லறிவானவற்குப் போதரும் நன்மைப்பயன் யாது?

இல்வாழ்வார்க்கு இன்றியமையாமை காரணமாகத் தாவரவுணவும் யாகத் தவியாகிய ஊனுணவும் விதிக்கப்பட்டுள்ளனவே யெனினும், துறந்தார்க்கு நீர்பருகுதலுஞ் சுவாசித்தலும் முதலாயினவற்றானும் பிராணிகள் கொல்லப்படுதலைநோக்கி, அந்நீர்வேட்கை சுவாசம் முதலியவற்றை அடக்கி யோகஞ்செய்யும் வழி கூறப்பட்டுளது. அவ்வில்வாழ்வார்க்கும் கொலையைவிருத்தி செய்யும் நோக்கமாயன்று படிமுறையே குறைக்கும் நோக்கமாயே பாவத்துக் கேதுவாயினும் இரங்கற்கிடனுகா வுதிர்ந்த விலையுங் கனியும் வித்தும் முதலாய தாவரவுணவும் மிக்க பிரயாசத்துடன் அரிதி னெய்தப்படும். அவியுணவும் விதிக்கப்பட்டுள்ளன. இல்வாழ்வார்க்கு மக்கட்பேற்றினிமித்தம், விதிக்கப்பட்ட காலமிடம் முதலாயினவற்றை நோக்கலான் மிகவரிதி னெய்தப்படும். கற்புடை மனைவியைச் சேர்தல், பிறவிக்கேதுவாகுமதனை விருத்திசெய்யும் நோக்கமாயன்று படிமுறையே குறைக்கும் நோக்கமாயே விதிக்கப்பட்டவாற்றானும் அதனுண்மை உய்த்துணர்க

கொலைசெய்தவரும், கொலைசெய்ய ஏவினவரும், கொலை செய்தலைக் கண்டும் அதனைத் தடாதவரும், கொலையை மறைத்தவரும், தற்கொலை செய்தவரும், கொலைசெய்தவரோடு கூடினவரும், ஊனுணவின்பொருட்டுக் கொலைசெய்தவரும், ஊனை விற்றவரும், விலைக்குவாங்கினவரும், அவ்வூனை யுண்டவரும், உண்ணுதவரை யுண்பித்தவரும் முதலாயினோ ரெல்லாரும் அருளுடையரல்லராய் அதன்மேலும் வன்கண்ணராய்ப் பழிபாவங்கள் பிறவற்றையுஞ் சிறிதுமஞ்சாது செய்யுங் கொடியராவர். அருளில்லாதவன் தன்னி னெளியதோ ருயிர்மேற் றான் நலியச் செல்லும்போது, தன்னின் வலியதோருயிர் தன்னை நலியவருங்காற் றான் அதற்கு முன்பு அஞ்சிநிற்கும் நிலையை நினைக்கவே, அவ்வுயிர்க்கும் இவ்வாறே அச்ச முளதாமென் றறிந்து அதன்

மேல் அருளுடையனாதற்கு அங்ஙினைவோ ருபாயமாகும். மறு பிறப் புண்டென்ப துண்மையாகலின், "என்னை யரிதிற்பெற்று வளர்த்துப் பின்ன ரிறந்துபோன என் தாயே, யான் இப்பொழு தானுணவின் பொருட்டுக் கொல்லப்போகாநின்ற இவ்வா டாய்ப் பிறந்துளாள்; தாயைக் கோறலாகிய இவ்வதிபாதகச் செயலை யான் செய்வேனோ? என் தாயிடத்து யான் மிக்க அன் புடையனா யிருந்துளே னல்லேனோ?" என்று இவ்வாறு ஒரு வன் ஓராட்டைக் கொல்லச்செல்லு மெல்லைக்கட் சிந்திக்க வல்லனாயின் அவன் அக்கொலையைச் செய்ய ஒருபொழுது முடன்படமாட்டான். "என்னை யரிதிற் பெற்றுவளர்த்து நல்லறி வூட்டி விரும்பிய வுணவுகளையெல்லாம் பெரும் பிரயாசத்துடன் சம்பாதித்துக் கொணர்ந்துதந்து யான் உண்ணப் பார்த்திருந்து மகிழ்ந்த வென் றந்தையே, இறந்தவன் மீண்டு மானுடனாய்ப் பிறந்து ஈண்டுப் புறங்கடை வாயிற்கண் வந்துநின்று சகிக்க லாற்றாப் பசிப்பிணி கடுகி வருத்துதலும் உணவிரந் தோலிட் டுக் கதறியழுகின்றனன்; இவனைப் புலைச் சிறுவனென்று புறக் கணிப்பேனோ" வென்றொருவன் சிந்திக்கவல்லனாயின், அவன் பசியான் வருந்திவந் திரந்தவர் பார்த்திருக்கப் பாத்துக்கொ டுத்துண்ணாது தானே தனியே யுண்பானோ? ஊன் உண்பார் சுற்றத்தாரைக் கொன்றுண்பவரே; இரக்க மில்லாதார் கல்லா ய்ப் பிறந்தவரே.

உயிர்கட் கிரங்கற்கேற்ற பெற்றியினமைந்த மனத்தாராய மாந்தர், அப்மனத்தைத் திரித்து வேறுபடுத்திச் சிறிதுமிரக்க மிலராய், அவ்வுயிர்கடா மிருத்தற் கிடமாய வுடம்புகளைவிட் டுத் துடித்துப் பதைத்து வருந்தி நீங்கும்வண்ணம் கொலை செய்துநீக்கி, அவ்வுடம்புகளாகிய பிணங்களை மகிழ்ந்துண்ணும் வன்கண்ணராயினக்கால், அவர் தாமுய்யும் வழியுமுளதாமோ? கொலைப் பாவத்தைப் பின்னுமுளதாக்கலின் அதற்குக் காரண மாதலையும், முன்னு மதன்பின்னே வருதலின் அதன் காரியமா தலையும் ஒருங்கே யுடைத்தொய ஊனுண்டல் கொலைப்பாவத்தி னுங் கொடிய பாவம். தம்முடம்பை வளர்க்கவெண்ணி மிருகம் பறவைமுதலிய பிராணிகளின் உடம்பை உண்பவர், அவற்றின்

யிருகத்தன்மை முதலியவற்றையும் அவ்வுடம்புகட் குள்ளவா யிருக்கும் நோய் முதலியவற்றையும் தாமு மெய்தி வருந்த வேண்டி வருமேயென்பதை யறிந்திலர்கொல்லோ? அல்ல தவ்வூன்சுவை அதனை மறந்துவிட மயக்கியது கொல்லோ? தன்னுடம்பை வீக்குதற்பொருட்டுத் தான் பிறிதோ ருயிரினுடம்பை அது வருந்தும்வண்ணம் கொன்றுண்பவன் பிறிதோருயிர் தன்னுடம்பைத் தான் வருந்தும்வண்ணம் கொன்றுண்ண விரும்புவனா? இல்லையே. ஊனுண்பார் இதனை யெண்ணாமை பேதைமையே.

கோறற்குக் கொலைக்கருவியைத் தங் கையிற் கொண்டவர் மனம் அதனாற் செய்யுங் கொலையையே நோக்குவதல்லது அருளை நோக்காதவாறுபோலக், கோறலான் வந்த பிறிதோருயிரி னுடலைப் புழுத்துத் துர்க்கந்தம் வீசும் பதத்ததேயெனினும் காயங்களான் இனிய சுவைகளாக்கிச் சுவைப்பட உண்டவர் மனம் அவ்வூனையே நோக்குவ தல்லது அருளை நோக்காது. அருளில்லாத புல்லறிவாளர் வயிறுகள், புள்ளும் விலங்கும் முதலிய பிராணிகளின் உடம்புகளைத் தகிக்குஞ் சுடுகாடுகளாகின்றனவே, தன்னை யின்னே கோறற்கு நின்றா னென்பதை யறிந்து இறத்தற் கஞ்சி நடுநடுங்கி வருந்தும் விலங்கின் நிலையைக் கண்டுஞ் சிறிது மிரங்காது கொன்றுதின்னு மவன், "யான் மக்கண்மாட் டருளுடைய" னென்று தன்னைச் சொல்லுதல் நடிப்புமாத்திரமேயன்றி உண்மையன் றாகலின் அவனை நம்பற்க.

இழிகுலத்தாரிடத்து நீர் பருகற்கு முடன்படா வுயர்குல மாந்தர் புலையர்தம் மலத்தையு முண்ணும் பிராணிகளை அம்மலஞ் சீரணமாக முன்னர்த்தானும் கொன்று அவற்றி னுடம்புகளை அதன்செறிவோ டுண்கின்றாரே! அயல வீட்டின்கண் மாந்தர்பிணங் கிடந்தாற் றம்வீட்டினுமுண்ணாத ஆரோக்கிய விருப்புடைய மாந்தர் தாமுண்ணுங் காலத்தில் இழிந்த பிராணிகள் பிணத்தைப் படைத்து மிகமகிழ்ந் துண்கின்றாரே; நந்தலையின் மயிரேனும் மற்றெறும்பு முதலாயினவேனும் தாம

உண்ணு முனைவிற் கிடந்தால் அவ்வுணவை அருவருத்துண்ணாத மனிதர் புழுத்த மற்சமாமிசங்களை உண்கின்றாரே! ஆட்டின் கோழை தம்முடம்பிற் படினும் பொறாதருவருக்கும் மக்கள் அவ்வாட்டின் உடம்பைக் கோழையோ டுண்கின்றாரே! ஊனைச் சுவைப்படுத் துண்டவர் மனமயக்கத்திற் றெளிவெய்துமாறில்லை. கையுங் காலும் விரல்களோ டழுகக்கிடந்து வருந்துமம்மாந்தர்தாம் ஞெண்டின் காலை யொடித்துத் தின்ற வினையின் பயன் இதுவேயாமென் றெண்ணாத தேனோ? யாவர்க்குஞ் செய்த வினைப்பய னுகர்த றப்பாது.

ஒருவன் நல்லனவற்றைச் செய்யானேயெனினும் தீயனவற்றை மறந்துஞ் செய்யாதிருத்தல் மிகநன்று. அவன் அருளுடைமையைத் தன்கணுளதாக்கிப் பாதுகாக்கப் பயின்று கொண்டனனாயின், அஃதெல்லாத் தீச்செயல்களு மவன்கணணுகாமைக் கோரரணாம். யானை அடிச்சுவட்டி னடங்காத அடிச்சுவ டில்லையாயினாற் போன்று, துறந்தார்க்கேயன்றி இல்வாழ்வார்க்குங் கொல்லா விரதத்து ளடங்கா விரதமில்லை. இல்வாழ்வார் அவிசொரிந் தாயிரம் வேள்விகளை வேட்டலானெய்தும் பயனினுந் துறந்தார் ஒன்றனுயிரைப் போக்கி அது நின்ற ஊனை உண்ணாமையாகிய இவ்விரதத்தா னெய்தும் பயன் மிகப்பெரிது. ஒருயிரையுங் கொல்லாதவனும் புலாலை உண்ணாதவனுமா யுள்ளவனை எல்லாவுயிருங் கைகுவித்துத்தொழும். அருளுடையவன் இயன்றமட்டும் நல்வினைகளையுஞ் செய்வன். அறச்செயல்கட்கெல்லாம் மூலகாரணமாயுள்ள தவ்வருளுடைமையே. ஒருவனை முத்திநெறிக்கணுய்த்துப் பாதுகாத்துக் கொடுசெல்ல வல்லததுவேயாகலின், அதனை யாவரும் விரும்பிப் பேணிப் போற்றி வளர்த்தல்வேண்டும்.

## கக. அதி. தவம்.

தவமாவது மனம் பொறிவழிப்போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கலும் கோடைக்கண் வெயினிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றாற் றம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களை யோம்பி இறைவனைத் தியானித்து வழிபடுதலேயாம். புறத்தேபோந்து பலதிறலைப் பட்டு உடம்பின்பொருட்டு விடயங்களை நோக்கும் மனம், அவை தொழிந்து புறத்துப் போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரின்பொருட்டு இறைவனை நோக்கினன்றே அவ்வுயிர்க்குப் பிறவித்துன்ப மொழிய முத்தியின்பமுளதாம்.

இல்லறத்தின் வழுவா தொழுகினு னொருவன் பின் அதனை வெறுத்து மனைவியோடு வனத்தின்கட் சென்று வானப்பிரத்த நிலையை எய்துவன்; அல்லது தனித்துச்சென்று சந்நியாசி யாவன். காவியுடை தரித்தல், கமண்டலம் முதலியன தாங்கல், சடைமுடியுடையனாதல், நீரிற் பலகான் மூழ்கல், இன்னவறஞ் செய்வலெனவும் இன்னபாவ மொழிவலெனவும் விரத மனுட்டித்தன் முதலியன அவற்குரிய வேடமுஞ் செயலுமாம். இல்லைவிட்டு நீங்கன் முதலாயின உலகப்பற் றறுத்தற்கும் இன்ப நுகர்தற்குஞ் சிறந்த நெறியாம். ஒருவன் எவ்வெப் பொருட் பற்றினின்றும் நீங்கினனோ அவன் அவ்வப்பொருளா னெய்துந் துன்பமிலனாவன். மக்கள் இறந்து படுஞான்றனவும் மிகவருத்தமுற்றும் அதனைச் சிறித்தோம்புந் தம்முடம்பும் பொருளும் உறவினர் முதலாயினோரும் இறக்கும்பொழுது தம்மொடு தொடர்ந்து வாராமையினுண்மையை யோர்ந்து அவற்றில் வைத்த பற்றையொழித்து வருத்தத்துக் கிடனாகாத பேரின்பத்தைப் பெறவிரும்பித் தவஞ்செய்ய முயலாரேயாயின் அம்மக்கட்பிறப்பானெய்தும் பயனை யிழந்தவராவர்.

மாந்த ருடம்பகத் தான்மா இருவகை யவத்தைப்படற் குரியது. அவற்றுளொன்று நெற்றி கழுத்து முதலியதானங்

களின் கண்ணதாய்க் கீழ்நோக்கிச்சென் றொடுங்குமுறைய தாக லிற் கன்மார்ச்சிப்புக் கேதுவாயது; மற்றையது நெற்றித்தா னத்தின் கண்ணதாய் மேனோக்கித் தோன்றுமுறையதாகலிற் கன்மநுகர்தற் கேதுவாயது. அவிச்சையான் அறிவு மயக்க முடைய ஆன்மாவோடு, அம்மயக்கத்தைச் சிறிது நீக்கி விளக் கஞ்செய்யுமாறு வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட அமைக்கப் பட்டுள்ள சடமாகியமனம் பொறிகளான் ஐம்புலநுகர்தல் முத லாயின செய்தல் கீழ்நோக்கி ஒடுங்குமுறையாம். பிறவிக்கு வித்தாயவஃது தெளிதி னெய்தற்பாலது. அம்மனம் போனவாற் றிற் போகவிடாது அதன் செலவை யடக்கி அதன் றுணை கொண்டு இறைவனோ டிரண்டறக் கலத்தற்கு முயறலைச்செய் தல் மேனோக்கித் தோன்றுமுறையாம். பிறவி யறுத்தற்குக் காரணமாயவஃது தரிதி னெய்தற்பாலது. மனத்தைப் பொறி வழிப் போகாது தடுத்து அம்மனத்தின் றுணையானே இறை வனைத் தியானித்து அவன்மாட்டுத் தமதறிவைச் செலுத்து வோரே தவத்தர். அவர் தாம் அங்ஙனஞ் செலுத்துங்கால் அம்மனத் துணையும் படிமுறையே யொழிய அவ்விறைவன் றுணையால் அவிச்சை நீங்கித் தமதறிவின் பூரணவிளக்க மெய் துவர்; அதுவே முத்தியாகும்.

கற்ற கல்வியும் கடவுட் பூசையும் இல்வாழ்வார் செய்யுந் தானம்முதலிய வறங்களும் துறந்தார் செய்யும் தவமும் மன வழுக் கற்றவர்க்கே பயன்றரும். மனம் பொறிவழிப்போகா தடங்குந் துயிறலைச் செய்தல் உயிர்க் கின்பம் பயக்குமாறு போல அஃதங்ஙன மடங்கிய தவமு மின்பம் பயப்பதாம். மனந் துயிறற்க ணெய்ப்பொழியுமாறு பொறிவழிச் செல்லா தடங்கி யொடுங்கும்; தவத்தின்கண்ணும் அஃதங்ஙனம் அடங்குமே யெனினும் ஒடுங்காது இறைவன்மாட்டுச் சென்று விளங்கும்.

மாந்தர் அறம்பொருளின்பங்க ளெய்துதற் கிம்மனமே துணை. நல்லனவற்றைச் செய்து மக்களை யுயர்த்தற்கும் நல்லன வல்லவற்றைச் செய்து அவர்தம்மைத் தாழ்த்தற்கும் வல்லதிம் மனமே. தீநெறிக்கட் செலுத்திக் கெடுக்கவல்லதும் அவ்வாறு

கெட்டாரை நன்னெறிக்கட் செலுத்தி யெடுக்க வல்லதுமாய இம்மனத்தை அடக்க வல்லவரே பிறவிக் கடலைக் கடக்க வல்லவராவர். ஓடும்பொன்னும் பகையு முறவும் கேடுமாக்கமும் நிந்தையுங் கீர்த்தியும் காடுமில்லமும் துன்பமுமின்பமு மிவை போல்வன பிறவும் முறையே ஒன்றற்கொன்று மறுதலையாய் வேறுபாடுடையனவென்று நோக்காது ஓரே பெற்றியவாமென நோக்கவல்லதே நல்லமனம். அவை அங்ஙனந் தோன்றுதல் மனமடங்கினார்க்கே யுளதாம். ஒருவன் யோகஞ்செய்து எப்பொழுதும் இளமைப் பருவ முடையனு யிருக்கலாம், வேறொருவர் காணுமல் உலகத்துலாவலாம், தனது சரீரத்தைவிட்டு மற்றொரு சரீரத்தினுட் புகலாம், இவைபோல்வன பிறசித்திகளையும் அவன் பெறுதன் மிகவெளிது, சித்த விருத்தியு மொடுங்க மனத்தை யடக்கி யிறைவற்றியானித்தல் அரிதினு மரிது. நீரை அசைவின்றி நிற்கச் செய்யின் அதன்மேற் றுரும்பும் அசைவின்றி நிற்குமாறுபோல, அடங்குதல் விடுதல் செய்யாது பிராணவாயுவை யடக்கின் மனமுமடங்கும்; படிமுறையே அஃதொடுங்க அறிவின் வியாபார முளதாம்.

அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின் வேருய உடற்கு வருத்தம் வருமென் றொழியாது தவத்தினைச் செய்யப் பிறப்புப்பிணி மூப்பிறப்புக்களான் அநாதியாகத் துன்ப மெய்தி வருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடுபெறு மாகலின் அத்தவஞ் செய்வாரே தங் கருமஞ் செய்பவராவர்; அவரையொழிந்த பொருளின்பங்களைச் செய்வார் கணத்து ளழிவதாய சிற்றின்பத்தின்பொருட்டுப் பல பிறவியுந் துன்புறத்தக்க பாவஞ்செய்து கோடலின் அவஞ் செய்பவராவர். தீயின்க ணோடும் பொன்னுக்கு அது சுடச்சுடத் தன்னெடு கலந்த குற்றம் நீங்கி ஒளி மிகுமாறுபோலத் தவஞ்செய்ய வல்லார்க்கு அதனன் வரும் மெய்வருத்தம் வருத்தவருத்தத் தம்மொடு கலந்த பாவம் நீங்கி ஞானம் மிகும். தவமும் அதனனெய்தும் பயனு முளவாதல் தானமாவது முற்றவமாவ துடையார்க்கே யாகலின் அவை யிலாதார், முயன்றதவம் முடிவுபோகாமை கண்டுழி மனந் தளர்ந்து இஃதோர்பயனின் முயற்சியேயாமென் றதனைக் கை

விடாராய் இயலுந் திறத்தாற் செய்வரேல் அஃதவர்க்கு மேல் வரும் பிறப்பிற் றவஞ்செய்தற்கு வித்தாகும்.

தனக்குரிய இல்லாளையுந் துறந்து மனத்தைத் தன்வழிப் படுத்தும் வலியுமின்றித் தன்மனமோடிய வழியே யோடிப் பிறர்க்குரிய மகளிரை விழைந்து தவவேடத்தின்கண் மறைந்து தவமல்லவற்றைச் செய்தலாகிய தீய வொழுக்க முடையாரும், புலன்கண்மேற் செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கவல்ல ரல்லாராயவழியும் தம்மைப் பிறர் நன் குமதித்தற்பொருட்டு யாம் பற்றற்றேமென்று சொல்லி வேடத்தின் மறைந்தொழுகுவாரும். நெஞ்சிற் றுறவாதுவைத்துத் துறந்தார்போலத் தானம் பெற வேண்டிப் பிறரை வஞ்சித்து வாழ்வாரும் இவர்போல்வார் பிறரும் பின்னர் என்செய்தே மென்செய்தேமென் றிரங்கும் வகை அவர்க்குப் பல துன்பங்களு முளவாம்.

---

## கஎ. அதி. கள்ளாமை.

கள்ளாமையாவது பிறருடைமையாயிருப்ப தியாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ளக் கருதி அதனைச் செய்யாமை தவஞ் செய்வார்க்குக் களவாகியவதனைச் செய்யக் கருதுதலு மாகாது. அவர்தமக் கின்றியமையா விரதங்களாவன அருளுடைமை கள்ளாமை வாய்மை வெகுளாமை முதலியன வாம். தவத்தனுவான் யாதொரு பொருளையும் பிறரை வஞ் சித்துக்கொள்ளக் கருதாவகை தன்னெஞ்சினைக் காத்தல் வேண்டும்.

களவின்கண்ணே மிக்க வேட்கையுடையார் காட்சி முதலிய வளவைகளான் உயிர்ப்பொருளையும், அதற்கு அநாதியாய் வரு கின்ற நல்வினை தீவினைக் குற்றவிளைவுகளையும், அவற்றான் அது பிறந் திறந்து வருதலையும், அவற்றைக் கெடுத்தற் குபாயமா

கிய யோக ஞானங்களையும், அவற்றா னன்றெய்தும் வீட்டினை யும் அளத்தலாகிய நெறியின்கணின்று அவ்வளக்கப்பட்டனவற் றுள் தீயனவற்றினீங்கி நல்லனவற்றின்வழி யொழுகமாட்டார். களவுந் துறவும் இருளு மொளியும்போலத் தம்முண் மாறாக லின் ஒருங்கு நில்லா. உயிர் முதலியவற்றை அளந்தறிந்தார்க் குத் துறவறஞ் சலியாது நிற்குமாறுபோலக் களவையே பயின் றவர் நெஞ்சத்து வஞ்சனை நிலைநிற்கும். துறந்தார்க் குணவாக வோதப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலாயினவும் இல்வாழ்வார் செய்யுந் தானங்களுமாய களவல்லாதவற்றை நுகர்ந்து அவ்வளவா னிறைந்திருத்தலை யறியாதவர், பொரு ளுடையாரை வஞ்சிக்குமாறும் அவ்வஞ்சனையால் அதுகொள்ளு மாறும் கொண்டவதனாற் றாம் புலன்களை நுகருமாறும் முத லாய தீய நினைவுகளை நினைந்தபொழுதே அஃதுள்ள வறங்களை யும் போக்கிக் காந்த சொற்செயல்களைப் புகுவித்து அவரைக் கெடுக்கும்.

களவுசெய்தல் துறந்தார்க்கேயன்றி இல்வாழ்வார்க்கும் எப்பொழுதும் கேட்டினை விளைக்கும். களவினா னுளதாகிய பொருள் வளர்வதுபோலத் தோன்றிப் பழிபாவங்களை நிலை நிறுத்தி விரைவிலே செய்தவறத்தையுங் கெடுத்துத் தானுங் கெடும் களவுசெய்பவர் அப்பொழுது யாவராயினுங் காண் பாரோ அடிப்பாரோ கொல்வாரோ வென்றும் பின்னர் அரச னறிந்து தண்டிப்பானோவென்றும் பயந்து பயந்து மனந் திடுக் குறுதலா னெப்பொழுதும் மனத்துயர முடையராவர். களவு செய்தவர் இம்மைக்க ணரசனாலும் பிறராலுந் தண்டிக்கப் பட்டு எல்லாராலு மிகழப்படுவர்; மறுமைக்க ணரகத்துன்ப மெய்துவர். ஒருகாற் களவு செய்தவரென்று அறியப்பட்டவர் சென்றசென்ற விடங்களிலெல்லாம் பிறராற் செய்யப்பட்ட களவுகளும் அவராற் செய்யப்பட்டனவென்றே நினைக்கப்படும். களவினா னுளதாகிய மகிழ்ச்சியைக்காட்டினும் மிக்க மகிழ்ச்சி பிறிதொரு குற்றத்தா னொருவற் குளதாகாது. ஒருவன் தான் கள்வனென்னும் பெயரை யோர்கணப்பொழுதினுண் மிக வெளிதிற் பெறலாம்; கள்வனல்லனென்னும் பெயரையோ

வெனின் மரணபரியந்தம் பெரும் பிரயாசத்துடன் றன்னைக் காத்து மிகவரிதிற் பெறுதல்வேண்டும். களவு செய்தவரே யன்றிக் களவுசெய்ய ஏவினவரும் அதற்குபாயஞ் சொன்னவரும் அதனை மறைத்தவருஞ் செய்தவரோடு கூடினவரும் கள்வரென்றே யெண்ணப்படுவர். களவென்னுங்குற்றமொருவர்மாட் டுளதேயாயின் அது அவர்க்கேயன்றிப் பிறர்க்குந் தன் முதலாயின விளைவித்தன்முதலிய தொழின்முயற்சிக் கிடையூறாகும், ஒற்றுமையைக் கெடுக்கும், பகையை யுளதாக்கும், பொருள்வருவாயை யிலதாக்கும், அவர்பொருட் டவ்வூரிலுள்ளாரும் பிறரா விகழ்ச்சியை யெய்துவர்.

அறியாமையினாலே அப்பொழுது இனிதுபோலத் தோன்றினுங்களவு பின்பு தொலையாத துயரத்தைக் கொடுத்தலானும், இப்பிறப்பானெய்தும் பயனாய அறம்பொருளின்பங்களைக் கெடுத்தலானும் அது தோன்று மிளமைப் பருவத்திற்றானே பின் வளர்ந்து பயிற்சியானிலையாவண்ணம் யாவரு மதனைக் களைந்துவிடல்வேண்டும். ஒருவன் தன்பொருளைப் பிறர் களவிற் கவர்ந்தபொழுது தான் துயரப்படுதல்போலவே பிறர்பொருளையுந் தான் களவிற் கவர்ந்தால் அவருந் துயரப்படுவரென் பதை உய்த்துணர வல்லனாயின் அவன் ஒருபோதுங் களவு செய்ய உடன்படான். பிறர்க்குத் தனதெத்துணைப் பெரும் பொருளையும் மனமுவந்து கொடுக்குமொருவன் மிகவற்பமான பொருளையேனுங் களவுகொடுத்தால் மனம்மிகவருந்துவன். ஒருவன் களவினாலெய்திய பொருள், மீன்விழுங்கிய தூண்டின் முட் கட்பொதிந்துள்ளவிரையென, இம்மைக்கணவன்புகழ் பொருண் முதலிய வனைத்தையுங் கெடுத்து, உயிருடையனேனும் இறந்தவனேயென யாவரானு மெண்ணச்செய்து மறுமைக்கணிரயத்தினும் புகுத்திவிடும். அவன் உயிரோடிருக்குங் காலமெல்லார் களவுசெய்பவரதார் சமூகத்துத் தன்குற்றநோக்கித்தன்னைச் செத்தாரு ளொருவனாக வைத்தே நாணிப்பொதுங்கிப் பேசும் வல்லமையற்றுச் சென்றிருப்பன். இல்லறஞ்செய்வார் யாவரும் கள்ளாமையை யெள்ளாமற் றம்மனத்தின்கட் போற்றிப்பேணி அதனை விரதமாகக்கொண் டொழுகுதல்வேண்டும்.

பொருளைப்பேணி அறஞ்செய்பு மில்வாழ்வான் தான் வறியனென்று கருதி அது தீர்தற்பொருட்டும் பிறன் பொருளை அவன் அறியாவகையால் வஞ்சித்துக்கொண்டு செய்தவறம் அப்பொருளுடையானைச் சேர அவன்றான் பழியையும் பாவத்தையுமே யெய்துவன். இங்ஙனமாகத் தனக்குரிய பொருளையும் அதனது குற்றம்நோக்கித் துறந்துபோந்த தவத்தன் பின் பிறர்க்குரிய பொருளை நன்குமதித்து அதனை வஞ்சித்துக்கோடற்கு அவரது சோர்வு பார்க்கும் மருட்சியனானால், அவன் மாட்டு உயிர்கண்மேல் அருள்செய்தலே தனக்கு உறுதியென்றறிந்து அவ்வருளின் வழுவாதொழுகும் தெருட்சியுளதாமாறும் பழிபாவங்களிலவாமாறும் இல்லையே. காமம் பொருளவா முதலாயினதன்கண்ணே தோன்றி நலியாநிற்கவும் அவற்றினதின்மை கூறிப் புறத்தாரை வஞ்சித்தொழுகும் வஞ்சனைபொருந்திய மனத்தையுடையவன் அந்நலிவு பொறுக்கமாட்டாது பிறர்பொருளைக் கவர்ந்தொழுகும் மறைந்தவொழுக்கத்தையும் மறைக்கின்ற வாற்றையும் உடம்பாய் அவனோடு கலந்துநிற்கும் பூதங்களைந்து மறிந்து அவனறியாமற் றம்முள்ளே நகும். தன்னைக் கெடாமலும் தன்னுளியைக் கொல்லாமலும் கள்ளாமையைத் தன்மாட்டுக்காக்க வல்லவனே தவத்தனாவான்.

---

## கஅ. அத். வாய்மை

வாய்மையாவது பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுந்தன்மை. நிகழ்ந்தது கூறலே மெய்ம்மையெனவும் நிகழாதது கூறலே பொய்ம்மையெனவுஞ் சொல்லப்படுமாயினும் கேடாதல் சாக்காடாதல் எய்தநின்றதோருயிர் பிறிதோருயிர்க்குத் தீங்குபயவாத பொய்ம்மைச் சொற்களானே அக்கேட்டினும் அல்லது சாக்காட்டினும் நீங்கி இன்புறுதற் கேதுவாமாயின் அச்சொற்களும் மெய்ம்மைச் சொற்களின் பாலவாம். ஆகவே தீங்குபயவாத நிகழ்ந்தது கூறலும் நன்மை பயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மையாம்; நன்மை பயவாத நிகழாதது கூறலும் தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்ம்மையாம்.

வாய்மையின் வழுவாது மன்னுயி ரோம்புவார்க்கு எய்து தற்கரிய பொருள்களொன்றுமில்லை. வையத்தின்கண் வாய்மையென்னு மதனையேயன்றி வேறொன்றையுந் தூய்மையென்று சொல்லுதற்கில்லை; பொய்ம்மையென்னு மதனையேயன்றி வேறொன்றையுந் தீமையென்று சொல்லுதற்கில்லை. என்னை? தூய்மைகட்கெல்லா மேதுவாயுள்ளது வாய்மையும் தீமைகட்கெல்லா மேதுவாயுள்ளது பொய்ம்மையுமேயாகலான். ஒருவற்கு நல்லனவற்றுக்கெல்லா மேதுவாயுள்ளதும் அவற்றை நிலைநிறுத்த வல்லதும் இம்மை மறுமை வீட்டின்பங்களைத் தரவல்லதும் வாய்மையே. ஒருவன் ஒருகாலேயெனினும் வாய்மையிற் றவறினால் அஃதுலகம் முழுவதையும் ஆளுதலாகிய ஆக்கமெய்தவரற்பாலதா யுளதாயினும், அல்லதவனதனிற் றவறானேயெனின் அஃதுடம்பினின்றும் உயிர் நீங்குதலாகிய கேட்டை யெய்தவரற்பாலதா யுளதாயினும் அவன் அவ்வாய்மையிற் றவறாமையே நன்று.

பொய்ம்மையே பாவங்கள் விளையும் பூமி, அதுவே யொருவனைப் பற்பல பிறவிகளினும் புகுவித்து முளைப்பிக்கும் வித்து, வறுமைக்கும் நரகத்துக்கும் ஏதுவாயுள்ளதும் அதுவே. பொய்ம்மை யொன்றானே இம்மையிலே இல்வாழ்க்கையும் மக்கட்பேறும் உறவு மன்புஞ் சீருஞ் செல்வமும் வலியு மொளியும் புண்ணியமுந் தவமு மின்பமுமாகிய இவையெல்லாம் அழிந்துவிடும், மறுமையிலே அவனை யங்காந்து விழுங்கிய நரகம் பின் உமிழ்தலை விரும்பாது.

ஒருவன் தன்னெஞ்சறிவ தொன்றனைப் பிறரறிந்திலரென்று பொய்த்தானாயின், அதனையறிந்த அவனெஞ்சே அப்பாவத்திற்குக் கரியாய் நின்று அவனை யதன்பயனாய துன்பத்தை யெய்துவிக்கும். மெய் சொன்னவனுக்கு அதனால் ஒரு கேடு வந்ததாயினும் உள்ளமகிழ்ச்சி யொருபோதும் நீங்காது. உள்ளதை யில்லதாகவும் இல்லதை யுள்ளதாகவுங் கூறும் பொய்யர், செல்வம் முதலியவற்றான் எத்துணை மாட்சிமையுடையராயினும் அவ்விழிவான் ஒளிநீங்க இருண்மயமாவர்.

பொய்யன் ஒருகாற் கூறியது மெய்யேயாயினும் பிறர் அதை நம்பார். எப்பொழுதும் மெய்யே கூறி ஒருவன் ஒருநாளொரு பொய்யைக் கூறினனேயாயினும் அதனையறிந்த பிறர் அதன் பின் அவனை எப்பொழுதும் பொய்யனென்றே கொள்வர். பொய் சொன்னவன் அதைத் தாபிக்கப்புகின் அஃதவனேன் பது பொய்சொல்லற் கேதுவாகும். இங்ஙனமே அவன் வாழ் நாண்முழுதும் பொய்யைக் கூசாது சொல்லுந் தன்மையனுமவன். ஒருகாற் பொய்சொன்னவன் தான் சொன்னது பொய்யென்று ஒரேமுறையி லொத்துக்கொள்வனுயின், அவன் முன் கூறியது பொய்யாயினும் பின் அதனை மறைக்கக் கருதிப பலபொய் கூறுமைக்கும் மறைக்கத் துணியாதவனெனப் பிறர் மெச்சு தற்கும் அஃதேதுவாகும். பொய் கூறுவோன் களவுமுதலிய மற்றைப் பாவங்களைச் செய்தற்கு மஞ்சான். பொய் கூறலான் ஒளியிழந்த தனக்கு ஏனைப்பாவங்களைச் செய்யாமையான் அஃ தெய்தவருமோவென்னும் நினைவு அவற்குளதாய்ப் படி முறையே நல்லொழுக்க நெறியினின்றும் வழீஇப்போதலையே மேற்கொள்வன். பொய்யானது மறைக்கப்படாததொன் றுகலா னும், வருத்துவார் பிறரொருவரை வேண்டாது தானே தன்னை யுடையானை வருத்துவதொன் றுகலானும், அருள் நடுவுநிலைமை முதலிய நற்குணங்களைக் கெடுத்து ஒருவற்கு எல்லாரானு மிகழ்ற்பாட்டினைக் கொடுப்பதொன் றுகலானும், அறம்பொரு ளின்பங்கட் குரிய தொழின்முயற்சிகட்கு வேண்டிய துணையா வார தொற்றுமை மதிப்பு முதலியவற்றுக் கிடையூறுயுளதாக லானும் யாவரு மதனை மறந்தேனும் விளையாட்டுக்கேனுங் கூறலாகாது.

ஒருவற் குடம்பு தூய்தாந்தன்மை நீரானேயுளதாம், அதுபோல மனந் தூய்தாந்தன்மை வாய்மையா னுளதாம். அவன் மெய்யுணர்வைப் பெறுதற்கு மஃதேதுவாம். பிறர் துணையையும் பொருட்செல்வத்தையும் நன்குமதிக்கற்பாட்டினை யும் இம்மை மறுமை வீட்டின்பங்களையும் தருதற்கோர் சிறந்த ஏதுவாயுள்ள வாய்மையையே யாவரு மெப்போதுங் கூறுதல் வேண்டும்.

---

## கக. அதி வெகுளாமை.

வெகுளாமையாவது சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன்மாட் டுளதாயவிடத்தும் அதனைச் செய்யாமை.

மனக்கலக்கத்தை யுளதாக்கி அறிவைக் கெடுத்தெழுகின்ற வெகுளியானது வெகுளப்பட்டார்மாட் டொருவற்கிருந்த அருளைக் கெடுக்குமேயன்றி அவர்க்குத் துன்பம்விளைக்கும் சொற்களைக்கூறவும் செயல்களைச்செய்யவும் ஏவியும்விடுமாகலின் அருளுடைமையை விரும்புவார் யாவரும் எப்பொழுதும் அதனைத் தோன்றாவண்ணம் அடக்கிக் கோடல்வேண்டும். பெருகி வரும் வெள்ளத்தைத் தடுத்தல் மிகவரிது, தடுத்திருந்த தடையாகிய வரம்பை யுடைத்துவிடுதலோ மிகவெளிது. அது போலக் கோபத்தைத் தடுத்தல் மிகவரிது, தடுத்திருந்த பொறைமுதலிய நற்குணங்களை அறவே விடுத்தலோ மிக வெளிது. வெகுளியை வெளிப்படாவண்ணம் இலகுவிற்றடுக்க வேண்டினோர் பொறைமுதலிய நற்குணங்களைத் தங்க ணீங்காமற் காக்கக்கடவர்.

மாந்தர்க் கவாவுடைமையான் விழைவுண்டாம்; விழைந்ததை யெய்தாமற் றடையுளதாயவழி வெகுளி தோன்றும். தடைகளாவன விழைந்தபடி விழைந்தவற்றை யெய்தாமைக் கேதுவாய்ப் பிறர்பாற்படு நிகழுஞ் சொல்லுஞ் செயலுமே. அவ் வெகுளி தோன்றியபொழுதே விவேகிகளாயினோர் அதனை வளர்த்தலாற்று மெய்தற்பாலனவாய கேடுகட் கஞ்சித் தம்மறிவாகிய கருவியா னடக்கிவிடுவர். அடக்காரேயாயின் அவர் மனம் மிக மயங்கும். மயங்க, முன்னிருந்துள்ள உள்ள மகிழ்ச்சி முழுதும் நீங்கும். நீங்கத், துன்பமே குடிபுகும். குடிபுக, அத்துன்பத்தை நீக்கிக் கோடற்பொருட்டுக் கொடியதாகு மவ்வெகுளிக் கேற்பத் தீயவாய சிந்தனைகளுஞ் சொற்களுஞ் செயல்களும் அவர்மாட்டுளவாம். இங்ஙனமே அவர் பழிபாவங்களைச்செய்து இம்மைக்கட்டியவாய பகை வறுமை முதலியவைகளையும் மறுமைக்கட் டீய பிறவிகளையும்நரகத்துன்பத்

தையு மெய்துவர். யாவனொருவன் தனக்குத்தான் நல்லனு யிருத்தலை வேண்டினனேயாயின், அவன் அறிவின்மையான் வளர்த்துத் தானே தன்னைக் கெடுக்குங் கோபாக்கினியைத் தன்பாட்டுச் சுவாலித்தெரியாவண்ணம் அடக்கிக் கோடலைச் சாவதானமாகக் கொண்டொழுகுவன்.

ஒருவன் இன்னாதவற்றைப் பிறர் சொல்லியக்காலுஞ் செய்தக்காலுந் தோன்றுஞ் சினத்தை, தன்சினம் பலிக்குமிடத்துத் தடாதொழிவனேயாயின் இம்மைக்கட் பழியையும் மறுமைக்கட் பாவத்தையுமெய்துவன்; அவன் அதைப்பலியாதவிடத்துத் தடாதொழிவனேயாயின் பழிபாவங்கட்குமேயன்றி வெகுளப்பட்டாராற் செய்யப்படுமே தங்கட்கு மாளாவன். யாவர்க்கும் பலியாதவிடத்துத் தோன்றுஞ் சினத்தைக்காட்டினும் பலிக்குமிடத்துத் தோன்றுஞ்சினம் மிகவிரைந்துவெளிப்பட்டு மிக்குத்தோன்றும். இப்பேதத்துக்கேது சினத்தைச் செய்வார்மாட்டின்றிச் சினத்தின்மாட் டுள்ளதன்று. அப்பேத வேதுவைத் தமக்கு மிக நல்லதென்று சிந்தித்துக் கைக்கொண்டொழுகுவார், சினத்தைச்செய்த லோரிடத்து மாகாதென்பதைச் சிந்தியாததேனோ? பிறர்செய்த வின்னாதவற்றைக் கண்டமாத்திரத்தே வெகுளி தோன்றாவண்ண மடக்குத லன்று; அதனை யடக்குதலைக் காட்டினும் பொறுத்தல் மிகநன்று. பொறையாகிய வரம்பை யுடைத்தெழுஞ் சினம், அச்சினத்தைச் செய்தவனைக் கெடுத்தலோடமையாது அவன்ற னுறவினர் நட்டார் முதலிய பிறரையுங் கெடுத்தற்கேதுவாகும். அவ்வொருவனற் றுணையாவார் பலரும் அவ்வெகுளித் தீயை வளர்த்துக்கெடுவர். மூங்கிலிற் பிறந்த தீ அம்மூங்கிலைத் தகிப்பதனோடமையாது அம்மூங்கிற் காடு முழுவதையுந் தகிக்குமாறுபோல, அவ்வொருவன்மாட்டுத் தோன்றிய வெகுளித் தீ அவன் மனத்தையு மவனையுந் தகிப்பதனோ டமையாது அவன்றன் சுற்றத்தார் முதலாயினோர் யாவரையுந் தகித்தேவிடும்.

பிறாறியப் புறத்துப்போதராது தம்மனத்தின்கண் வெகுளியுடையார் ஆண்டே யதனை வளர்த்து அவ்வெகுளிக்குக் காரணராயினரோடு மனம் மிகவெறுப்புடையராய்ப் பகை

புடையாராவர். பின்னர் அவ்வளவோடமையாது படிமுறையே அப்பகையாயினரோடு தொடர்புடையார் நட்டார் முதலாயினரோடும் பகையுடையாராவர். அப்பகைக்குக் காரணராயினர் அறிந்திலரேயெனினும் அவரும் அறிவுடையாரெவரும் அவர் தன்மையைநோக்கி அவரை யணுகற்கு மஞ்சும்வகை பொழுதுவர். இங்ஙனமே எல்லாரையும் விட்டுநீங்கலானும் தம்மனத்தின் கட்குடிகொண்ட வெகுளியானும் அவர்க்கொருபோது மின்பமுளதாகாது துன்பமே குடிபுகு மாகலின் யாவருமெவ்வாற்றானுந் தம்மனத்தின்கண் வெகுளி தோன்றாமையை யெய்தும் வகை அம்மனத்தைப் பயிற்றிவிடுதல்வேண்டும். சினத்தலாற் கடையாயினர் இலகுவிதொன்றுபடாத கற்பிளவோடொப்பர்; இடையாயினர் தீயின்கண்வைத் துருக்கின் எளிதிதொன்றுபடும்பொற்பிளவோடொப்பர்; தலையாயினர் பிளந்தவுடன்றானே விரைந்தொன்றுபடும் அம்பூடுருவிய நீர்ப்பிளவோடொப்பர்.

ஒருவற்குளதாகும் வெகுளி எஞ்ஞான்று மவற்குக் கேட்டையே தருதலின் அத்தன்மைத்தாகிய வெகுளியை விளையாட்டுக்காயினும் ஓர் பயன் குறித்தாயினும் ஒருஞான்றுந் தன்கண் உளதாகக் காட்டலுமாகாது. பேதையாயினர் சிலர் சினத்தைத் தம்மாற்றலுணர்த்துவதோர் கருவியாகக் கொள்கின்றனர். அவரங்ஙனங் கருவியாகக் கொண்டவழியும் அஃதவர்க்குக் கேட்டையே தருமென்பதை யறிந்திலர்போலும். சினத்தைத் தன்னாற்ற லுணர்த்துவதோர் குணமெனத் தன்கட்கொண்டவன் அவ்வாற்ற லிழத்தலுங் கேட்டை யெய்துதலும், நிலத்தின்கண் அறைந்தவன்கை அந்நிலத்தை யுறுதல் தப்பாதவாறுபோலத் தப்பாது.

யாவனொருவன் தன்னை யிழிவாகச் சொல்லியக்கால் அவ்விழிவு தன்னிடத்துள்ளதாயின் தன்னைத்தானே நொந்து திருத்தமடைதலையும், அஃதில்லாததேயாயின் அவன் கூறியது பொய்யெனவும் அது நிலையாதெனவும் உட்கொண்டு பொறுத்தலேயன்றி அதனை யப்பொழுதே மறத்தலையுஞ் செய்ய வல்லவனே அறிவுடையானெனப்படுவன்; அவனே தன்கண் வெகு

ளியை வாராமற் காக்கவல்லன். தன்னை வைதவனை வாழ்த்
தினவனெனவும் தனக்குத்தீயவற்றைச் செய்தவனை நல்லவற்
றைச் செய்தவனெனவும் மனத்திற்கொண்டு யாவர்மாட்டும்
இன்சொல்லு மினியசெயலு முடையனாய் ஒழுகும் பயிற்சி
வெகுளி வாராமைக் கேதுவாம். அறிவுடையார் தாந் துன்பப்
படுதற் கேதுவாய தீயசெயல்களைப் பிறர் செய்தாராயின் அவற்
றாற் றாமெய்துந் துன்பந் தமது முன்னைவினைப் பயனாக வெய்தி
யதென வுட்கொண்டு அதனைச் சகித்திருப்பரேயன்றி அத்தீ
வினைகளைச் செய்தவரை வெகுளார்; அங்ஙனமன்றி வெகுளின்
தாம் மேலுந் தீவினைசெய்து அதன்பயனாய துன்பத்தினையும்
ஒருங்கே அனுபவிக்கவேண்டி வருமேயென்னு முண்மையை
அவர் ஒருபோதும் மறவார். வினைப்பயன் செய்தவனைத் தப்
பாது சென்றடையுமாகலின், துன்பம் வாராமற் றன்னைக்
காக்க வேண்டினானொருவன் தீவினை செய்தற்கேதுவாய வெகு
ளியைத் தன்கண் வாராமற் காக்கக்கடவன்.

பிறர்சீரைச் சொல்வதேயன்றிச் சிறுமையைச் சொல்லாமை
யையுமநட்டார் நொதுமலர்பகைவரென்னும் பேதமின்றி எல்லார்
மாட்டுமொப்ப அருளுடைமையையும் விரதமாக வுடையவரே
வெகுளாமையை யுடையவராவர். பாலூட்டி வளர்த்தார்க்கும்
நஞ்சையே யுமிழ்ந்துகொல்லும் நாகபாம்பைப்போல நன்மை
யாவனவற்றைச் செய்தார்க்கும் தீமையாவனவற்றையே செய்
வாரும், இகழ்ந்துரைக்கினும் புகழ்ந்துரைக்கினும் அவ்வவ்
வுரைகளையே எதிரொலிக்கச்செய்யும் மலையைப்போலத் தீமை
யாவனவற்றைச் செய்யினும் நன்மையாவனவற்றைச் செய்யி
னும் செய்தவர்க் கவ்வவற்றையே மறித்துத் தாமுஞ் செய்
வாரும் தன்னை வெட்டிய குடாரத்துக்குந் தனது நறுமணத்
தையே கொடுக்குஞ்சந்தன மரத்தைப்போல இறத்தற்கேது
வாய தீமைகளைச் செய்தார்க்கும் நன்மைகளையே செய்வாரு
மென முத்திறத்தாராயுள்ளவரெல்லார்மாட்டும் விழைவுவெறுப்
பின்றி நன்மையாவனவற்றைச் செய்வாரே வெகுளியை யறவே
களைந்தவராவர்.

அவாவே யொருவற்கு வெகுளியை யுளதாக்கலின் அவ்வவாவென்னுங் காரண மிலதேயாக அதன்காரியமாகிய வெகுளியு மிலதாம். காரணத்தாற் பயனுளதாவது பெரும்பான்மையும் அது காரியமாயவழியே யாகலின் ஒருவன் றன்மாட்டு வெகுளி வாராமற் காக்க வல்லனாயின் அவன் அவாவுடையனாயினும் அதன் பயனை யெய்தாதவனாவன். அவாவறுத்த முனிவராய தலைபாயினார்தாமும் பயிற்சி வயத்தான், அஃதுள்ளவளவோர் கணப்பொழுதேயெனினும் வெகுளி யெய்துவர். உடம்பொழியுங் காலத்திற்றா னதுவு மொழியும். அத்தன்மைத்தாகிய வெகுளியைக்கல்வி யறிவானும் அருளுடைமையானும் பொறையானுந் தவத்தானும் உய்த்துணர்வானும் மெய்யுணர்வானும் அவாவறுத்தலானும் படிமுறையே யடக்கிக் களைந்துவிடுதலில் யாவருஞ் சாவதானமா யிருத்தல்வேண்டும்.

---

## உ௰. அதி. நிலையாமை

நிலையாமையாவது தோற்றமுடையன யாவும் நிலையுதலில்லாத்தன்மை. யாக்கை முதலிய தோற்றமுடையனவற்றின் நிலையாமையையுணர்ந்து அவற்றின்கட் பற்றுச்செய்தலை யொழிந்து மெய்யுணர்ந்தவாவறுத்தவனே முற்றத் துறந்தவனாவன். மயங்கியவழிப் பேய்த்தேரிற் புனல்போலத் தோன்றி மெய்யுணர்ந்தவழிக் கயிற்றி லரவுபோலக் கெடுதலிற் பொய்யென்பாரும், நிலைவேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந்திறக்குமென்பாரும், ஒருவாற்றான் வேறுபடுதலும் ஒருவாற்றான் வேறுபடாமையு முடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கேயுடைய வென்பாருமெனப் பொருட்பெற்றி கூறுவார் பலதிறத்தாராயினும் அவரெல்லார்க்கும் அவற்றது நிலையாமை யுடம்பாடேயாம். நிலையுதலிலவாகிய பொருள்களை நிலையுதலுடையவென்று கருதி அவற்றின்கட் பற்றுச்செய்யும் புல்லிய வறிவினையுடைய ராதல் விடெய்துவார்க்கிழுக்காம்.

இளமையு மழகும் யாக்கையுஞ் செல்வமும் வாழ்க்கையு மின்பமுமென் றிவைமுதலாயின நில்லாமையையே நிலைபேறு யுடைமையை உலகின்கட் காண்டலின் அவற்றை வெறுத்து, நிலையுத லிலவாயின வுளவாகவே அவற்றின் மறுதலையாய நிலையுத லுளவாயினவும் உளவாமெனக் கருதலா னுட்கொண்டு அவற்றைப்பெற முயறலைச் செய்தலே யாவர்க்கு மறிவின்பால தாம். இவ்வுலகின்கண் இளமையு மழகும் வானவிற்போற் றோன்றி அழிவெய்துவன வாகலானும், யாக்கைகணீரிற் குமிழிகள்போலத் தோன்றித் தோன்றி அழிவெய்துவன வாகலானும், செல்வம் மின்னலைப்போலத் தோன்றி விரைந்தழிவெய்துமாகலானும், ஒருவன் வாழ்க்கை கனவுகண்டதுபோன் றழிந்துகொண்டேவந் தொழியு மாகலானும், துன்பமாகிய வெல்லையையுடைய வின்பம் நீர்த்திரைபோலத் தோன்றித் தோன்றி அழிவெய்து மாகலானும் அவற்றை நிலையாதன வென வுய்த்துணர்ந்து, இளமையழகுமுதலிய வவையெல்லாம் எஞ்ஞான்று மொரே பெற்றியவாய் நிலையாயுள்ள வீட்டுலக வாழ்வின் இன்பத்தை யாவருமெய்த முயறலைச் செய்தல் வேண்டும்.

தந்தையுந் தாயுந் தாரமுந் தமரும் நட்டாரு மயலாரு மென் றிவர்முதலாயினோர் கூடுங் கூட்டம் சந்தையிற்கூட்ட மொக்கு மாகலானும், செல்வம் வருதலும் போதலும் கூத்தாட்டைச் செய்யு மரங்கின்கட் காண்பார்குழாம் வருதலையும் போதலையு மொக்கு மாகலானும், அகத்துறுப்பாய்ப் போற்றிப் பேணிப் புனைந்து காத்துவைத்திருந்த வுடம்பையும் நீத்துச் செல்லுமெல்லை வந்தஞேற்புறத்துறுப்பாய அத்தந்தைமுதலாயினோரும் செல்வமுந் துணையாமென் றெண்ணுதற் கிடமில்லை யாகலானும் அறிவில்லாதாரே யானெனதெனப் பற்றுச்செய்திருந் தவமாய்த் தம்வாழ்நாளைக் கழிப்பர்.

வாழ்க்கையுஞ் செல்வமு மில்விடத்தவாகக், கண்ணீர் சொரிந்து கதறியழும் மனைவியு மேனைமாதரும் புறங்கடை வாயிற்க ணின்றனராக, மைந்தருஞ் சுற்றத்தாரும் உள்ள

பெயரை யொழித்துப் பிணமென்று வேறோர் பெயரிட்டுச் சுடுகாட்டுக்குச் சுமந்தனராக அவ்வுடம்பினுள் அதுகாறு நின்று கூத்தாடிய கூத்தன் அதனை விட்டுநீங்கி யாண்டுச்சென் றனனோ? அவன்றானுவந்து பற்றுச்செய் தாடிய கூத்தையும், அவ்வியாக்கைக் கூட்டையும், அக்கூத்துக்குவேண்டி யீட்டிய பொருள்களையும், சுற்றத்தார் முதலிய காண்போர் குழாத் தையும், உலகவரங்கையும் சடிதியில் விட்டுநீங்கிக் கரந்தேகற் கேதுவாய் அவன்மாட்டு நிகழ்ந்த வினைநிகழ்ச்சிதான் யாதோ? அக்கூத்தனு மவன்ற னெண்ணமுஞ் சொல்லுஞ் செயலு மெல் லாக்கூட்டமும் மாறுபட்டு வேறுபட்டு நிலைபிறழ்ந்து பழுது பட்டனவே! தனது அநுசிதமான கோலத்தையும் எண்ணங் களையும் சொற்களையும் செயல்களையும், பின்னர் அவ்வெண்ண முதலியவற்றுக்கு மாறாக வெய்தப்போகாநின்ற முடிபையும், தொடர்பில்லாதார் புறத்து மகத்தும்நின்று காண்பரேற், காண் டற்கருவருத்து எள்ளிநகையாடி நாணியொதுங்கிச் செல்வ ரென்பதை அப்பொழுதுதா னெண்ணிக் கரந்தேகினன் போலும்.

என்பும் இறைச்சியும் இரத்தமும் மச்சையும் மேதையும் சுவேதநீருமென்னு மிவற்றா னமைக்கப்பட்டுத் தோலினால் வேயப்பெற்ற வில்லமாய்த், திப்பியமான பாலைப் பழத்தைத் தேனைச் சர்க்கரையை யுட்புகுத்தினும் அவற்றை அருவருப் பைத்தரும் மலசல முதலாயினவாக வாக்க வல்லதாய், அம்மல முஞ் சலமும் கோழையும் மூளையும் வெயர்வையும் எச்சிலு மென் றிவைமுதலாயினவற்றின் றுர்க்கந்தம் வீசுவதாய்ப், பிறப்புப்பிணி மூப்புச் சாக்காடென்னு மிவற்றான் வருந்துவ தாய்க், கணப்பொழுதேனும் மாற்றமெய்தாமை யிலதாயும் நிலையாமையுளதாயு முள்ளதாய், அம்மலஞ்சல மிரத்தம் முத லியவற்றின்கட்டோன்று மெண்ணிறந்த புழுக்களும் தன்னோ டுடன் வாழுதற் கிடமானதாய், ஐம்புலக்கள்வர் கலகமிட்டுத் தன்னை யலைப்பதற் கேதுவானதாய்ப், பொய்யான வின்பத்தை மெய்யானதெனக் காட்ட வல்லதாயுமுள்ள மாயையாக்கை யாகும் தானிருக்குமில்லத்தைத் தானெனக் கருதி நீராற்கழுவி

நறுமணப் பொருள்களாற் றுர்க்கந்தத்தைப் போக்கி ஆடையாபரணங்களால் அலங்கரித்து மகிழ்ந்து வாழ்ந்திருந்தவன் இறந்துபட்டனுரன்றேனுந் தான்வேறு அதுவேறென்பதை அறியாதொழியான்.

பொற்பாத்திரமேயெனினும் மலங்கிடந்த பாத்திரத்தைப் பொருளாசையுடைய புல்லறிவாளரும் அருவருத்துத் தீண்டியெடுக்கவுடன்படார். அஃதங்ஙனமாக உடற் பாத்திரமோவெனின் அம்மலம்முதலிய அழுக்கு நிறைந்துள்ளதுமேயன்றி இறைச்சிமுதலிய அநுசிதமானவற்றானுயதூஉம், விட்டுநீங்கிய வழிப் பதனழிந்து துர்க்கந்தம் வீசிப் புழுத்துக் கெட்டழியும் பான்மையதூஉமென்பதை யறிந்துவைத்தும் அதனிடத்தருவருப்பின்றி அமர்ந்திருக்கும் மாந்தர்தம் அறியாமை யிருந்தபடியென்னே? அதன் றன்மையை யுள்ளபடியறிந்து, அதனிடத் தருவருப்புடைய ராயினமையா னன்றே நல்லறிவாளர் அதனை நீக்கிக் கோடற்பொருட்டுத் துறப்பாராயினர். இரத்தமுமீருளுந் தசையு நரம்புங் குடருங் கொழுப்பு மூளையும் வழும்பும் மல்முஞ் சலமுந் தோற்போர்வையான் மறைக்கப்பட்டுப் புழுக்கள் வாழுந் தம்முடலத் தருவருப்பைச் சகிக்கலாற்றாராய நல்லறிவாளர், அதன்கட் டாமரையிலைக்க ணீர்போன்று பற்றற்றிருந்து பிறவியை யொழித்துவிடும்வழி நாடிச்செல்வாராயினர். ஏனைப்புல்லறிவாளரோவெனின் அவர், யாக்கைவேறு தாம்வேறென்பதை உள்ளபடி யறியாவகை மயக்கும் அவிச்சையென்னும் வித்தினின்றும் அகங்காரமென்னும் முளையாய்த் தோன்றி, அவாவென்னும் வேரையூன்றி, விழைவு வெறுப்பென்னுங் கொம்பரைப்போக்கி, அவத்தைப் பூத்துத், துன்பத்தைக் காய்த்து, மரணப்பழத்தைப் பழுத்து, அளவில்லாத காலம் நிலையாய் நிற்கும் மாயாவடிவக் கன்மமென்னும் மரமாய், ஊழிபெயரினுந் தந்நிலை பெயரா துழல்வர்.

அற்றேலஃதங்ஙனமாக; மாந்தரெமதெனமகிழ்ந்து போற்றிப் பொதிந்துவைக்கும் செல்வமோவெனின் அதுவும், ஓர் யாக்கை யுள்ளவளவேனும் ஒருவர்மாட்டு நிலைநில்லாது அழி

வெய்துவதே தோன்றும். அம்மாந்தர் பொருட் செல்வமுடையரா தற்கு முற்பிறவிகளிற் செய்துவைத்த நல்வினையே காரணம். அக்காரணத்தால் அதனைப் பெற்றுடையா னொருவனை அத னொழிவின்க ணதுவும் விட்டுநீங்கும், வரைவின்மகளிர் கைப் பொருளுடையாரைக் காமுற்றுச் சேருமாறும், அப்பொருள் குன்றியகாலத்து அவரைவிட்டு நீங்குமாறும்போலத், திருமகள் நல்வினையுடையாரைச் சேர்ந்து அவ்வினைத் தீர்வின்கண் அவரை விட்டு நீங்குவள்; அவள் அவ்வப்பொழுதைக்கேயன்றி யாவர் மாட்டும் எவ்வெப்பொழுதைக்கு முறவுடையளல்லள். ஒருவன் பொருளை வெறுத்துக் கடலகத்துச் சொரியினும் நல்வினைப்பய னுடையனாயின் அஃதவனிடத்து மீட்டும் வந்துசேரும்; பேழை யுட் பொதிந்துவைத்துக் காத்தனனாயினும் நல்வினைப்பய னில் வழி அஃதவனைவிட்டு நீங்கிப்போகும். நல்வினை யொழிவின்கட் செல்வமென்று கூறி அந்நல்வினை யுடையானை வந்துசேருஞ் செல்வத்துக்குச் செல்வமென்னும் பெயர் தகும். இங்ஙனமே செல்வமென்பது நிலையாமையையே நிலைபேறாயுடையதென்பது.

பிறந்தவுயிர்கட்குச் சிற்றின்பமென வொன்றில்லையே யாயிற் றுன்பந் துன்பமாகாது. நல்லதென வொன்று மில்லையே யாயிற் றீயதென வொன்று மில்லையேயாம். சிற்றின்பமென்பது துன்பத்தி னந்தமே. துன்பத்தினத பாவமே சிற்றின்பமெனினு மிழுக்கில்லை. துன்பத்தினோர் நல்விளைவே யஃதெனினு மமை யும். என்னை? துன்பப்படாமலெய்துஞ் சிற்றின்ப மில்லையாக லின் துன்பமெனப்படும் நீரின்கட் டிரைபோலவின்பந் தோன் றித்தோன்றி அழிவெய்து மாகலின் ஒருயிர்க்குப் பிறவியென் பது துன்பசாகரமே. அத்துன்பசாகரத்தின்க ணமிழ்ந்திய வுயிர்கள் அச்சாகரத்தின் மேற்பரப்பை யெய்தி ஒருகால் விழித்ததை யொக்கும், அவ்வுயிர்க ளெய்து மின்பம். சத்தம் பரிசம் உருவம் இரசம் கந்தமென்னும் ஐம்புல நுகர்வும் நுக ருந்துணையும் இன்பம் பயப்பன இன்பம்போலத் தோன்றும்; நுகர்வினிறுதிக்கண் அந்நுகர்வினிகழ்ச்சி நிகழ்ந்ததென்பதும் பொய்யென்று சொல்லும்படி தேய்ந்திறும். மாந்தர் ஐம்புல நுகர்வானெய்து மின்பம் மிக்க விருளின்கண் மின்னலைப்போற்

றென்றி விரைந்தழிவெய்து மாகலின் யாக்கையுஞ் செல்வமும் முதலாயினபோல அதுவும் நிலையாமையையே நிலைபேறா யுடையது.

மக்களாய்ப் பிறந்தவர் யாவரும் இளமையு மழகும் படிமுறையே குன்றிவரச் சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப் பற்கழன்று நரைதிரைபெய்திப் பின் நோய் வாய்ப்பட்டுப் படுத்த பாயலுந் தாமுமாய் உலகநினைவொழிந்து கிடந்து வருந்தியதையும் பின்னிறந்ததையும், ஒருகோலோச்சிப் பற்பல தேயங்களையும் ஒருங்கே தனித்தாண்ட வரசரும் அத்தேயங்களையுந் தாமிருந்த தகைமாண்ட மாடமாளிகை முதலிய செல்வங்களையும் அதிகாரத்தையும் இழந்து காட்டகத்தே கரந்து திரிந்ததையும் பின்னிறந்ததையும், முல்லை முகையொத்த பாற்சோற்றைப் பொற்கலத்திட்டு அறுசுவைக் கறியோ டுண்ட செல்வரும் மட்பாண்டவோட்டைக் கையிலேந்தி வறிய கூழை யாசித்துத் திரிந்ததையும் பின்னிறந்ததையும், அழகிய பீதாம்பரத்தை யுடுக்கவும் பஞ்ச சயனத்தின்கட் டுயிலவும் பொறாது மெய்வருந்திற்றென் றழுதவரும் கந்தையுடைக்கும் கிழிந்த பாயலுக்கும் யாசித்தலைந் துழன்றதையும் பின்னிறந்ததையுங் கண்டுங் கேட்டுமுள மாகலின், இளமையு மழகும் யாக்கையுஞ் செல்வமும் வாழ்க்கையு மின்பமுமென் றிவை முதலாயின நிலையாதனவென்ப துண்மையேயாம். இவ்வுண்மையை யறிந்துளராகலினன்றே அறிவினாற் பெரியராயினோர் நிலையாத பொருளும் யாக்கையும் நிலையின பொழுதே தாமீட்டிய பொருளைச் சற்பாத்திரமாயுள்ளவர்க்குத் தானமுந் தருமமுஞ்செய்து அதனை லிம்மை மறுமையின்ப நுகர்தற்குரியராய்ப், பின் நிலையாயவின்ப நுகரும்பொருட்டுத் துறவறம்பூண்டு உய்யும் நெறிக்கட் செல்வாராயினர். நிலையாதவற்றையெல்லாம் நிலையாதனவென்று உள்ளபடியறிந்தவர் ஒருபோது மவற்றின்கட் பற்றுச்செய்யார். கந்தம் முதலியதன் மாத்திரையினின்றும் முறையே தோன்றும் பிருதுவிமுதலிய பூதக்கலப்பான் உளவாய மண்முதலிய சூக்குமதூல பூதங்களாலாய உலகும் உடம்பும் நிலையாதனவேயாம்.

---

## உக. அதி துறவு.

துறவாவது புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாய பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். ஒருவற் கெல்லாவற்றையுந் துறத்தலானே அவ்வெல்லாவற்றானு மெய்துந் துன்பங்க ளிலவாமேயன்றி அவை காரணமாக மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும் அவை நன்னெறிக்கட் சேறலானும் வருமின்பங்கள் பலவு முளவாம்.

மனத்தைத் துன்பத்தானும் பாவத்தானுமன்றி வாராத பொருள்கண்மேலல்லது வீட்டுநெறியாகிய யோகஞானங்களிற் செலுத்தவிடாது தடையாயுள்ள ஐம்புலநுகர்வைக் கெடுத்து, அவற்றை நுகர்தற்பொருட்டுத் தாம்படைத்த பொருண் முழுதையும் ஒருங்கே விட்டவரே துறந்தவராவர். பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்கு அதற்குக் கருவியாகிய தூல சூக்கும சரீரங்களும் இன்ப துன்பங்களான் உயிரோ டொற்றுமை யெய்துதலின் மிகையாம், ஆனபின் அதற்குமேலே இயைபில்லனவுஞ் சில தொடர்ப்பா டுளவாதல் என்னும்? அநாதியான அவிச்சையானே அகங்காரமுளதாம், அதனானே எனக்கிது வேண்டுமென்னு மவாவுளதாம், அதனானே அப்பொருட்கட் செல்லும் விருப்புளகாம், அவ்விருப்புக் கைகூடாதவழி வெகுளி யுளதாமென் றிவ்வாறு அறிந்தார் கூறக் கேட்டதுணையானே தலையாயினார் எல்லாப் பற்றையும் முற்றத் துறப்பர்; இடையாயினார் செல்வநிலையாமையையும் யாக்கைநிலையாமையையும் இளமை நிலைமையையும் ஏதுக்களா னுணர்த்திப் பெண்ணென்ப தெற்புச்சட்டகம் அருந்துயர்க் குரம்பையென் றித்திறத்தான் அதன்றன்மை தெருட்டக் கேட்டுத் துறந்து சந்நியாசநிலை யெய்துவர்; கடையாயினார் உலகப்பற்றைத் துறந்தனரேனும் இல்லாளோடு வனத்திற்சென்று விரதங் காத்தன்முதலிய செய்யும் வானப்பிரத்த நிலையையே யெய்துவர்; இங்ஙனமே துறந்தார் மூவகையினராயுளர்.

இல்லறத்தினின்று துறந்தவரதியல்பு, துயின்ற வில்லத்து நெருப்புப் பற்றிவளர்ந்து நெருங்கியவழி விழித்தெழுந்தவ

னொருவன், நில்லென்று பிறர் தடுக்கவும் நில்லானாய்ப், பொருளிழவையும் பொருட்படுத்தானாய் மனைவி மக்கள் முதலாயினோரையுந் திரும்பியும் பாரானாய்ப் பித்தனைப்போன்று கடுகித்துறந்தோடுவதை யொக்கும். துறவறத்தினின்றோர் தாம் முன்புநின்ற இல்லறத்தன்மையை யெண்ணிநோக்குங்கால், அவ்வில்லறத்தினின்றோர் தாமிளைஞராயிருந்தகாலத்துச் சிற்றிலிழைத்துச் சிறுசோறட்டு விளையாடியது முதலாயினவற்றை எண்ணிநோக்கியபோது அவை எத்துணையிழிவாய்த் தோன்றினவோ அத்துணையிழிவாய்த் தோன்றும்.

முற்றத் துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்; அங்ஙனந் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டவராவர். உடம்பும் மனைவியும் மக்களுஞ் சுற்றமுஞ் செல்வமுங் கல்வியும் வாழ்க்கையு மின்பமுந் துன்பமு முதலாயினவெல்லாங் கானற்சலமுங் கயிற்றிலரவுங் கனவும்போன்று தோன்றி மெய்யுணர்ந்தவழி யிலவாய் நிலைபாதனவெனக்கொண்டு அவற்றிற் பற்றினைத் துறந்து யானெனதென்ப தற்றவரே முற்றத் துறந்தவர். அங்ஙனந் துறவாதார் கருப்பமென்னு மிருட்சிறைச் சாலைக்க ணொருப்பின்க ணிருந்தவர்போன் றிருந்து, மலையினின்றுந்தலைகீழாய் வீழ்ந்தவர்போன்று வீழ்ந்ததை மறந்து, யானெனதென முறுகிய பற்றினையுடைய நெஞ்சினையுடையராய்க், குழவிப் பருவத்தின்கண் அழுகையானன்றித் தமது விருப்பத்தை வெளிப்படுத்தமாட்டாமை முதலியவற்றானும், பாலப்பருவத்தின்கட் குரவர்க் கஞ்சுதன் முதலியவற்றானும், காளைப்பருவத்தின்கட் கல்விக் கவாவன் முதலியவற்றானும், குமாரப் பருவத்தின்கட் பொருளெய்தவேண்டித் தொழிலைத் தேடி யலைதன் முதலியவற்றானும், புருடப்பருவத்தின்கட் காமவிகாரம் முதலியவற்றானும், மானவனும் பருவத்தின்கண் வாழ்க்கைக்கு வேண்டும் பொருடாளாற்றலாற் படைத்தன் முதலியவற்றானும், மனுடனும் பருவத்தின்க ணடுவுநிலைமையைப் போற்றல் கல்விசெல்வங்களி னகங்காரமெய்தல் அல்லது நல்குரவிற் றுன்பமெய்தன் முதலியவற்றானும், விருத்தனும்

பருவத்தின்கண் வலியாரும் மெலியருந் தொடர்புடையாரும் பிறரும் மதியாமை நோய்முதலியவற்றானும், பேரிளமாணும் பருவத்தின்கண் யாவரானு மிகழற்பாடு பெலமின்மை மிக்க நோயுடைமை நுகரமாட்டாமை முதலியவற்றானும் மரண வச்சத்தானும் மரணத்தானும் வாழ்நாளெல்லாந் துன்பமே யுழந்து அவமே யிறந்து பிறந் துழல்வர். பிறரொருவர் செத்தாரென் றிரங்கியழும் நாம், குழவிப் பருவஞ் செத்துப் பாலப் பருவஞ் செத்துக் காளைப்பருவஞ் செத்துக் குமாரப் பருவஞ் செத்துப் புருடப் பருவஞ் செத்து மானவனும் பருவஞ் செத்து மானுடப்பருவஞ்செத்து விருத்தனும் பருவமெய்தி இங்ஙனமே நாளுக்குநாட் சாகின்றேமே! அங்ஙனஞ் செத்துச்செத்து வருகின்ற நமக்கு நாம் அழாததேனோ?

இருவகைப் பற்றினையுந் துறந்தானொருவன், அங்ஙனந் துறவாதா ருலகவாழ்க்கையி னிகழ்ச்சியைப் புறத்தின்க ணின்று காணவல்லனாய்க் காண்பனேல், அத்துறவாதார் மலப் பாண்டமாகிய வுடம்பகத் தருவருப்பின்றி யுவந்திருத்தலையும், மலசலம் வெயர்வை முதலிய அழுக்குக் கழிதற்க ணுளதாகுந் துர்க்கந்தத்தைச் சகித்திருத்தலையும், பிறரிடத் தவ்வுள தாகுங்காற் சகிக்கமாட்டா திருத்தலையும், தம்மாட்டுளதாகு மத்துர்க்கந்தத்தை யுளதாகாம னீக்கிக்கோடற் கியலாமை யறிந்துவைத்தும் ஏனையவற்றின்க ணவ்வுளதாகாம னீக்கிக் கோடற்கு முயறலையும், பார்க்கத் தகாதவற்றைப் பார்த்தலையும், கேட்கத் தகாதவற்றைக் கேட்டலையும், உண்ணத்தகாதவற்றை யுண்டலையும் தீண்டத் தகாதவற்றைத் தீண்டலையும், எண்ணத் தகாதவற்றை எண்ணுதலையும், தாம் அங்ஙனஞ் செய்தவற்றைப் பிறர் அறியாமன் மறைத்தலையும், பசிமுதலியவற்றான் வருந்தலையும், உண்டன் முதலியவற்றா னெய்த்தலையும், சிற்றின்ப மெய்தலையும், அதனா னகங்கார மிக்வுறுதலையும், அதற்கேற்ப வெண்ணு மெண்ணங்களையும், அவ்வெண்ணங் கைகூடாவழி மனம் மிக வருந்துதலையும், அவற்றுளொன்றேனும் கைகூடிற்றேல் எல்லைகடந்து மகிழ்தலையும், அவ்வளவோ டமையாது மேன்மேலுஞ் சேறற்கு முயறலையும்,

அதற் கிடையூறுயினுரைக் கெடுக்க நினைக்கும் நினைவுகளையும், அவற்றுளொன்று சித்தித்துழிக் கொள்ளு மகிழ்ச்சியையும், அல்லுழியெய்து மிகழ்ச்சி முதலியவற்றான் வருந்துதலையும், இவைபோல்வன பிறவற்றையுங் கண்டுங்கண்டும் நல்லறி வெய் தப்பெறு விப்பேதை மாந்தர்தம் புல்லறிவாண்மை யிருந்தபடி யென்னையென் றெள்ளி நகையாடானு? புல்லறிவாளராய அவர் தாமோவ்வொருவரும் மற்றெல்லாரினும் எல்லாவற்றானும் மேம்படலையே விரும்பி, எண்ணிய வெண்ணியாங் கெய்தமாட் டாமையான் எஞ்ஞான்றுந் துன்பமே யுழப்பர். அவர் தாம் ஒருமித் திருப்பரேனும் ஒவ்வொருவரும் வீற்று வீற்றான நினைவுஞ் சொல்லுஞ் செயலுமுடையராய்ப் பித்தர்குழாம் போலுழல்வர். அவர்தாம் ஒவ்வொருவரும் ஈற்றின்கட் போற் றிப் புனைந்துகாத்த வுடம்பு நோய்வாய்ப்படப் படுக்கையுந் தாமுமாய்க் கிடந்து வருத்தமுற்றுப், பெரும் பிரயாசத்துடன் தமதெனத் தேடிப் பாதுகாத்து வைத்திருந்த பொருண் முழு வதையும் பிறர் தமதெனக் கொள்ளவும், தாமெனக் கருதிய வப்புலையரும் விரும்பாப் புன்புலால் யாக்கையைக் கழுகுங் காக்கையும் நாயும் நரியும் புழுவுந் தழலு முண்ணவும விடுத் துப் புறம்போந்து கரந்தேகுவர். அவர்தாம் இங்ஙனமே நிலையாதவற்றை நிலையினவென் றெண்ணிப் பொய்யின்பத்தை மெய்யெனக்கொண் டவமே யுலைவர். நல்லறிவாளராய்த் துறந் தார், நிலையாதவற்றை நிலையாதனவெனக் கண்டு, அவற்றின் கண் வைத்திருந்த பற்றினை யொழிந்து, மெய்யுணர்ந் தவா வறுத்து நிலையாய மெய்யின்ப மெய்த முயறலான், அவர் அவமாய நெறியினீங்கித் தப்பிப்பிழைத் துய்யுநெறிக்கட்சென் றுய்ந்தவராவர்.

பசியான் வருந்தி இரையைத்தேடி அலைந்துதிரிந்த பற வைக்கூட்டத்துள், நல்லுணவொன் றிருப்பக்கண்ட புள்ளொ ன்று அதனைப்பற்றிச் செல்லுங்கால், அதனைக்கண்ட ஏனைய புட்களும் அவ்வுணவைப் பற்றும் விருப்பாற் றொடர்ந்து வரு கையினாலே, அது தான் மேலுங் கீழும் புறத்து மகத்தும் வட்ட மிட்டோடியும் நேரோடியும் சுழன்றோடியும் இங்ஙனமே

பற்றிய வவ்விரையைப் பாதுகாக்கப் பல்லாற்ரு னெத்தனித்து வருத்தமுற்றுப் பேணிப்போற்றியும் ஆற்ருமையா னீற்றின்க ணதன்பற்றை யொழித்து, அவ்விரையிற் பற்றுவைத்தமையான் முந்திப் பின்ருெடர்ந்துவரும் மற்ருெருபுட் பாய்ந்து அதனைப் பற்றி அவ்வண்ணமே பறந்து துயருழந் தலையவும் ஏனைய புட்கள் அப்புள்ளைப் பின்ருெடர்ந் துலையவும் விடுத்துத், தான் தனித் துயரப் பறந்துபோய்க் குளிர்காற்றின்கணிருந் தெய்ப் பொழிதலானும் பற்றினைத் துறத்தலானு முளதாகுமின்பநுகர்ந் துய்த்ததை யொக்குந் துறந்தார் நிலையையே யாவரும் விரும் புதல்வேண்டும்.

அருளுடைய மாந்தர் தீவினையை யொழித்து நல்வினை யைச் செய்ய அறம் வளரும், அதுவளரப் பாவந் தேயும், அது தேய அறியாமை நீங்கும், அது நீங்க நித்தவநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன்மாலையவாய இம்மை மறுமை யின்பங்களி னுவர்ப்பும் பிறவித்துன்பங்களுந் தோன்றும், அவை தோன்ற வீட்டின்கணாசை யுண்டாம், அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாய பயனின் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாய யோகமுயற்சி யுண்டாம், அஃதுண் டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்ருகிய எனதென்பதும் அகப்பற்ருகிய யானென்பதும் விடும், அவற்றை விட்டவரே முற்றத் துறந்தவராவர்.

சுத்தமாயா தத்துவமைந்தும், வித்தியாதத்துவமேழும், ஆன்ம தத்துவங்களாய அந்தக்கரணம் நாலு ஞானேந்திரிய மைந்து கன்மேந்திரிய மைந்து தன்மாத்திரை யைந்து பூதங்க ளைந்து எனப்படும் இருபத்துநாலுமாகிய முப்பத்தாறு தத்து வங்களும் தத்தமக்கு முதலாயவற்றை நோக்கத் தாம் விகுதி யாதலும் தங்கட் டோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலு முடையவென அவற்றின் ருேற்றவொடுக்க முறையை யுணர்ந்து ஒடுக்கிக்கண்டு இதயமுதலிய தானங்களிற் புறக்காரண முட் காரணங்களைப் பற்றியும் பற்ருதும் நிகழும் யோகாவத்தை யெய்தினவரே துறவிகளாவர்.

## உஉ. அதி மெய்ஞ்ஞானம்.

மெய்ஞ்ஞானமாவது வினைமாசுதீர்ந்து அந்தக்காரணங்க ளேவாயவழி உதிப்பதாய வீடுபயக்கு முணர்வேயாம். மெய் யுணர்வெய்தி அவாவறுத்தவனே மெய்ஞ்ஞானி யாவன். தோற்றமுடையன யாவும் நிலையுத லிலவாந்தன்மையவென அவற்றது நிலையாமையை நோக்கிப் புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாய பற்றினை விடுத்துப், பிறப்புவீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத வையங்களானன்றி உண்மையா னுணர்ந்து, அவிச் சையை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வா னறுத்தார்க் குளதாவதே மெய்ஞ்ஞானம்.

ஓருயிர்க்கு மக்கட்பிறவி, அவ்வுயிர் இல்லறந் துறவற மாகிய இருவகை யறங்களையும் முறையே செய்து, நன்னெறிக கட் சேறலான் அவிச்சையி னீங்கி மெய்ஞ்ஞான மெய்த வேண்டுமென்றே, அதற்கேற்ற பெற்றியி னமைந்துளது. புண்ணிய மேலீட்டினால் வாய்த்த அம்மானுடப் பிறப்பின்கண் அவ்வுயிர் மெய்ஞ்ஞான மெய்திற்றிலதேனும் மேலவரும் பிறப பின்கண் அதனை யெய்துமாறு நன்னெறிக்கட் சேறல்வேண்டுப. காண்போர்குழாம் கூத்தாட்டுக் காரணமாக அரங்கின்கட் பல் றிறத்தாற்றானே வந்து அக்காரணம் போயவழித் தானும் போமாறுபோல, ஒருவனது நல்வினை காரணமாக அவன்மாட் டுப் பல்திறத்தாற் றானேவந்து அக்காரணம்போயவழித் தானும் போதலால் நில்லாத வியல்பினையுடைய செல்வத்தைப் பெற்றவன் அதனைப் பெற்றபொழுதே பயனோக்காது செய்யப் படும் கடவுட் பூசையுந் தானமுந் தருமமுமாகிய அறங்களைச் செய்யின் அவை ஞானவேதுவாய் அவற்கு வீடுபயக்கும்.

ஒருவன் இம்மைக்கணறஞ்செய்த பொருளே மறுமைக்க ணவற்குரியதாய்ப் பயன்படுதலின் அவ்வறஞ் செய்யாது வைத் திறந்தவன் அப்பொருளை யிழந்தவனே யாகலானும், யாக்கை யைப் பெற்றதும் பேணலும் முதலிய வெல்லாம் அவ்வறஞ் செய்தற்கே யாகலானும், முன்றனியாத முட்டை தனித்துக் கிடப்ப அதனுள்ளிருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்து

போன தன்மைத்தாய் அவ்வாக்கையை நீங்கிச் செல்ல றிண்ண மாகலானும், நெருநற் பிறந்தானொருவன் இன்றிறந்தானெனச் சாக்காடும் பிறப்பும உறங்குதலும் விழித்தலும் போலக் கடிதின் மாறிமாறி வருகின்றன வாகலானும், நாவை யடக்கி விக்கு ளெழுமுன அறஞ் செய்தலேயன்றிச் செய்யச்சொல்லலு மாகா தாகலானும், அதுதான் இன்னபொழுது வருமென்ப தறிதலரி தாகலானும் யாவரும் நிலையாத யாக்கையும் பொருளும நிலை யின வப்பொழுதே வீட்டிற் கேதுவாய அவ்வறங்களை விரைந்து செய்யக்கடவர். அவ்வாறு செய்தவறம், ஒருவற் கந்நல்வினைக் கண்ணும் விருப்புவெறுப் பொழியச்செய்து, பிறப்பறுத்து வீடெய்தும் முயற்சிக் கேதுவாகும்.

வாதம்முதலிய நோய்கள் இருக்கவமைந்தஞான் றிருந்தும் அவை வெகுண்டஞான்று போயும் தாம் ஒதுக்கிருந்த ஒருடம் பினும் ஒருபொழுதேனும் இயைந்திருத்தலைத் தெளியமாட் டாது வைத்தும், பொறிகளானுகரப்படும் இன்பங்கள் தமக் குரியவாமாறும் அதற்குப் பொருள் துணைக்காரணமாமாறும் அது தம்முயற்சிகளான் வருமாறும் அவற்றைத் தாம் முயலு மாறும் அவற்றிற்கு வரும்இடையூறுகளும் அவற்றை நீக்குமா றும் நீக்கி அப்பொருள கடைக்கூட்டுமாறும் அதனைப் பிறர் கொள்ளாமற் காக்குமாறும அதனான் நட்டாரை யாக்குமாறும் நள்ளாரை யழிக்குமாறும் தாம் அவ்வின்பங்க ளுகருமாறும் முதலாய எண்ணிறந்த நினைவுகளை நினையாநிற்கும் அறிவில்லாத மாந்தர், உயிரோடுகூடி எஞ்ஞான்று மிருப்பதோ ருடம்பு இல்லையென்றும், இவ்வுடம்பும் பொருளும் அவற்றானெய்து மின்பங்களும் நிலையாமையையே நிலைபேறு புடையனவென் றும், இவ்வுண்மையை யுணர்ந்து அவற்றின்க ணுளதாய பற்றினை விடினன்றே ஞானமெய்தி வீட்டின்ப மடைவர். தாமல்லாத வுடம்பைத் தாமென்றுந் தம்மோ டியைபில்லாத பொருளைத் தமதென்றுங் கருதி அவற்றின்கட் பற்றுச் செய்தற்கேதுவா கிய மயக்கத்தைக் கெடுத்து முற்றத்துறந்தவரே வீட்டினைத் தலைப்பட்டவராவர்; அங்ஙனந் துறவாது யாதானுமொன்றின் கட் சிறிதாயினும் பற்றுச்செய்தவர் மயங்கிப் பிறப்பாகிய வலை யுட்பட்டவராவர்.

மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் மற்றுமித் தன்மையனவும் இல்லையென்னும் விபரீதவுணர்வும், அவை யுளவோ விலவோவென வொன்றிற் றுணிவு பிறவாது நிற்கும் ஐயவுணர்வுமாகிய அவிச்சையே துன்பமாகிய பிறப்புக்குக் காரணமாகலின் அதனி னீங்கி மெய்யுணர்வினை யுடையராயி னார்க்கு அம்மெய்யுணர்வு அப்பிறப்பினை நீக்கி நிரதிசயவின்ப மாகிய வீட்டினைக்கொடுக்கும். மனமே துணையாக வொருகான் மெய்யுணர் வெய்தினார்க்கு மீட்டுமுணர்தல் வேண்டாமையின் அவ்வுணர்தற் கருவியா யிருந்துள்ள சித்தவிருத்தியு மொடுங்க ஆன்ம சுவவறிவு பூரணவிளக்க மெய்தும்.

இம்மக்கட் பிறப்பின்கண்ணே உபதேசமொழிகளை அனு பவமுடைய தேசிகர்பாற் கேட்டு, அங்ஙனங்கேட்ட உபதேச மொழிகளை அளவைகளானும் பொருந்துமாற்றானுந் தெளிய வாராய்ந்து, பூதமுதலிய தத்துவங்களைத் தத்தங் காரணங் களில் ஒடுக்கிக்கொண்டுசெல்லக், காரண காரியங்க ளிரண்டு மின்றி முடிவாய் நிற்பதும் தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய் நோன்மையாற் றன்னை யொன்றுங் கலத்தலின்மை யாற் றூய்தாய்த் தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்பதுமா யுள்ள முழுமுதற்பொருளை, அதனின் வேறாகாத வுயிர் தன் னவிச்சை கெடத் தூய்தாய் அதனோ டொற்றுமையுற இடை விடாது செய்யும் பாவனையாற் காண்பதே மெய்யுணர்வாவது. தானே தற்பிரகாசமும் பரப்பிரகாசமுமா யிருக்கும் மெய்ஞ் ஞானமெய்திய வான்மாச் சுத்தாத்துவித முத்தி பெற்றுளதாம். உயிர் உடம்பைவிட்டு நீங்குங்கால் அதனால் யாதொன்று பாவிக் கப்பட்டதோ அஃததுவாய்த் தோன்றுமென்ப துண்மையாக லின் வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற் கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டு முதற்பொருளையே பாவிக்கும் இப் பாவனை வேண்டப்பட் டின்றியமையாததாயிற்று.

பிராணவாயுவை அடங்குதல் விடுதல்செய்யா தடக்கி, அதனானே குறித்தநாளெல்லையைக் கடந்து முடம்போடிருந்து, மனத்தை யசையாவண்ண மிறைவன்பா னிலைநிறுத்தி இடை

யுறுத ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையராயினோர்க்கு. அநாதியாய அவிச்சைமுதலிய குற்றங்களைந்துங் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போலக் கெடுதலான் அவற்றின் காரியமாய இருவினைகளைச் செய்தலும் அவற்றின் பயன்களாய இன்பதுன்பங்களை யனுபவித்தலு முளவாகா. உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்தவினையும் அதுகாட்டுங் கதிநிமித்தங்களும அக்கதிக்கணவாவும் உயிரின்கண் முறைபோவந் துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டுசெல்லுமாகலான், எல்லாவுயிர்கட்கு மெய்ஞ்ஞான்றுங் கெடாது வருகின்ற பிறப்பினை விளைக்கும் வித்து அவாவேயாம். அநாதியாகத் தான் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களாற் றுன்பமுற்று வருகின்றமையையுணர்ந்து துறந்தபின், ஈண்டைச் சிற்றின்பங் கருதி ஒன்றை யவாவின் அது பிறப்பினும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைக்குமென் றஞ்சிப் பழைய பயிற்சிவயத்தான் வந்த அவ்வவாவை இடைவிடாத மெய்ப்பொருட் பாவனையால் அறுத்தவன் சீவன்முத்தனாய் வீட்டின்பத்தை உடம்பொடுநின்றே யெய்துவன்; அவனே மெய்ஞ்ஞானியெனப்படுவன்.

மெய்ஞ்ஞானியாவான் விரதத்தான் அந்தக்கரணசுத்தியெய்தி வீடுபயக்குமுணர் வெய்தப்பெறும் பக்குவமுற்றுத், தோற்றமுடையன யாவும் நிலையுத லிலவாந்தன்மையையுணர்ந்து, ஓரோவழிச் செல்வம் பெற்றுளனேற் சற்பாத்திரமாயுள்ளவர்க்குத் தானஞ்செய்தலாகிய ஞானக் கிரியையேசெய்து, புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய யாக்கையின்கண்ணு முளதாய பற்றினை அவற்றது நிலையாமையை யுணர்ந்து முற்றத்துறந்து, பரமாத்தாவாகிய இறைமுதற்கடவுள் மாந்தர் தங்கன்ம வேற்றத்தாழ்ச்சி நோக்கி யோதிய வீடெய்துதற்குரிய சோபான நெறிகள் பலவற்றுள்ளும் மேலாய திதனைப் பக்குவமுதிர்ச்சியான் மனத்துட்கொண்டு, அதன்கணுபாயமாய தியான சமாதிகளை மனத்தாற்செய்து, பிறப்புவீடுகளையும் அவற்றின் காரணங்களையும் அவிச்சையான் விளையும் ஐயவிபரீதங்களானன்றி உண்மையா னறிந்து, அனுபவமுடைய தேசி

கர்பாற் றத்துவ உபதேசமொழிகளைக் கேட்டலாகிய சிரவண மும் அவ்வுபதேசமொழிப்பொருளை அளவையானும் பொருந்து மாற்றானுந் தெளியவாராய்தலாகிய மனனமுஞ் செய்து, பிறப் பிற்கு முதற்காரணமாய அவிச்சைகெட வீட்டிற்கு நிமித்த காரணமாய பரம்பொருளை அனுபூதியிற் காண்டலாகிய நிதித் தியாசன சமாதிகளுற்று, மேற்சாரக்கடவ துன்பங்க ளிலனாய்க், காமம் வெகுளி மயக்கமென்னுங் குற்றங்கண்மூன்றுங் கெடப் பெறுதலினாலே அவற்றின் காரியமாய இன்பதுன்ப நுகர்ச்சி மூற்றக்கெடுத்து, எடுத்தவுடம்பும் அதுகொண்ட வினைப்பய னும் நின்றமையின் நினைவு பாசிற்சி வயத்தாற் பழைய புலன் கண்மேற் சேறலுறின் இடையறாத மெய்யுணர்வி னுறைத்து நின்று அவ்வவாவினை யாற்றவறுத்து மலவாதனையும் நீங்கிச் சீவன்முத்தனாயிருந்து, பிறப்புப் பிணி மூப்பிறப்புக்க ளின்றிச் சுத்தாத்துவித நிலையையெய்தி முடிவில்லாத நிரதிசயவின்பம் பெறுபவனாவன்.

---

# ௨. பொருட்பால்.

## அரசியல்.

### ௨௧. அதி அரசன்

அரசியலாவது மலர்தலை யுலகிற் குயிரெனச் சிறந்த வரசன் காவலை நடாத்து முறைமை. அரசியலை நடாத்துவோன் அரச னெனப் பெயர்பெறுவன. காவலாவது மன்னுயிர்க்குத் தன்னா னும் பரிசனத்தானும் பகையானுங் கள்வரானு மேனையுயிர்க ளானு முளதாய அச்சத்தை நீக்கி அறத்தைக் காத்தல். அர சன் காவலை நடாத்துமுறைமை இனிது நடந்துழி அந்நாட்டு மன்னுயிர்க்கெல்லாம் இம்மைக்க ணறம்பொருளின்பங்க ளுள வாம், மறுமைக்கண் மேற்கதி சித்திக்கும்.

சீவான்மாக்கள் தத்தங் கன்ம வேற்றத்தாழ்ச்சி காரணமாகத் தேவரும் மனிதரும் விலங்கும் பறவையும் ஊர்வனவும் நீர்வாழ்வனவும் தாவரமுமென வொன்றற்கொன் றேற்றத்தாழ்ச்சியுள்ள எழுவகைப் பிறப்பினவாய்ப் பிறந்துள. பாவ மிக்குள்ள இக்கலியுகத்திற் றேவரை மக்கள் காண்டலரிதாயினும் யாம் இருக்கு மிடங்களினுஞ் சஞ்சரிக்கு மவரைத் தவமுதிர்ச்சியுடையாரே காண்பர். இப்பிறவிகள் அறிவி னேற்றத்தாழ்ச்சிகளான் எழுவகைப் பகுப்பினவாயினும் அவ்வப் பகுப்பினுள்ளும் குணம் முதலியவற்றான் வேறுபாடுண்டு. சிங்கமுங் கழுகும் முதலாயின மற்றைப் பிராணிகளைக் கொன்றுண்ணும் வன்கண்மை மிகவுடையன. ஆனு மன்னமும் முதலாயின அங்ஙனங் கொன்றுண்ணாத சாந்தகுண முடையன. சிங்கம் மிருகராசனெனவும் கழுகு புள்ளரசெனவும் பெயர்பெறுகின்றன. இங்ஙனமே மக்களுள்ளும் ஆண்மைக் குணமுடைய சத்திரியரும் சாந்தகுண முடைய பிராமணரும் முதலாயினோருளர். ஆண்மைக் குணமுடைய சத்திரியரே அரசராதற்குரியர். தேயமுஞ் சாதியும் பாடையும் சமயமும் முதலியவற்றான் வேறுபட்ட மாந்தர் அவ்வவ் வேறுபா டேதுவாகத் தம்முண் மாறுபட்டுத் தீமைக ளெய்தாவண்ணமும் அவ்வவர்க்கேற்ற நன்மைக ளெய்தும் வண்ணமும் அவ்வவ் வேறுபாடுடையார்க் கொவ்வோரரசன் வேண்டப்படுவன். அவ்வேறுபாடுடையா ரெல்லோரையும் நீதியிற் றவறா தொருங்கேயாளுதன் முற்றறிவு பேரருண் முதலாயினவுடைய வீசற்கேயன்றி மாந்தருளொருவற்கியலாதாகலின் அவ்வவ் வேறுபாடுடையார்க்கேற்ற பெற்றியராய பலவரசர் வேண்டப்பட்டனர். அரசரையின்றி உலகியனடைபெறமாட்டாது. குழவிக்குத் தாய்வேண்டும், ஓர்குடிக் கோர்தலைவன் வேண்டும், குடிக ளிரண்டேயெனினும் ஓரரசன் வேண்டும். அவ்வரசனானவன் தொன்றுதொட்டுப் பரம்பரையானுளனானவன், அல்லது குடிகளா னியமிக்கப்பட் டுளனானவன். நியமிக்கப்பட் டுளனேனும் அவன் தொன்றுதொட்டு வருகின்ற உயர்ந்தகுடியிற் பிறந்தவனா யிருத்தல்வேண்டும்; அத்தன்மைய னல்லாதவ னல்லரசனாகான்

உயர்குடிப்பிறந்தார் செம்மையும் நாணும் ஒழுக்கமும் தூங்காமையும் வாய்மையுங் கேண்மையுந் துணிவுடைமையுந் தூய்மையும் அறிவுடைமையும் பொறையுடைமையும் கொடையுடைமையும் புன்னெறிச்செல்லாமையும் முதலியவற்றை எஞ்ஞான்றுந் தமக் காபரணமாக வுடையராவர். அவர் எஞ்ஞான்றும் முகமலர்ச்சியும் இன்சொல்லும் பிறரை யிகழாமை முதலியனவு முடையராவர். அவர்க்கு நல்குரவாவது வழங்குவது உள்வீழ்வதேயாம். அவர் அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தைதாயென் றிவர்முதலாய பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலையுடையராவர். அவ்வுயர்ந்த குடியின்கட் பிறந்தார்மாட் டுளதாகுங் குற்றந் தான் சிறிதேயாயினும், விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல மிகவோங்கி விளங்கித் தோன்றும். அவரிடத்தே அங்ஙன மீரமின்மை முதலிய குற்றங்களுளவாயின் அவை அவ்வுயர்குடிப்பிறப்பிலையப்படுதற் கேதுவாகும். உயர்குடிப்பிறந்தார் புகழ்செய்யுமிடத்துந் தங்குடிமைக் கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார். செல்வக்காலை அஃதுயர்ச்சிசெய்யத் தாம் தாழ்தலும் அல்லற்காலை அது தாழ்வுசெய்யத் தாம் உயர்தலும்வேண்டு மாகலின், அவர் செல்வமுளதாயவழி யாவர்மாட்டும் பணிவுடையராயும் நல்குரவுளதாயவழிப் பணிவுடையரல்லராயும் விளங்குவர். ஒருவற்கு நிலையிற்றாழாமை யுள்வழி அந்நிலையினின்றும் மேன்மேலுயர்தற் பயத்தவாய செயற்கரிய செய்தல் தருக்கின்மை பிறர் குற்றங் கூறாமையென் றிவைமுதலிய நற்குணங்களாற் பெரியனாந்தன்மை யுளதா மாகலின் யாவரும் அந்நிலையிற்றாழாமையை உயிரினு மோம்புதல்வேண்டும். ஒருவற்குத் தான் உளனாயகாலத்து மிக்குத்தோன்றுத லுடைமையாகு மொளியாவது பிறராற் செயற்கரிய செய்வேனென்று கருதும் ஊக்கமிகுதியேயாம். ஆகவே அரசனும் பரிசனமாயுள்ளவரும் உயர்குடிப் பிறந்தவராயின் அவர் எஞ்ஞான்றுங் காவலை நடாத்தும் முறைமையாகிய அரசிய னீதியிற் றவறாதவராய் நற்குண நற்செய்கைகளுடையராய் விளங்குவர்.

அமைச்சும் நாடும் அரணும் பொருளும் படையும் நட்புமென்று சொல்லப்பட்ட இவ்வா றங்கங்களுள் ஒன்றில் வழியும்

அரசநீதி செல்லாதாகலின் இவைமுற்று முடையவனே அரசரு ளேறு போல்வான். அவ்வரசன் வினைசெய்தற்கட் பாவமும் பழியுங் கேடும்முதலிய அஞ்சுவனவற்றுக்கே அஞ்சுவானாய், ஆண்மையும் அறிவுங் கொடையும் மனவெழுச்சியும் அவ்வக் காரியங்களின் விரைவுடைமையு முடையனாய்த், தனக்கோதிய படைக்கலம் பயிறல் பல்லுயிரோம்பல் பகைத்திறந் தெறுதன் முதலிய அறத்தின் வழுவாதொழுகி அறனல்லவை தன்மாட் டேயன்றித் தன்னாட்டின்கண்ணும் நிகழாமற் கடிந்து வீரத் தின் வழுவாத தாழ்வின்மையு முடையனாய்த், தனக்குங் குடி கட்கும் நென்முதலிய பொருள்கள் வரும்வழிகளை மேன்மே லுளவாக்குவித்தலும் அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித்தொகு வித்தலும் தொகுத்தவற்றைப் பகைவர் வினைசெய்வார் முத லாயினோர் கொள்ளாமற் காவல்செய்வித்தலும் காத்தவற்றை அறம்பொருளின்பங்களின்பொருட்டு விடுவித்தலுமாகிய இவற் றைச்செய்ய வல்லனாய், வலியரா னலிவெய்தி முறைவேண்டி னார்க்கும் வறுமையுற் றிரந்து குறைவேண்டினார்க்குங் காண் டற் கெளியனாய் யாவர்மாட்டுங் கடுஞ்சொல்ல னல்லனுமா யிருத்தல்வேண்டும். யாவர்க்குங் கல்வியை விருத்திசெய்வித் தலும், நோயாளர் வறியவர் வயோதிகர் முதலாயினோர்க்கு மருந்து மூணு முடையும் முதலாயின கொடுத்துப் பாதுகாத் தலும், தத்தஞ் சமயவழி யொழுகாது நல்லொழுக்கமுடைய ரல்லாராய மக்களை இம்மைக்கட் செய்யப்படும் தண்டம் முதலா யின செய்து அவ்வச் சமயநெறிக்கட் செலுத்தி நல்லொழுக்க முடையராக்கலும், இவைபோல்வன பிற நன்மைகளைச் செய்த லும் வேந்தன் கடன்.

நீதியல்லன செய்வித்தற் கேதுவாய அளவிறந்த காமமும், எல்லைகடந்த வெகுளியும், பொருளை விடத்தகுமிடத்து விடாது பற்றுதலைச்செய்யும் உலோபமாகிய கடும்பற்றுள்ளமும், அந் தணர் சான்றோர் முதலாயினோரை வணங்காமை அறம் பொரு ளின்பங்கள் பயவாதனவாய்ப் பாவமும் பழியுங் கேடும் பயக் கும் வினைகளை நயந்து கருதியது முடித்தேவிடுத்தன்முதலிய நன்மையி னீங்கிய மானமும், அளவிறந்த உவகையும், செல்

வக் களிப்பாகிய செருக்குமென்னும் அறுவகைக் குற்றங்களையும் முன்னர்த் தன்கட்படாமைக் கடிந்து பின்னர்ப் பிறர்குற்றங் கடிதலே அரசர்க்கு முறைசெய்தலாம். பகைத்திறந் தெறுதற்கு இடமும் காலமும் வலியும் அறியப்படாமையானும் அறனும் பொருளு மிகழப்படுதலானும் அரசனாவான் தான் செல்வ முதலியவற்றான் இறப்பவுயர்ந்தனானென்றும் மதத்தாற் றன்னை வியவாதொழிதல்வேண்டும் உலகத்தையெல்லாம் யான் நியமித்தலான் என்னை நியமிப்பா ரில்லையெனக் கருதித் தான் நினைத்தவாறே யொழுகாது தான் துணையாகக்கொண்ட உயர்ந்தோர் முதலாயினாரொடு முன்மலர்ந்துபின்கூம்புங்கயப்பூப்போலவேறுபடாது கோட்டுப்பூப்போல ஒருநிலையே நட்பாய் அவர் ஒழுகுமாற்றிற்கியையவொழுகி, கோயென வரக்கடவதனை முன்னறிந்து அதன்காரணத்தைவிலக்கிக் காக்க வல்லவனே அரசனாவான்.

அரசனாவான் உயர்குடிப்பிறப் புடையனா யிருத்தலேயன்றி மானமும் பெருமையும் முதலாயின வுடையனாய்க் கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்தவனாயுமிருத்தல்வேண்டும். அவன், கருத்துஞ் சொல்லுஞ் செயலுந் தம்முள் மாறாகாமையாகிய செம்மையும், மனவாக்குக் காயங்க ளொடுங்கி அவரை யொதுங்கச்செய்யும் மகளிர் நாண் போலாது பழிபாவங்களின் மடங்குதலாகிய நாணும், நன்னெறிக்கட் சேறலாகிய ஒழுக்கமும், மனத்தழுக்கின்மையாகிய தூய்மையும், பிறர்க்குத் தீமை பயவாதன கூறலாகிய வாய்மையும், யாவர்மாட்டும் உறவாந் தன்மையாகிய கேண்மையும், அஞ்சவேண்டாதனவற்றுக் கஞ்சாமையாகிய துணிவுடைமையும், வினைசெய்தற்கட் சோர்வின்மையாகிய தூங்காமையும், அறியவேண்டுவன அறிதற்குரிய அறிவுடைமையும், பொறுக்கவேண்டியனவற்றைப் பொறுக்கும் பொறையுடைமையும், பொருளை உலோபமின்றி ஈயவேண்டிய விடத்தெல்லாம் ஈயுங் கொடையுடைமையும், தனக்குந் தன்கீழுள்ளார்க்கும் கேட்டைவிளைக்கும் புன்னெறிக்கட் செல்லாமையும் முதலியனவுடையனா யிருத்தல்வேண்டும். அவன் ஞாயிற்றைபொத்த வாண்டனைப்பொளியுந் திங்களையொத்த தண்ணளிச்சாயலுஞ் சீர்தூக்குங்கோலையொத்த நடுவுநிலைமையும் வானத்தையொத்த வண்மையுமுடையனா யிருப்பின் அவ்வரசனை மலர்தலையுலகுக் குயிரெனா யாவரானும் புகழப்படுவன்; அவனே மன்னுயிரையெல்லாந் தன்னுயிர்போலோம்பற்பாலன்.

ஓர் நாட்டு மக்கள் கேட்டுக்கு மாக்கத்துக்குங் காரணனு யுள்ளவன் அந்நாட்டரசனே; அந்நாட்டு மக்கட் கறம்பொரு ளின்பங்களை யாக்கற்குமேயன்றி யழித்தற்கும் வல்லவன் அவனே. அரசின் மாட்சி புண்ணியத்தின்பாலதே யாகலின், கண்ணுற் சொல்லிச் செவியா ளுக்குமவ் வரசன் தண்ணளி யிலனேயாயின் அப்புண்ணிய மெய்தப்பெறான். அரச வதி காரத்தொடு மொறுத்தற் றொழிலொடு நின்ற வவ்வரசன் குடிகளிடத்து மிகையாமிறையை இறுங்கொளன் றிரத்தல், உடைவாளொடு நின்றுறலைக்குங் கள்வன், ஆறுசெல்வானைப் பொருடாவென் றிரத்தலை யொக்கும். நல்லார் இவர் நல்லரல்லார் இவரென அறத்தை நோக்காது வெறுத்தாரைக் கொல்லென் னுங் கல்லாவரசன், நல்லாரை யணுகற் கஞ்சுங் காலனைக்காட் டினுங் கொடியன். அரசன்கோல் கோடியதேன் மன்னுயிர் படுந்துயர், கடனீர் சுடுவதாயின் நீர்வாழ்உயிர்படுந்துயர்க் கொப் பாகும். கொடுங்கோன்மை கொடிது! கொடிது!

தன்னாட்டின்கண்ணுமேயன்றி ஏனையரசர் நாட்டின்கண் ணும் நீதி தவறாமையைக் காக்கவேண்டுதலின் அரசன்பொறை மிகப்பெரிதாயுளது. தாந்தாம் நன்னெறிக்கட் சேறலைக் காக்க வேண்டிய குடிகளாயுள்ளவரைக்காட்டினும் தாமுந் தந்நாட் டின்கணுள்ளாருமேயன்றி ஏனைநாட்டின்கணுள்ளாரும் அங் ஙனஞ் சேறலைக் காக்கவேண்டிய அரசர்கடன் மிகப்பெரிதா யிற்று. அயனாட் டரசர் நீதியிற் றவறாது காவலைச் செய்யாரே னாயின் அவ்வவர்க்குமேயன்றித் தமக்கும் பற்பல விடையூறு களுந் துன்பங்களு மெய்துதற் கேதுவாம். நீதியானன்றித் தமதவாவின் விளைவாய வீழ்ச்சியும் வெகுளியுங் காரணமாகத் தோன்றுதொட் டிவ்வுலகின்கட் கொடுங்கோன் மன்னரெண் ணிறந்தவர் வேற்றரசரோடு போர்புரிந் தெண்ணிறந்த மாந்த ரைக் கொன்றும் எண்ணிறந்த மாந்தர் கொல்லப்படுதற்குக் காரணராயு மிருந்துளர். தன்னாட்டின்கண் எவ்வகை யுயிரை யுங் கொல்லாதவனாயும் கொலைசெய்யப்படக் காரணனாகாதவ னாயும் அயனாட்டின்கண்ணுந் தன்னையொத்த நல்லரசர்சூழப் பெற்றவனாயு முள்ளவனே புண்ணியமேலீட்டினாற் செங்கோன் மன்னனென்னும் பெயர்பெறத் தக்கவனாய்ப் பிறந்துள்ளவன்.

ஒற்றுமையும் நேர்மையும் நன்னெறிக்கட் சேறலும் இன்ப நுகர்தலும் யாவர்க்கு முளவாக அரசுபுரிபவனே அரசனென்னும் பெயர்பெறற் குரியன்.

அயனாட்டுக் கொடுங்கோன் மன்னரை வெற்றிகொண்டு அவரை நல்வழிப்படுத்தி நீதியிற் றவறா தரசியலை நடாத்துவித்தல், அல்ல தலைதியலாதேயாயின் அந்நாட்டைத் தாங்கைப் பற்றி அந்நாட்டாரெண்ணத்துக் கியைய நீதியிற் றவறா தாளுதல் செங்கோன் மன்னர் முறையாம். அங்ஙன மின்றிச் சுவ நயங்கருதி இலகுவிற் றந்நாட்டார் வயிறு நிறைத்தற்பொருட்டு மற்றொரு நாட்டாரைப் பகைக்குக் காரணம் அவர்மாட்டிலதே யாகவும் போர்புரிந்து வெற்றிகொண்டேனும், அல்ல தலைதியலாதேயாயின் அவர்தஞ் சோர்வுபார்த்து வாணிகம் முதலாய காரணத்தான் வஞ்சித் துட்புகுந்து ஒருசாராரொடு மற்றொரு சாராரை மாறுபடச்செய்து வேறுபிரித்து மாறிமாறித் துணைபுரிந்தும் வேறற் கெளியராக்கியும் வெற்றிகொண்டேனும், பின்னர்ப் படிமுறையே அவரெல்லோரையும் அடிமைகளாக்கி அவரை வருத்தும் பசிக்கொடுமையைக் கண்டுஞ் சிறுது மிரக்க மின்றி அவரீட்டிய பொருளையெல்லாம் ஒவ்வோ ருபாயத்தான் அபகரித்துக் கொடுசென்று தந்நாட்டிற் குவித்துவைக்கும் அரசரு மவரைச்சேர்ந்தோரும் இம்மைக்கட் சிறிதுபொழுது கிளர்வார்போற் றோன்றினும் அக்கன்மத்தின்பயனை மறுமைக்கணாயினும் அவர்நிலையைத்தாமு மெய்தி நுகர்பவராவ ரென்பது கருதலளவையான் அறிதற்பாலதாகு முண்மையேயாம்.

மலர்தலை யுலகின்கட் காவற்சாகாடுகைக்குங் காவலர் உயர்குடிப் பிறப்பும் அஞ்சாமையும் ஈகையும் அறிவும் ஊக்கமுந் தூங்காமையுங் கல்வியுந் துணிவுடைமையுமுதலிய குணங்களுடையரல்லராய், அளவிறந்த காமம்முதலிய குற்றங்களுடையராய்க் காட்சிக்கெளியராதன் முதலிய மாட்சியுமிலரேயாயின் அதனை யுள்ளற்கட்படுத்துத் தாமுமுலைந் துலகத்தையுமுலைத்துப் பழிபாவங்கட் காளாவர். அதனை நன்னெறிக்கட் செலுத்துதலின் அருமையையும் அங்ஙனஞ் செலுத்தியவழி

உளதாம் பெருமையையும் நோக்கியன்றே அக்காவலர்க்கு உயர்குடிப்பிறப்பு முதலாயினவற்றான் மேம்பட்ட அமைச்சர் முதலாயினோர் துணை வேண்டப்பட்டுளதாயிற்று. நல்லமைச்சர் முதலாயினோர் துணையைப்பெற்று அவர்வழி யொழுகுவார்க்கு அரசியற்பொறையுங் குறையும்.

---

## ௨௪. அதி மானம்

மானமாவது நிலையிற் றாழாமை. அபிமானமும் மானத்தின்பாற்படும். மானமாவது பிறப்பினியல்பா னொருவற்குத் தன்னைநோக்கி யிருப்பது, அபிமானமாவது பிறிதோர்பொருளின் சார்புபற்றி அதனைநோக்கி அவனிடத்திருப்பது. ஒருவற்குயர்குடிப் பிறப்பான் மானமுளதாம், அவற்குத் தன்றேயஞ் சாதி சமயம் பாடைமுதலியவற்றான் அபிமான முளதாம். ஆகவே அபிமானமாவது தன்தேயமுஞ் சாதியுஞ் சமயமும் பாடையும் நலிவுக ளிளிவரவுக ளாயின வெய்தியக்காற் சகிக்க மாட்டாத அவன்றன் மனத்தின்றன்மை.

உயர்குடிப் பிறந்தார் எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழாமையும் தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாகிய குணமுடையாராவர். செயற்கரிய செய்தல் தருக்கின்மை பிறர் குற்றங் கூறாமை முதலியனவாய் உயர்குடிப் பிறந்தார்க்குரிய குணங்கள் பலவற்றுள்ளும் மானமுடைமையே சிறந்தது. கேடாயின இறப்பவரும்வழி இளிவந்தன செய்தாயினும் உய்க வென்பாரு முளராயினும், உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி யாவருந் தங்குடிப் பிறப்புத் தாழவருஞ் செயல்களைச் செய்யாதொழிதல்வேண்டும். உயர்ந்த குடிக்கட் பிறந்த மாந்தர் தம்முயர்ந்த நிலையைவிட்டு அதனினின்றுந் தாழ்ந்தவழித் தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை யொப்பர். மானத்தை விட்டுத் தன்னை அவ்

மதிப்பார் பின்னே ஒருவன் சென்று நிற்கின்ற நிலையையும் அவரின் கீழ்ப்பட்டு உயிர்வாழ்தலையும் நோக்கி உலகத்தா ரிகழ் தலினும் அவன்றன் றன்மானத்தைக்காத் திறந்தனனென்று கூறுதனன்றன்றோ? நற்குணங்கட்கெல்லா மிடனாய உயர்குடிப் பிறந்தார், அப்பிறப்பின் வலிகள் பலவற்றுள்ளும் மிக்க வலி யாதற் சிறப்பினையுடைய மான மழியவந்துழித், தன் மயிர்த் திரளின் ஒருமயிர் நீங்கினும் உயிர்வாழாத கவரிமாவையொபப இறத்தலையொழிந்து, பிறராலிகழப்படுதலிற் பயனில்லாத உடம் பினைக் காக்கும் வாழ்க்கை, பின்னு மிறவாமைக்கு மருந்தாமோ வென்று உலகத் திறந்தவர் பலருளர். கூனுங் குருடு மூமை யும் முதலிய புன்மைகள் யாக்கையோடழியும், மானமழியி னெய்தும் புன்மை எழுமையு மழியாதாகலின், இறந்துபட வரினுந் தம்பாற் பிறந்த மானத்தை அழியவிடாது அணிகல னாகப் புனைந்துகோடன் மாநதர்க்கு வரிசையுந் தோற்றமு மரபுமாம்.

தமது தேசமுஞ் சாதியுஞ் சமயமும் பாடையும் நிலையிற் றாழின் அபிமானமுடையார் பாதுகாப்பர், அல்லது உயிர்வாழார். பாதுகாத்தலோடமையாது மேன்மே லுயரச்செய்ய முயறலும அவர் தன்மையாம். தாம் பிறந்த தேசத்துக்குத் தாழ்வு வாரா மற் காக்குங் குணமுடையவரே தேசாபிமான முடைய ரெனப் படுவர். தாழ்வாவது வேற்றுத் தேசத்தாரால் றமக்குளவாகும நலிவுகளும், தந்தேசத்தாரான் அவர்க்குளவாகும் நலிவுகளாற் றமக்குவரும் இளிவரவுகளு முதலியவற்றாற் றந்நிலையினின்றுந் தாழுதல். ஒருதேசத்தார் மற்றொரு தேசத்தாரோடு நீதியா னன்றிப் பொருதல் சிறையாடல் பொருள்கவர்தல் அல்லல் தவ ரைத் தங்கீழ்ப்படுத்திச் சுவநயம்பெற வாளுதன்முதலிய செய் யுங்கால் அபிமானமுடையார் தம்மவரான் அவர்க்குவரும் நலிவுகளையும அவற்றாற் றமக்குவரும் இளிவரவுகளையும் நீக்க முயல்வர், அஃதியலாக்கால் உயிர்வாழாமையை மேற்கொள்வர். அவர்தம்மால் நலிவெய்தினருள்ளும் அபிமானமுடையார் அந் நலிவுகளெய்தாமற் காக்க முயல்வர். அவைதாம் ஒருவன் வரு வனவாய் நீக்கற்பாலனவல்லவாயினக்கால் றம்முயிர் வாழார்

மையை மேற்கொள்வர். அவர் தம்மால் நலிவெய்தினாருள்ளும் அபிமானமுடையார் அந்நலிவுகளெய்தாமற் காக்கமுயல்வர். அவைதாம் ஊழான் வருவனவாய் நீக்கற்பாலனவல்ல வாயினக் காற் றம்முயிர் வாழாமையை மேற்கொண்டபிமானத்தை நிலை நிறுத்துவர். முற்பிறப்பில் அல்லதிப்பிறப்பில் வலியராயினார் மெலியராயினார்க்கும் உயர்குலம் முதலியவற்றான் மேற்பட்டவர் இழிகுலம் முதலியவற்றாற் கீழ்ப்பட்டவர்க்கும் செய்து வைத்த நலிவுகள் காரணமாகவும் இவைபோல்வன பிறவேதுக்களானும் இப்பிறப்பில் வருவனவே ஊழான் வருவன. இப்பரதகண்டத்துள்ளார் பற்பல அன்னிய தேசத்தாரான் எய்தியனவும் எய்துகின்றனவுமாகிய நலிவுகட்குக், தம்முண் மெலியார்க்கு வலியாரும் இழிகுலத்தார்க்கு உயர்குலத்தாரும் செய்து வைத்தனவுஞ் செய்கின்றனவுமாகிய நலிவுகளே தக்க வேதுவா மென்பதை உய்த்துணராமை பேதைமையே. இப்பிறப்பின்கணுயர்குலத்தார் இழிகுலத்தார்க்கு நலிவுகள் செய்வாராயின் அவை மறுபிறப்பின்கண் அவ்விழிகுலத்தார் அன்னியதேசத்து மக்களாய்ப் பிறந்துவந்து தமக்கு நலிவுகள் செய்தற்கேதுவாகு மென்பதை யுய்த்துணர்ந்து அவர்தா முய்யும்வழி நாடாமை பேதைமையே. இப்பேதை மாந்தர், இழிகுலத்தராவார் உயர்குலத்தாரா னலிவெய்தற்கென்றே பிறந்துளாரென மயக்கவுணர் வுடையராய்க் காணப்படுகின்றனர். இழிகுலத்தரேனும் அவருந் தம்மைப்போலவே மக்கட்பிறப்பினரென்பதை மறந்து நாய் பூனை முதலிய பிராணிகளினுங் கீழாக்கி நலிவுகள் செய்கின்றனர். உடம்பினழுக்கு முதலாய வேதுக்களானே தீண்டத் தகாதாரெனக் கண்டுழி அவற்றை நீக்கிக் கோடற்கேற்ற வழிக்கணுய்க்க முயலாது அவரை நீசரெனப் புறக்கணித்து நிழலும்படப் பொறாராய் நிந்திக்கு மவர்தாம் அருளுடையராமாறியாங்ஙனம்? இப்பிறப்பின்கண் ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தார்க்கு நலிவுகள் செய்வாரேன் மறுபிறப்பின்கணேனும் அதன்பயனை நுகர்வர். அபிமானமுடையார் பிறர்க்குந் தமக்கும் நலிவுக ளிளிவரவுகளாயின வாராமற் காப்பர் அல்ல துயிர்வாழார்.

உலகெங்கு மொரே பெற்றியா யிராது விற்றுவிற்றுன தன்மைக ளமையப்பெற்றுள. அதன்கட் பற்பல பாகங்களினு முள்ள மாந்தர், அவ்வப்பாகங்களின் சூடுகுளிர்கள தேற்றத் தாழ்ச்சியின் வேறுபாட்டானும், அவற்றுக்கேற்ப வுளவாய பொருள்விளைவு முதலிய வேறுபாட்டானும், அவற்றுனுய உணவு முடையும் முதலிய வேறுபாட்டானும், அவற்றுனுய வுருவமு நிறனுங் குணனுமுதலிய வேறுபாட்டானும், அவற்றுனுய வாசாரவொழுக்கம் முதலிய செயல்வேறுபாட்டானும், பேசும் பாடைகளின் வேறுபாட்டானுஞ் சாதிபேதமுடையரா யினர். தத்தஞ் சாதிக்குத் தாழ்வு வாராமற் காக்குங் குண முடையவரே சாதியபிமான முடைய ரெனப்படுவர். ஒருசாதி யார் மற்றொருசாதியாரை அடிமைப்படுத்தி அவர்தம் ஆசார வொழுக்கங்களைக் கெடுத்தன் முதலாயின செய்வாரேல், அபி மானமுடையார் அச்செயல்களாற் றமக்குளவாகு மிளிவரவு களையும் அவர்க்குளவாகும் நலிவுகளையும் நோக்கி அவை நிகழாவண்ணங் காக்க முயல்வர், அல்லதியலாதாயின் உயிர் வாழார்.

ஊழே காரணமாக வுளவாய அவரவ ரறிவுக்கேற்பப் பல் வேறு வகைப்பட்ட மார்க்கவழி யொழுகுவாரை, அறிவூட்டுத லானேயன்றி வலிந்தும் பொருண்முதலிய வீந்தும் இவை போல்வன பிறவாற்றானும் அவரவர் நிலையைத் திரித்து மன முஞ் சொல்லுஞ் செயலும் வேறுபட் டொழுகும்வண்ணம் அவரைக் கெடுப்பாரையும் கடவுணிந்தை சமயநிந்தை முதலா யின செய்வாரையுங்கண்டு சகியாராய் அக்கேடுக ணிகழாவண் ணங் காத்தலே அல்லதியலாதாயின் உயிர்வாழாமையை மேற் கொள்வாரே சமயாபிமானமுடைய ரெனப்படுவர்.

தம்பாடைக்குத் தாழ்வு வாராமற் காக்குங் குணமுடைய வரே பாடையபிமான முடைய ரெனப்படுவர். ஆதிக்காலந் தொட்டுப் பரதகண்டத்துத் தென்பானிலத்தின்கண் விளங்கி வழங்கியுள்ள பாடை தமிழே. ஆதிக்காலந்தொட்டு நம்முன் னோர் தமதெண்ணத்தை ஒருவர்க்கொருவர் வெளிப்படுத்தற்

குபயோகித்த சத்தப்பாடையு மெழுத்துப் பாடையுந் தமிழே. இருகாலத்தும் நமது தாய் தந்தையரும் உறவினரும் நட்டா ரும் அயலாரும் பிறரும் நாமும் பேசும்பாடையு மெழுதும் பாடையுந் தமிழே. நமது தாய்ப்பாடையென்று மேன்மைப் படுத்திக்கூறி நாம் பாராட்டும் பாடை தமிழே. நம்மைப்பெற்ற தாயார் பாலோடுகலந்து நமக்கூட்டி வளர்த்த பாடை தமிழே. தாயைக் காணாமைத் தனிமையி னுங் கண்ணீர் சொரிந்து கதறி யழுதபோது "குழந்தா" யென்று நஞ்செவியைக் குளிர்வித்த பாடை தமிழே. கண்டுயில்பெறாத நிலைமைகண்டு நாம் கரைந்து வெம்பியழுத வழுகையைவிட்டு அக்குழவிப் பருவத்து மதன் வயப்பட்டுத் துயிலைப்பெறத் தாயார் நம்மைத் தாலாட்டிய பாடை தமிழே. நம்மைப் பெற்றுவளர்த்த தாய்தந்தையரை நாம் மழலைச்சொற் பேசி மகிழ்வித்த பாடை தமிழே. உலகத்து மற்றெப்பாடைகளைக் காட்டினும் மேம்பட்டதாக, அக்கினி யென்னு மிலக்கியத்துக்குச் சூடுடைமை இலக்கணமென்றாற் போல அவ்வியாத்தி முதலிய முக்குற்றங்களு நீங்கவும் மற்றும் பிற வளவைகட்கு மேற்கவும் இலக்கணவரம் பமைக்கப்பட் டுள்ள பாடை தமிழே. உலகத்து மற்றெப்பாடைகளைக் காட்டி னும் இசையின் இனிமை முதலியவற்றானும் அவ்விசையோடு சம்பந்தப்பட்டுள்ள நாடகத் தானும் மேம்பட்டு விளங்கும் பாடை தமிழே பண்டைக்காலத்தின்கண் ஆத்தர்க டேவரை இசைப்படுத்துப் பாடிப் போற்றிப்புகழ்ந் தேத்தி மகிழ்வித்து வரவழைத்துத் தரிசிக்கவைத்த பாடை தமிழே. இன்றைக்கு மத்தேவரை நாமும் காண்டற்குப் பக்குவமுடையமல்லே மாயி னும் அருளைவேண்டி இசைப்படுத்துப் பாடிப் போற்றிப்புகழ்ந் தேத்தி மகிழ்விக்கும் பாடை தமிழே.

இத்தகை உரிமையும் அருமையும் பெருமையும் வாய்ந்த நந்தமிழ்ப்பாடை, நஞ்சோர்வானும், பொருண் முதலாயின பெற விரும்பி அரசபாடையை மாத்திரங் கற்றலானும், நம் மவரு ளபிமானமுடையா ரின்மையானும் போற்றுவாரின்றி விரைவி னிறந்துபடற்கேற்ற பெற்றியை நாளுக்குநாள் எய்துவ தாயிற்று. தம்மை யறியாமை மதியாமை மானமிலாமை பொரு

ளாசை முதலாய மயக்கத்தி னீங்கிய நல்லறிவாளர் அதனிலை மையை உள்ளபடி உய்த்துணர வல்லராயின் அஃதெய்திவருங் கேட்டை நீக்கி இறந்துபடாமற் காக்கமுயலா திருக்கமாட்டார்.

இக்காலத்துத் தமிழர் பலரும் தஞ்சுவபாடையாகிய தமி ழைப் பேசவுங் கற்கவும் விருப்பிலராய், அரசபாடையாகிய அன்னியபாடையை மாத்திரங் கற்று அதனையே பேசும் விருப் புடையராய்க் காணப்படுகின்றனர். அவ்வன்னிய பாடையைக் கற்றவர், எவ்வளவுக்குத் தமிழை யறியாமை தமக்குளதாமோ அவ்வளவுக்குப் பெருமையுந் தமக்குளதாமெனக் கருதுகின் றனர். தாய்ப்பாடையாகிய தமிழை மிகக் கற்று வல்லவரா யிருப்பினும் அவ்வன்னிய பாடையைக் கல்லாதவரேயாயின் அவரை அவர் ஒருபோதும் மதியார். தாமுந் தம் மக்கள் முதலாயினோரும் தமிழை யறியாமையே தமக்குப் பெருமையா மெனக் கருதி அவ்வன்னிய பாடையையே வீட்டுப் பாடை யாகவு முபயோகிக்கின்றனர். அவர் தம்மவராகிய தமிழரோடு பேசுதல் தமக்கிழிவெனக் கருதுவர். ஒருபோது பேசவேண்டி வரினும் காற்பங்கு தமிழும் முக்காற்பங்கு அவ்வன்னிய பாடையுமாகக் கலந்து பேசுவர். தாய்ப்பாடையாகிய தமிழைப் படிமுறையே மறத்தலானும் பேசவிரும்பாமையானும் பேச மாட்டாமையானும் அவர் தமிழர் மத்தியில் அன்னியர்போல வாசஞ்செய்கின்றனர். தாய்தந்தை முதலாயினோரும் உறவின ரும் அயலாரும் அவர்க் கன்னியராகின்றனர். தாயை யிகழ்வார் தம்மை யிகழ்பவராவா ரென்பதை அவர் அறிந்திலர்போலும்.

பொதியமலைக்க ணிருந்த அகத்தியமுனிவரா னிலக்கண வரம் பமைக்கப்பட்டுத், தலைக்சங்கம் முதலிய மூன்று சங்கங் களினும் நன்காராயப்பட்டுத், தனக்கொத்ததும் மிக்கதுமா யுள்ள ஆரியபாடைத் தற்பவ மொழிகள்பல இன்றியமையாத விடங்களிற் சேர்க்கப்பட்டும் எல்லைப்படுத்தப்பட்டுச் சிறந்து விளங்கிய தமிழ்ப்பாடை, இக்காலத்துக்கற்பாரின்றியும் வழூஉப படப் பேசப்பட்டு மெழுதப்பட்டும் இன்றியமையாத விடங் களினும் ஆரியபாடைத் தற்சம மொழிகள் பல சேர்க்கப்பட்

டும் அன்னியபாடைக் கலப்பெய்தியும் சென்றுதேய்ந் திறந்து படும் நிலைமையை யடைவது தமிழர்க்குப் பெரியதோ ரவமா னத்துக் கிடமேயாம். பிறபாடைகளானு நஞ்சோர்வானு மபி மானமின்மை முதலிய வேதுக்களானும் நமக்கெய்தும் நலிவுக ளிளிவரவுக ளாயினவற்றை நீக்க முயன்று நாமே நம்மைக் காவேமேல், தமிழராகிய நாம் விரைவி னிறந்துபட்டவராவேம். தந்தாய்ப் பாடையைக் கற்றற்கும் அதனைப் பேசுதற்கும் நாணமுடையார் தம்மை அபிமானமுடையாரெனச் சொல்லு தற்கும் நாணமுடையராவர். முச்சங்க நூல்களைக் கற்றும், அவற்றைப் பிரமாணமாகக்கொண்டு இக்காலத்துக்கு வேண்டும் நூல்களைச் செய்தும், தமிழை இறந்துபடாமற் காக்க முயல் வாரே அபிமானமுடையார்.

மாந்தர்க்கு அபிமான முடைமையான் ஒற்றுமை யுடைமை யும் அதனான் வலியுடைமையும் அதனான் நலிவுக ளிளிவரவுக ளாயின வாராமையு முளவாம். உணவை அட்டன் முதலிய நல்லனவற்றுக்கும், பிறரொருவ ரில்லத்தைப் பகைத்துச் சுடு தன்முதலிய தீயனவற்றுக்கும் உபயோகப்படுந் தீயைப்போன்று இவ்வொற்றுமை வலியும் நன்மையாயினவற்றுக்குந் தீமையா யினவற்றுக்கும் உபயோகப்படுமாகலின் அறிவுடையார் அதனை நன்மையாயினவற்றுக்கே உபயோகிப்பர்.

பெரியாராயினோர் எத்துணை யிடுக்கண் வரினும் இறந்துபட வரினும் தம்பாற் பிறந்த மானத்தைக் கைவிடார். நிலைநில்லாத உடம்பைப் பேண விரும்பி உலகுளதாமளவும் நிலைநிற்கும் மானத்தை அறிவுடையா ரிழக்க விரும்பார். கற்றூண் அள வுக்கு மேற்பட்ட பாரத்தைத் தாங்கவேண்டி வந்துழிப் பிளந் திறுவதே யல்லாமற் றளர்ந்து வளையாதவாறுபோல, மான முடையார் ஆபத்து வந்தவிடத்து இறந்துபடுவரே யல்லாமற் பகைவரை வணங்கல் இரந்துண்டல் முதலாயின செய்யார். அபிமான முடையார் தமது குடிக்குந் தேயத்துக்குஞ் சாதிக் குஞ் சமயத்துக்கும் பாடைக்கும் நலிவுக ளிளிவரவுகளாயின வெய்தியவழி அவற்றை யறிந்துஞ் சகித்திருந்து தம்முயி ரோம்பலையே பொருளெனக் கொள்ளார்.

## உரு அதி கல்வி

கல்வியாவது கற்றற்குரிய நூல்களைக் கற்றல். நூல்களாவன இறைவனு மவனருள் பெற்றோரும் பிறரு மறிவித்தன. அறிவித்தாலன்றி யறியா வியல்பினை யுடைய மாந்தர் இந்திரிய விடய சம்பந்தத்தானே கல்வியானு மறிவுடையராவர்.

சித்துப் பொருளாகிய சீவான்மாவினதறி வஞ்ஞான மறைப்புடையது. அதனை நீக்கிக் கோடற்பொருட்டே உலகு முடம்புஞ் சுருதியுங் கடவுளாற் கொடுக்கப்பட்டுள்ளன. கல்வியானது அஞ்ஞான மறைப்பைத் தோண்டி ஆன்ம வறிவை வெளிப்படுத்தற் கருவியேயாம். அவ்வறிவை வெளிப்படுத்தற் குபகாரமாயுள்ள அளவை காட்சி கருத லுரையென மூவகைப் படும். அவை ஒன்றற்கொன் றாதாரமா யின்றியமையாதன வாயினும், சீவான்மாவானவன் தனதறிவாற்றலாற் சீவான்ம பரமான்ம விலக்கிய விலக்கணத்தை அளந்தறிதற் கருவியாய் மெய்யுணர்வைக் கொடுத்தலான் மேற்பட் டின்றியமையாததா யுள்ளது உரையெனப்படுஞ் சுருதியே. அதனையு மதனைக் கற்றற் காதாரமாயினவற்றையுங் கற்றலே கல்வி.

ஆன்மா வெய்துதற்குரிய வீடுபேற்றிற் கேதுவாய் இம்மை மறுமை யின்பத்தையுந் தரும் அறநூல்களையும் அவற்றைக் கற்றற் காதாரமாயுள்ள நூல்களையும் மக்களாய்ப் பிறந்தவர் யாவருங் கற்றல்வேண்டும். குந்தாலிகொண்டு கல்லைக்கல்லி நிலத்தைத் தோண்ட நன்னீர் தோன்றுமாறுபோல, நன்னூல் பலவற்றையுங் கற்றுச் சிந்தித்துத் தெளியச் சீவான்மவறிவை மறைத்திருந்த வஞ்ஞானம் படிமுறையே நீங்கி நன்னீர்மைத் தாய வதன் சுயவறிவு தோன்றும். கல்லாத மாந்தர் மேலாய மக்கட்பிறப்பா னெய்தும் பயனை யிழத்தலான் விலங்குமுதலிய இழிந்த பிறவிகட்கே யொப்பாவர்.

யாவர்க்கு மையாட்டைப் பிராயத்து வித்தியாரம்பஞ் செய்யப்படல் வேண்டும். அதன்முன்னர்த் தாய்தந்தையர் பேசும் பாடையைப் பேசக் கற்றுவந்த மக்கள் அதனை யெழு

தலும் வாசிக்கவுங் கற்றற்கும், சிவகருணையுங் கடவுட்பத்தியு மெய்தி நல்லொழுக்க நெறிக்கட் சேறற்கும் ஆரம்பித்தற் கேற்ற காலம் அவ்விளமைப் பருவமே. ஈரக்களிமண்ணை எவ்வகை வடிவமாகவும் மிகவெளிதி னமைக்கலாம், அஃது இறுகிக் காய்ந்தபின் அதன் வடிவத்தை மாற்றிப் பிறிதொன்றாக்க லெளிதன்று. இளமையில் வளைத்துவிடப்பட்ட மரம் முதுமை யினும் வளைந்தே நிற்கும். அங்ஙனமே மாந்தர்தம் மனமும் இளமைக்க ணெவ்வகை யறிவொழுக்கங்களையும் மிகவெளிதிற் பற்றற்கேற்ற பெற்றியை யுடையது. அஃதிளமைக்கட் பற்றிக் கொண்ட வறிவொழுக்கங்களை முதுமைக்கண் மாற்றி வேறு பிறவற்றைப் பற்றிக்கொளச்செய்தன் மிகவரியதொன்றாம். அஃ தற்றாகலினன்றே இளமைக்கட் டம்மக்கண் மனத்து நல்லறி வைப் புகட்டி நல்லொழுக்க நெறிக்கட் செலுத்த றாய்தந்தை முதலாயினோர் பெருங்கடன்மை யாயிற்று.

வித்தியாரம்பஞ் செய்யப்பட்டபின் மாணாக்கர் சிவகருணை யுங் கடவுட்பத்தியுமுடைய நல்லாசிரியரை வணங்கி அவ ரிடத்தே கல்வியை ஐயந்திரிபறக் கற்றல்வேண்டும். நல்லாசிரிய ராவார் உயர்குலத்தோர் விரும்பும் பிறப்பும், மனத்தூய்மையும், நல்லொழுக்கமும், பலகலைப் பயிற்சியும், இருளை யகற்றிப் பொருளைப் புலப்படக் காட்டும் ஞாயிற்றையுந் திங்களையும் போல ஐயவிபரீத மகற்றி மெய்ப்பொரு ளுணர்த்தும் வாய்மை யும், மாணாக்கர்மாட் டன்புடைமையும், பொருளவாவின்மை யும், நடுவுநிலைமை யுடைமையுமென்னும் எண்வகை யிலக் கணங்களு முடையராய்க், கொடையு மூக்கமு முலகியலறிவும் நிலைபெற்ற தோற்றப்பொலிவும் பொறையும் நிறையும் மறப் பின்மையும் அறிவும் உருநலனும் இயற்கையுஞ் செயற்கையு மாய அறிவுமொழிமெய்களி னாற்றலும் புகழுங் கேட்பார்ப் பிணிக்குஞ் சொல்வன்மையும் மாணாக்கரான் விரும்பப்படு நீர்மையும் பொருந்தினவரா யுள்ளவரேயாம். நன்மாணாக்கராவார் ஆசிரியன் கற்பிக்கும் நூற்பொருளைக் கற்பித்தவா றுணர்தலும், கற்பித்த பொருளைப் பற்றுக்கோடாகக் கொண்டு சூழ்ந்து வேறு நற்பொருளை யுணர்தலும், தன்னைப்போலக் கற்பவர்க் குப்காரி

யாதலும், தந்தை தாய் ஆசிரியர் முதலாயினோர் செய்ந்நன்றி யறிதலும், சிறியாரினத்தொடு சார்பின்மையும், சோம்பு தடுமாற்றம் மானம் பொச்சாப்பு மிக்கநோய் சீற்றங் களவு காமமென்றிவை யிலராதலும், ஆசிரியனை வழிபடுங் குணமும், தருமநெறி தவறாமையும், ஆசிரியன் குறிப்பறிந்தொழுகலும், கேட்டவற்றைச் சிந்தித்தலும், பாடத்தை மறவாமற் போற்றலும், மீட்டு மாசிரியனை யடைந்து கேட்ட நூற்பொருளை ஐயவிபரீதமறக் கேட்டலும், ஒருசாலை மாணாக்கர் பலருடனும் பலகாலும் பழகுதலும், அவரும் பிறரும் வினவும் வினாக்களுக்கு விடைகூறுதலும் தாம் ஐயுற்ற பொருளை அவரிடத்து வினவுதலும், பிறர்க்குக் கற்பித்தலும், உலகநடையை யறிந்தொழுகுதலும், கற்றவற்றையுங் கேட்டவற்றையும் உய்த்துணர்ந்தவற்றையும் சுருக்கியும் விளக்கியும் நூல்செய்தலுமாகிய இத்தன்மைகளை யுடையவர்களேயாம்.

மணற்கேணியைத் தோண்டுந்தோறும் ஊற்றுநீர் சுரந்து பெருகிக்கொண்டு வருதல்போலக் கற்குந்தோறும் அறிவு வெளிப்பட்டு வளர்ந்துகொண்டேவரு மாகலின் ஆசிரியரிடத்தே நூல்கேட்பான் புகுந்தோர் சிறிது கேட்டலோடமையாது மேன்மேலுங் கேட்டுக் கற்றல்வேண்டும். சிலநாட் கற்றவர் விவேகிகளாயினும் சிலவற்றின் வல்லராதலு மரிது, பலநாட் கற்றவர் மந்தர்களாயினும் பலவற்றினும் வல்லராவர். நூற்பொருளை விரைவினாலே பாராமல் அமைவுடனே பார்த்தல் வேண்டும். கற்பதிற் கருத்திறங்குதலும் கற்றதி லிறங்காமையும் பெரும்பாலு மெவர்க்கு முண்மையின், க்ற்பதை மட்டுப்படுத்திக் கற்றதை மறவாமற்பொருட்டும் நுண்ணிய பொருளையறிதற்பொருட்டும் அக்கற்றதிலேயே கருத்தைச் சிந்தாமலிறக்கல்வேண்டும். இங்ஙனமே நல்லாசிரியரிடத்தே கற்றலிலிடைவிடாத வூக்கமும், நோய்முதலிய விடையூறுகளின்மையும், தமக் கூணுடை முதலியவற்றிற்கும் ஆசிரியர்க்குக் கொடுக்கும் வேதனம் முதலியவற்றிற்கும் வேண்டிய பொருளுண்மையும், அவ்வாசிரியருடைய உள்ளத்திலே அருளுண்டாகும்படி நடத்தலும்முதலிய கல்விகற்றற்குச் சிறந்த கருவிகளை யுடைய

ராய் விளங்கிக் கற்கும் நன்மாணாக்கர், அரிய நூல்களை யியற்றி
வெளிப்படுத்திய நன்னூலாசிரியர் இறந்துபட்டுளரேயெனினும்
பூதவுடம் பழிவெய்தவும் என்றுமழிவில்லாத தெய்வத்தன்மை
யமைந்த புகழுடம்பைப் பெற்று இலரல்ல ருளரென்றே சொல
லத் தாம் இயற்றிய அந்நூல்களின் வரியினாய் அவற்றைக் கற்க
விரும்பிய மாணாக்கர்க்கு அந்நூல்களுளவாய எவ்வெவ்விடங்
களிலு மொரே காலத் தினிதிருந் தெக்காலத்துங் கல்வி கற்
பிக்கின்றன ராகலின், அக்கற்றறிந்தோர் பலரு மியற்றிய
நூல்களை ஓரிடத் தொருங்கே சேர்த்துவைத்து வாசிப்பரே
யாயின், அவர்தாம் அக்கற்றறிந்த நல்லாசிரியர் பலரோடும்
ஓரிடத் தொரேகாலத்துச் சமுகமாயிருந்து முறையே அவரவர்
கற்பிக்கக் கற்று, அவரவர் கூறுவனவற்றின்கணுள்ள சொற்
சுவை பொருட்சுவை முதலாயினவற்றைத் தாம் எய்தி இன்
புற்று, அவராற் பெறற்பாலனவாய கல்நலன்களையெல்லாம்
ஒருங்கே பெறுபவராகின்றனர்.

கணிதசாத்திரமும் இலக்கிய விலக்கணசாத்திரமுமென்னு
மிரண்டும் அறிவை வளர்த்தலின் மாந்தர்க் கிரண்டு கண்கள்
போன் றுள்ளன. எழுதவும் வாசிக்கவும் பயின்றபின்னர்க்
கணிதமு மிலக்கணமுமென்னு மிருதுறைகளி லொன்றையே
னும் அல்லதவ் விரண்டையுமேனும் இயன்றளவு கற்று அதன்
பின்னர் யாவரும் அறஞ்செய்தற்கும் இன்பந் துய்த்தற்கும்
இன்றியமையாத பொருளீட்டற்குத் தாம் செய்தற்கேற்ற
தொழில்களு ளொன்றைப் பயின்று கோடல்வேண்டும். பல
தொழில்களைக் கற்றலுஞ் செய்தலும் அவற்று ளொன்றினும்
நற்சித்தி யடையாமைக் கேதுவாகும். யாவரும் செய்யுந்
தொழில்களை இலகுவின் முடித்தற்கேற்ற நூதனமான வழி
வகைகளை யாராய்ந்தறிந்துகோடற்கு முயல்பவரா யிருத்தல்
வேண்டும். ஓர் நூதன வழியை யறிந்தவர் பிறர்க்கு மதனை யறி
வித்து, அப்பிற ரறிந்தவற்றை அவர்வாய்க்கேட்டுத் தாமு
மறிந்துகொள்வரேல், அவரெல்லோரும் அவ்வத்தொழில்களில்
அழிவன சுருக்கமும் ஆவன பெருக்கமும்பெற நற்சித்தியு
நற்பயனு மெய்துவர்.

தொழிலைப் பயிலும்போதும் அதனைச் செய்யும்போதும், ஒருவன் கற்ற கல்வி உடம்பழிவெய்தினும் அழியா துயிரோடு செல்லு மாகலின் மரணபரியந்தம் ஒருநாள் ஊக்கமாயும் மற் றொருநாட் சோம்பலாயு மிராமல் எப்பொழுது மிடைவிடாமல் இயன்றமட்டுங் கல்வி கற்றல்வேண்டும். மாந்தரோ சில்வாழ் நாட் பல்பிணிச் சிற்றறிவினரா யுளர், அவர் தாங் கற்றற்குரிய நூல்களோ பற்பல துறையவாய்ப் பற்பலவாயுள வாகலின் யாவருந் தாம் எய்தவெடுத்துக் கொண்டதுறைக் கேற்றன வென்று கற்றவர் கூறும் நூல்களையும் அவற்றுக் காதார மாயினவற்றையுமே கற்றல்வேண்டும். சார்பு நூல்களுள் ஒன் றைத் தொடங்கிக் கிரமமாகக் கற்று முடித்தபின்னர் ஏனைச் சார்பு நூல்களையும் வழிநூல்களையும் முதனூலையும் முறையே கற்றல்வேண்டும். கிரமமாகக் கற்றொழிய ஏனை நூல்களை வாசித்தறிதல், சுருக்கி யெழுதுதலாற் கற்றல், விசேட விட யங்களை மனனம்பண்ணல், சிந்தித் தவதானித்தன் முதலாயின அவற்றை இலகுவிற் கற்றற்கேற்ற முறையாம். மாந்தர் தாம் கற்கும் நூலின்கட் சிலபொருள் கருகிற்றாயின் அப்பொழுது அவற்றின்கண் மனமழுந்தித் தடுமாறாது, முன்புகற்ற நூற்க ளுதல் பின்பு கற்கும் நூற்களுதல் இவை வெளிறிக் கிடக்கும் அதுகண்டு தெளிதுமென் றுட்கொண்டு மனவூக்கங் குன்றாம லும் வீண்பொழுது போக்காமலும் அந்நூலைக்கற்று முடித் தலும், நூலுரைகளைச் சிலநாட் கற்றமாத்திரையாற் புலமை யெய்திற்றில மென்று ஊக்கங் குன்றாது புலமை தப்பாது பலிக்குமாறு பலநாட் கற்று அவற்றின்கட் பயிறலும், விரை யாது நூலுரைகளை யுற்றுநோக்குதலும், கல்வி விருப்பில்லாத மாந்தரோடு கூட்டுறவு செய்யாமையும் கல்வித்தேர்ச்சிக் கேதுக் களாம். நீர்ப்பூக்களின் நாளங்களின் நீளம் அந்நீர் மிகுந்தோ றும் நீண்டுகொண்டே வருமாறுபோல, ஒருவனுக் கறிவும் அவன் நூல்களைக் கற்குந்தோறும் வளர்ந்துகொண்டேவரு மாகலின் யாவரும் மரணபரியந்தம் கல்விகற் றறிவுடையராதல் வேண்டும்.

ஈட்டல் காத்த லழித்தலென் றிவற்றாற் றுன்பமுறுதற் கும் பலரையும் பகையாக்கற்கும் உலகப்பற்றை வளர்த்துப் பிறவிக்கடலு ளமிழ்த்தற்கும் இவைபோல்வனபிற கேடுகட்கு மேதுவாய மணியும் பொன்னு முதலிய பொருட்செல்வம் போலத் தாயத்தார் கள்வர் வலிய ரரசரென் றிவராற் கொள் ளப்படாமையையும் வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறை யாது மிகுதலையும் தீயோற் கெடாமையையு முடைத்தாய கல்விச்செல்வமே ஒருவற் கழிவில்லாத சீரிய செல்வம். ஒரு வற்குப் பகைவரா னழிக்கலாகா வுள்ளரணும் அவ்வரணின்க ணுள்ள செல்வமாயுமுள்ள வதனைக்காட்டினும் மிக்க செல்வம் பிறிதொன் றில்லையே. நிகழ்வின்கட் சொற்பொருள்களின் சுவை நுகர்வானும் புகழ் பொருள் பூசை பெறுதலானும் எதிர்வின் கண் அறம் வீடுபயத்தலானும் தாம் இடையறாத இன்பமெய்து தற்கேதுவாய கல்விக்கு இம்மிக்காரோடு தலைப்பெய்து அறி யாதனவெல்லாம் அறியப்பெற்றேமென்று உலக மின்புறுதலான் அச்சிறப்பு நோக்கிக் கற்றறிந்தார், கரும்பயிறற்குக் கூலி போ லத் தாம் இன்புறுதற்கு உலகின்புறுதல் பிறவாற்றா னின்மை யின் பின்னு மதனையே விரும்பி மேன்மேலுங் கற்பவராவர். கற்றவர் அக்கற்றவற்றை உய்த்துணரவல்லராய் அதனோடு சொல்வன்மையு முடையராகப்பெறின், பொன்மலர் நறுமணத் தையு மெய்தினாற்போல இவ்வுலகத்து விளங்குவர்.

நன்னிலத்துப் பிறந்த நெல்லைக்காட்டினும் உவர் நிலத்துப் பிறந்த உப்பை யாவரும் நன்குமதிக்குமாறுபோல, உயர்குலப் பிறப்புச் செல்வம் முதலாயின வுடையராயினும் கல்லாதவரே யாயின் அவரைக்காட்டினும் இழிகுலப் பிறப்பு வறுமைமுத லாயின வுடையராயினும் கற்றவரையே யாவரும் நன்குமதிப் பர். கற்றவர் செய்யும் புகழாக்கைகள் அழியாதன வாகலின் அவர்க்குக், கலைமகள்வாழ்க்கை யுடையனே யெனினும் அழி வெய்துவனவாய பூதவுடம்புகளைச் செய்யும் பிரமனு மொப் பாகான். உயர்ந்த குலத்திற் பிறந்த மாந்தர் பல்லோர் குழீஇய வவைக்கட் கடையான குலத்திற் பிறந்தோ ராயினும் கற்றறிந் தோரைத் தலைநிலத்து வைக்கப்படு மாகலானும், தன்றேயத்து

மாத்திரஞ் சிறப்புச் செய்யப்படும் அரசற்குப்போலாது அன்னோர்க்குச் சென்றசென்ற விடங்களினெல்லாம் அதுசெய்யப்படுமாகலானும், இவ்வுலகின்கண் மற்றெவரைக் காட்டினும் அறனும் பொருளு மின்பமுமே யன்றிப் புகழும் பூசையும் பெறுதற்குரியவர் அவரே யாகலானும் மக்களாய்ப் பிறந்துள்ளார்க்கு உறுதிப்பொருளாவது கல்வியே.

உயர்குடிப் பிறப்புஞ் செல்வமு மழகும் முதலாயின வுடையராயினும் கல்வியில்லாதவர் முருக்கம் பூவுக்குச் சமமாவர். தானும் பேணற்பா டழிந்து உயிர்கட்கும் உணவுமுதலாயின வுதவாத களர்நிலம்போலத் தாமும் நன்குமதிக்கற்பாடழிந்து பிறர்க்கு மறிவு முதலாயின வுதவமாட்டாராய்க் காணப்படுதலான், இவரல்ல ருளரென்று சிலர் சொல்லுமளவினராய கல்லாதவர தெழுச்சியு மழகுஞ் சுதையான்மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய வெழுச்சியு மழகும் போலும். பாவைப் புல்லாடவற் காணிற் புள்ளும் மாவும் அஞ்சியோடுமாறுபோலக் கல்லாப் புல்லாடவற் காணிற் கற்றவ ரஞ்சியொதுங்கிச் செல்வர். கல்லாதவர் தாம் ஆறறிவுடைய மக்களாய்ப் பிறந்துளரே யாயினும் காட்டின்கட் கிளைத்தோங்கி வளரும் ஓரறிவுடைய மரங்கட்கே யொப்பாய்க் கற்றவரவைக்கட் காணப்படுவர். குளத்தின்கட் கிளரு நறுமணத் தாமரை மலரை நல்லன்னப் பறவை விரும்பிச் சேருமாறுபோலக், கற்றறிந்தவரை விரும்பிக் கற்றறிந்தவரே அவரோடு நட்பாயொழுகுவர்; சுடுகாட்டிற் கிடக்கும் பிணத்தைக் காக்கை யிச்சித்துச் சேருமாறுபோலக், கற்றறிவில்லா மூடரைக் கற்றறிவில்லா மூடரேவிரும்பி அவரோடு நட்பாயொழுகுவர். குயிலுக்குங் காக்கைக்கு முளதாய பேதம் யாக்கையானன்றி அவற்றின் னோசையானே யறியப்படுமாறுபோலக், கற்றவர்க்குங் கல்லாதவர்க்கு முளதாய பேதம் யாக்கையானன்றி அவர்தஞ் சொல்லானே யறியப்படும். கல்வியறிவில்லாதவ னொருவன் கல்வியறி வுள்ளவர் பலரிருந்த வவைக்கண் மெல்லெனச்சென் றிருந்தனனாயினும், அவன் ஆண்டு நாய் சென்றிருந்ததென்று சொல்லும்வண்ணமே சென்றிருப்பன், அன்றி யெழுந்துநின் றொன்றை யுரைத்தனனாயி

னும் நாய் எழுந்து குரைத்ததென்று சொல்லும் வண்ணமே யுரைப்பன். சில கல்லாத மக்கண்மாட்டுளதா மொட்பம் நீர்மே லெழுத்துப் போல்வதோர் விழுக்காடாய் விரையக்கெட்டுப் பயப்பாடின்றி யொழிதலின், அஃதொருசார் விலங்கி னொட்பம்போலும்.

ஒருவன் உறுதிநூல்களை இளமையிற் கற்றிலனாயினும் அவற்றின் பொருள்களைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்பானா யின் அக்கேள்வி, அவன் வறுமையானாதல் அறிவின்மை யானாதல் இடுக்கட்பட்டு மனந்தளர்ந்துழி அத்தளர்வை நீக்குதலின் அவனுக்குப் பற்றுக்கோடாந் துணையாம். அஃதேயுமன்றி அவன் நல்வழிக்கட் சேறற்கும் அஃதேதுவாம். கேள்வியானது கற்றுள்ளவழி அதனினாய வறிவை வலியுறுத்தலானும் கல்லாதவழியும் அவ்வறிவை யுண்டாக்குதலானும் யாவர்க்கும் வேண்டற்பால தொன்றே யாம். கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின் ஒழுக்கமுடையார் வாயிற் சொற்களே வழுக்குதலையுடைய சேற்றுநிலத்து இயங்குவார்க்கு ஊன்றுகோல்போ லுதவுமா கலின் அவ்வொழுக்கமுடையார்மாட்டே யாவருங் கேள்வியறி வைப் பெறுதல்வேண்டும். மனமொழிமெய்க ளடங்குதற் கேதுவாய நூல்களை யோதியும் அடக்கத்தான்வரும் பயனை யுணர்ந்தும் அதனை யறியலுறப் பிறர்க்குரைத்தும் தான் அடங்கியொழுகாதவன் சான்றோரவையின்கட் புகுதல் இன்பந் தரு மமளிக்கண்ணே தூயவல்ல மிதித்தகாலை வைத்தாற்போ லும். அவன் அவ்வவைக்க ணிருப்பினு முரைப்பினும் அச் சான்றோர் தம்மனத்தின்க ணருவருப் புடையராவர். ஆகலான் ஐயவிபரீதமறக் கற்று அக்கல்விக்குத்தக நல்லொழுக்க நெறிக்க ணொழுகுவாரே நன்மாணாக்கர்க்குக் கற்பித்தற்கும் எல்லார்க் கும் மெய்ந்நூற்பொருளைப் போதித்தற்கு முரியராவர். போதிக் கக் கேட்பவரும் கேட்டற்கேற்ற பக்குவமுடையராதல்வேண் டும். கேட்டவற்றி னுண்மைப்பொருளை அறிதற்கேற்ற பெற் றியின ரல்லாதார்க்குப் போதிப்பவர் அவரா னிகழ்ச்சியை யெய்துவர். பக்குவமுடையார்க்குக் கற்பித்தலும் போதித்

தலுமே தானங்கள் பலவற்றுள்ளுஞ் சிறந்ததானம். ஒருவர்க்கே சிறிதுபொழுது மாத்திரம் இம்மையிற் பயன்றரும் அன்ன தானத்தினும், கற்பிக்கப்பட்ட அல்லது போதிக்கப்பட்ட அவ்வொருவராற் பலருக்கும் அப்பலராற் பற்பலருக்கும் இம்மையி லெப்பொழுதுமேயன்றி மறுமையினும் பயன்றரும் வித்தியா தானமே சிறந்தது.

ஒருவற்குச் சவிகற்பஞானங் கல்வியா னெய்தற்பாலது. சத்துவம்முதலிய குணங்கள் மூன்றும் மாறிமாறி வருதல் யாவர்க்கு முண்மையின், உயர்ந்தபொருள் இழிந்தார்வாயினும் இழிந்தபொருள் உயர்ந்தார்வாயினும் உறுதிப்பொருள் பகைவர்வாயினும் கெடுபொருள் நட்டார்வாயினும் ஓரோவழிக் கேட்கப்படுதலான் யாதொருபொருளை யாவர்சொல்லக் கேட்பினும் சொல்வாரதியல்பு நோக்காது அப்பொருளின் மெய்யாய பயனைக் காணவல்லதே அறிவாவது. கற்றவர் அக்கல்விக்குத்தக இல்வாழ்வுழி ஈட்டியபொருளைத் தக்கார்க்கே தானஞ் செய்தன் முதலியவற்றினும் துறந்துழித் தவத்தான் மெய் யுணர்வெய்தி அவாவறுத்தலினும் வழுவாதொழுகும் அறி வுடையராதல்வேண்டும். மாந்தர்க்கு இறைவனருளிய அகக் கருவிகளாய இந்திரியவிடய சம்பந்தத்தானும் புறக்கருவியாய சுருதியைக் கற்றலானும் படிமுறையே அஞ்ஞானமறைப்புச் சிறிது நீங்கும்; நீங்கச், சற்குருவின் றீக்கையினான் மெய்யுணர் வெய்தும்; எய்த, அவாவறுத்த லுளதாம்; உளதாக, அவ் விறைவ னுபதேசத்தான் ஆன்ம சுவவறிவு சிறிதும் மறைப் பின்றி விளங்கித்தோன்றும். நிலவுலகைக் காண ஊனக்கண் ணுக்கு ஞாயிற்றி னொளித்துணை இன்றியமையாதவாறுபோல, வீட்டுலகைக் காண ஞானக்கண்ணுக்குக் கல்வி கேள்வி உய்த் துணர்வென்னும் மூன்றும் இன்றியமையாதன. இறைவன் கல்லாநெஞ்சி னில்லா னாகலானும், அவன் கற்றவர் விழுங்குங் கற்பகக்கனி யாகலானும் கற்றவரே மெய்ப்பொருளைக் காண வல்லுநர். மாந்தர் கல்வியானே சொற்பொருணுட்ப மறிதாற் கேற்கு மதிநுட்பம் வாய்ப்பப்பெற்று இறைவ னருளிய முத லாம்பொருட்பெற்றி தேறி உறுதிப்பயன் றலைக்கூடுவர்.

---

## ௨௯. அதி. பெரியாரைத்துணைக்கோடல்

பெரியாரைத் துணைக்கோடலாவது அரசரும் பிறரும் தீநெறி விலக்கி நன்னெறிச்செலுத்தும் பேரறிவுடையாரைத் தமக்குத் துணையாகக்கொள்ளுதல். ஒத்தபிறப்பினராய மக்களுள் மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளாற் புலன்களிற் செலுத்தலும் வெஃகலும் வெகுடலும் முதலாய செயற்கெளியவற்றைச் செய்யாது, அளவிறந்த வொப்புரவு ஈகை இயமம் நியமம் முதலாய அரியவற்றைச் செய்வாரே பெரியராம்; அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டாதாரே சிறியராம்.

வினைவயத்தாற் பஞ்சபூதபரிணாமமாகிய யாக்கையைப் பொருந்திநின்று அதன்பய னனுபவித்தல் எல்லா வருணத்தார்க்கு மொத்தலின் எல்லாமக்க ளுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலின், நல்லனவுந் தீயனவும் இரண்டுமாயினவும் இரண்டுமல்லவாயினவுமாய செய்யுந்தொழில்களது வேறுபாட்டான் அப்பெருமை சிறுமையெனப்பட்ட சிறப்பியல்புக ளொவ்வாவாயின. வினைவயத்தாற் பிறந்த வருணமும் யாக்கையும் உணவுஞ் செயலுமுதலாயின தீநெறிக்கட் செலுத்துவனவேயாயினும் பெரியாரைத் துணைக்கொண்டார் இரண்டுமாயினவற்றைச் செய்து பின் தீயவற்றை யொழித்து நல்லனவற்றையே செய்து பின்னர் இரண்டுமல்லவாயினவற்றை யுஞ் செய்யவல்லராவர்.

ஒருவன் இழிந்தகுலத்துப் பிறந்து இழிந்த தொழிலையே செய்தானாயினும் அவன் நற்குண நற்செய்கைகளையுடைய பெரியாரைக் காணினும் அவர்சொல்லைக் கேட்பினும் அவருடைய நற்குண நற்செய்கைகளைப் பேசினும் அவரோடு கூடியிருப்பினும் அவனுக்கு நல்லறிவும் நல்லொழுக்கமுந் தலைப்படும்; ஒருவன் உயர்ந்தகுலத்துப் பிறந்து உயர்ந்ததொழிலையே

செய்தாளுயினும் தீக்குணமுந் தீச்செயலுமுடைய சிறியாரைக் காணினும் அவர்சொல்லைக் கேட்பினும் அவருடைய தீக்குணங் களையும் தீச்செயல்களையும் பேசினும் அவரோடுகூடி யிருப்பி னும் அவனுக்குத் தீயறிவுந் தீயொழுக்கமுந் தலைப்படும். மாந் தர்க் கறிவொழுக்கங்கள் அவரவர் பிறந்தகுலத்தின் றன்மை யாகவே யுண்டாமென்ப துண்மையேயாயினும், நெற்பயிரின் பொருட் டிறைக்கப்பட்ட நீர் கால்வாய்வழியாலோடிப் பக்கத் துள்ள புல்லுக்குங் கசிந்தூறி அஃதுய்யுமாறு போலப், பெரி யவர் தமக்குப் பயன்படற் குளவாய அவர்தம் அறிவொழுக் கங்கள் அப்பெரியாரைத் துணையாகக்கொண்ட சிறியவர்க்குங் கசிந்தூறலால் அச்சிறியவர்தாமும் நல்லறிவும் நல்லொழுக்கமு முடையராய் உய்பவராவர்.

செயற்கரியவற்றைச் செய்யமாட்டாது எளியவற்றைச் செய்து சிறியாராயினர் செல்வமெய்தி உயர்ந்த வமளிக்க ணிருந் தாராயினும் பெரியராக மதிக்கப்படார், செயற்கெளியவற்றைச் செய்யாது அரியவற்றைச்செய்து பெரியாராயினர் நல்குரவெய் தித் தாழ்ந்த வறுநிலத் திருந்தாராயினும் சிறியராக அவமதிக் கப்படார். அப்பெரியாருள்ளும் இவர் மேம்பாட்டிற் சிறந்தவர் இவர் அதனிற் குறைந்தவரென் றறிதற்கு அவரவ ருருவம் முதலாயின அறிகுறி யாகா. 'தென்னை தாழை முதலியவற் றின் பூ இதழாற் பெரியதாயினும் நறுமணத்தாற் சிறியதாம்; மகிழம்பூ இதழாற் சிறியதாயினும் நறுமணத்தாற் பெரியதாம்;' பெரியசமுத்திர நீரைக்காட்டினும் அதனருகே சிறிய மணற் குழியிற் சுரக்கு மூற்றுநீர் உடம்பழுக்கைக் கழுவல் பருகன் முதலாயினவற்றுக் குதவிப் பலதிறத்தாற் பயன்படுவதாம். ஆகலான் இவர் சிறிதுபயன்படுவர் இவர் பெரிதுபயன்படுவ ரென்றும் இவர் ஒருதிறத்தாற் பயன்படுவர் இவர் பலதிறத் தாற் பயன்படுவரென்றும் அவரவர் உருவம் முதலாயினவற் றின் சிறுமை பெருமைகளாற் குறிக்கொண் டறியாது குணத் தானே குறிக்கொண்டறிந்து யாவருந் தீநெறி விலக்கி நன் னெறிச்செலுத்தும் பெரியாரைத் துணைக்கோடல்வேண்டும்.

அன்புமுதலாய நற்குணங்களெல்லா மமையப்பெற்றவராய், நட்டலும் பகைத்தலுந் துதியும்வைவு மின்பமுந் துன்பமு மென்னு மிவைபோல்வனவற்றில் ஒன்றின்கண் விருப்பும் மற் றதின்கண் வெறுப்பு மில்லாதவராய், ஊர்வனமுதலாய வெல் லாப் பிராணிகளுக்கும் நன்மையாயினவற்றைச் செய்தலையே அறிவொழுக்க மாகக்கொண்டு நல்வழிக்க ணொழுகுவாராய், ஓடியதேர் ஓட்டுவா ரிலராகவுஞ் சிறிதுதூர மோடுமாறுபோல, உண்ட லுடுத்த லுறங்கல் முதலாயினவற்றை முன்செய்தவண் ணமே பயிற்சிவயத்தாற் செய்வாராயினும் இறைமுதற்கடவு ளருள்வெள்ளத்தி லறிவு மூழ்கிக் கிடப்பவரா யுள்ளவரே எல் லாரினும் பெரியாரெனப்படுவர். செல்வர்க்குக் கள்வர் பயமும் அரசர்க்குப் பகைவர் பயமும் எல்லாவுயிர்களுக்கும் மரண பயமு முண்டு, அப்பெரியார்க்கோவெனின் யாதொரு பயமு மில்லை. முத்துக் கோரோசனை பா றேனென்னு மிவை பிறந்த விழிந்தவிட நோக்கி இகழப்படாவாறுபோல, அப்பெரியாராயி னார் இழிந்த குலத்திற் பிறந்துளாராயினும் அதனா லிகழப் படார்.

மாந்தர்க்கு மனம்முதலாய விந்திரியங்களா லுய பொது வான வறிவை இளமையிலே நன்னெறிக்கண் அல்லது தீநெறிக் கட் செலுத்த வல்லுநர் தந்தைதாயர் முதலாயினோரே. தீநெறிக் கட் சென்றதேயெனினும் பின்ன ரதனைமீட்டு நன்னெறிக்கட் செலுத்த வல்லுநர் நல்லாசிரியரே. ஒருவன் நல்லாசிரியரிடத்தே ஏற்று நன்னெறிக்கட்சென்ற நல்லறிவுடையனேயெனினும் பின் னர் அவன் இத்தன்மையனென்று உலகத்தாராற் சொல்லப்படுஞ் சொற்கு அவன் சேர்ந்த இனமே காரணமாம். எளிதிற் றீய வற்றை விரைந்து பற்றுதல் மாந்த ரியல்பாகலின் ஒருவன் சிறியா ரினத்தைச் சேரின், விசும்பின்கட் டன்றன்மைத்தாய நீர் தான்சேர்ந்த நிலம்முதலியவற்றின தியல்பானே அத் தன்மை திரிந்து நிறஞ் சுவை முதலிய பண்புகள்பெற்று அந் நிலம் முதலியவற்றின் றன்மைத்தாயவாறுபோல அவற்கு மவன்சேர்ந்த அச்சிறியா ரினத்தின தியல்பானே அறிவு தன் றன்மை திரிந்து அவ்வினத்தின் றன்மைத்தாம். பூதக்கலப்பா லுய நீர் அத்தன்மையிற் பரிணமமாய மனத்தின தறிவுக் குவ

மானமாயிற்று. அறிதற்கருவியாயுள்ள மனத்தை அறிவுடைத் தென்ற துபசாரம். நல்லொழுக்கநெறிக்க ணுறைத்துநின்று மிகப்பெரியாராயினார்தாமும் நன்னெறிக்கட் சேறலையொழிந்து தீநெறிக்கட் சேறற் கேதுவாகு மென்பதை நோக்கியன்றே அச்சிறியா ரினத்தை யஞ்சாநிற்பர். கள்ளுப்பனையின் கீழிருந் தவர் கள்ளுண்ணாதவரா யிருந்தாரே யெனினும் கண்டோரா னஃதுண்பவ ரென்றே கொள்ளப்படுமாறுபோலச் சிறியாரினத் துட் காணப்பட்டவர் பெரியாரா யுள்ளவரே யெனினும் சிறியா ரென்றே உலகத்தாராற் கொள்ளப்படுவர். பெரியாரினத்தைச் சேர்ந்தவர் பின்னர்ச் சிறியா ரினத்தைச் சேர்தல், ஆனினெய்ப் பாண்டத்தின்க ணிருந்ததைப் பின்னர் வேப்பநெய்ப் பாண்டத் தின்க ணிட்டதை யொக்கும்.

மாந்தர்க்கு மனநலமானது, காரியங் காரணத்தின் வேறு படாமையின் நன்மக்கட் பேற்றையும், நல்வினையே செய்யப் படுதலின் மற்றெல்லாச் செல்வங்களையும், இம்மை மறுமை யின்பத்தையுந் தரும்; அம்மனநலம் வலிபெறுதற் கேதுவாய இனநலமானது, அவர்தா மவ்வினத்தோ டெண்ணிச்செய்வ ராகலின் எல்லாவினையும் நல்லவாதலையும், புகழ் கொடுத்தற் குரிய அந்நல்லோர் தாமே யினமாகலின் எல்லாப் புகழையுந் தரும். ஒருவர் நல்லரென்றாகத் தீயரென்றாக நிகழுஞ் சொற்கு அவரினமே காரண மாகலானும், தீயதை நல்லதாக்கவும் நல் லதைத் தீயதாக்கவும் வல்ல ததுவே யாகலானும், இறைவற் றலைக்கூடிய சீவன்முத்தர்க்கேயன்றி ஏனையோர்க் கஃதின்றி யமையாததொன் றாகலானும், இம்மைமறுமை யின்பங்களையே யன்றி வீட்டுலக வின்பத்தையுங் கொடுக்கவு மெய்தாமற் றடுக் கவும் வல்ல ததுவே யாகலானும், முன்னை வினையான் மனநன் மைக்கு அல்லது தீமைக் கேதுவாய பொதுவான வறிவைப் பெற்றுள்ள மாந்தர் அவ்விருவகை யினத்துட் கேட்டையே யெய்துவிக்குஞ் சிறியா ரினத்தை யஞ்சி வெறுத்து எல்லா நன்மைகளையுந் தரும் பெரியா ரினத்தைச் சேர்ந்து அவரை வழிபட்டு அவர் சொற்படி நடத்தலையே விரதமாகக் கோடல் வேண்டும். அங்ஙனம் கொள்வாராயின் அச்சிறியா ரினம் படி

முறையே தேயப் பெரியாரினம் வளர்தலான் இந்நிலவுலகத்துப் பாவங்க டேய்தற்கும் அறங்கள் வளர்தற்கும் அஃதே துவாகும்.

கவரா மனத்தினை யுடைய மகளிர் நிறையின் வழுவாமற் றம்மைத்தாங் காத்துக்கொண் டொழுகுமாறுபோலப், பெருமைக்குணனும் ஒருவன் மனமொழிமெய்களை யொடுக்கி ஒப்புரவுமுதலிய செய்துநிறையின் வழுவாமற் றன்னைத்தான் காத்துக்கொண் டொழுகுவானாயின் அவன்க ணுண்டாம். வறியாராயவழியும் பிறராற் செய்தற் கரியவாய தஞ்செயல்களை விடாது அவை செய்யு நெறியாற் கடைபோகச்செய்யும் பெரியாரை வழிபட்டு அவரியல்பினை யாங் கோடுமென்னும் கருத்துக், குடிமை செல்வங் கல்வியென் றிவற்ற துண்மை மாத்திரத்தாற் றம்மை வியந்திருக்கும் மற்றைச் சிறியாராயினோர் மனத்தின்க ணுளதாகாது. நூலானேயன்றி உய்த்துணர்வானும் அறநுண்மையை யறிந்தவறிவு சீலங்காலமென்னு மிவற்றானும் முதிர்ந்து, நீதியையும் உலகியலையும் அறிதலையுடைய பெரியாரது கேண்மையை, யாவரு மதன தருமையை யோர்ந்து நன்கு மதித்தல் அவர்வரைநிற்றலென்பன முதலாகப் பிணிப்புண்ணுந் திறனறிந்து செய்து பேணிக்கோடல்வேண்டும். காலோடு கையை யமுக்கி வாயை நெறித்து மருந்தையேனும் அமுதையேனு மூட்டுந் தாய்க்கொப்பாய் எளிதிற் பயிலுந் தீமையாயினவற்றை நீக்கி அரிதிற் பயின்றுகோடற் குரிய நன்மையாயினவற்றைப் பயிற்றிவிடும் பெரியாரை யாவருந் துணையாகக் கொள்வரேல், அஃதவரைத் தீமையாவனவற்றை வெறுக்கச் செய்யும்; செய்ய, அவற்றைச் செய்யாமை யுளதாம்; உளதாக, நன்மையாவனவற்றை விரும்பிச்செய்த லுண்டாம்; உண்டாகப், பகையின்றாய் உள்ளது நண்பேயாகப் பொருட்செல்வம் விருத்தியாகும்; விருத்தியாக, மேன்மேலு மில்லற மினிது சித்திக்கும்; சித்திக்க, இம்மைமறுமை யின்பங்க ளுளவாம்; உளவாகத், துன்பமாகிய வரம்புடைய அவ்வின்பங்களை மேன்மேலும் நுகர்ந்தெய்த்தலான் அவற்றில் வெறுப்பும் அவ்வரம்பிலின்பத்தில் விருப்பு முண்டாம்; உண்டாகத், தீமையாவனவற்றையே

யன்றி நன்மையாவனவற்றைச் செய்தலினும் விருப்புவெறுப்பு நீங்கும்; நீங்க, உலகப்பற் றொழியும்; ஒழிய, மெய்யுணர் வுதிக்கும்; உதிக்க, அவாவறுத்த லுளதாம்; உளதாக, அவர்க்குள்ளது என்ஞான்றும் அழிவின்றி நிலைநிற்கும் அவ்வாம்பியின்பமே.

நீர் தான்சேர்ந்த நன்னிலமுந் தீநிலமும் நல்லொளியுந் தீயிருளும் முதலாயின காரணமாக நல்லதென்றாக அல்லது தீயதென்றாகச் சொல்லப்படுமாறுபோல, அறிவுந் தான்சேர்ந்த நல்லுடம்புந் தீயுடம்பும் நல்வினையுந் தீவினையும் முதலாயின காரணமாக நல்லதென்றாக அல்லது தீயதென்றாகச் சொல்லப்படும்; நல்லதாய நீர் பூதசூரியனாற் றன்சுவநிலையைப் பெறுமாறுபோல, நல்லதாயவறிவும் ஞானசூரியனாகிய இறைவனாற் றன்சுவநிலையைப் பெறும். ஆகலின் மக்கட் பிறப்பினர் பெறற்குரிய பேறுகள் பலவற்றுள்ளும் அவ்விறைவனை யெய்தும் நெறிக்கட் செலுத்தி அந்நெறிக்கட் டவறா தொழுகச்செய்யும் பெரியாரைத் துணைக்கோடலே பெறற்கரிய பெரும்பேறாம்.

---

## ௬௭. அதி. வினைசெயல்வகை.

வினைசெயல்வகையாவது அரசரும் பிறருந் தாஞ்செய்யும் வினைகளை யாராய்ந்து செய்யுந் திறம். பெரியாரைத்துணைக்கொண்ட அரசரு மேனையோரும் இம்மைக்க ணறஞ்செய்தற்கு வேண்டிய பொருளீட்டன் முதலாயினவற்றுக்குச் செய்யத்தகும் வினைகளை அப்பெரியாரோடு மாராய்ந்து பின்னர்த் தாமேயு மெண்ணி, அப்பொழுது அவ்வினையால் அழிவதனையும் அழிந்தாற் பின் ஆவதனையும் ஆய்நின்று எதிர்வின்கண் வருமாக்கமாகிய அதுதரு மூதியத்தையுஞ் சீர்தூக்கி, நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது மிக்கு எதிர்வினும் அது வளர்ந்து வருமாயிற் செய்தல்வேண்டும். ஒருவன் பெரிய முயற்சியினவும் பயனில்லனவும் அதுசிறிதாயினவும் ஐயமா

யினவும் பின்றுயர்விளைப்பனவுமாகிய செய்யத்தக்கன வல்ல வற்றைச் செய்தலாற் கெடுவன்; அதனையன்றிச் செய்யத் தக்கவற்றைச் செய்யாமைதன்னானுங் கெடுவன். செய்யத்தக்க கருமத்தையும் முடிக்கு முபாயத்தை யெண்ணித் தொடங்கு தல்வேண்டும். தொடங்கிவைத்துப் பின்னெண்ணக்கடவே மென்றொழிதல் குற்றமாம். என்னை? முன்னெண்ணிவைத்து முடிக்கு முபாயத்தாற் கருமத்தை முயலாத முயற்சி பின்றுணை வர்பலர் நின்று புரைபடாமற் காப்பினும் அவ்வுபாயக்குறை வொடு தொடங்கப்பட்டமையின் கருதிய நன்மையன்றிக் கரு தாத தீமையே பயக்கு மாகலான். ஒருவன் இனத்தோடுந் தனித்து மாராய்ந்து துணிதலில்லாத வினையைத்தொடங்கின் அஃதழிவெய்தியவழி இவன் அறிவும் மானமு மிலனென்று உலகத்தா ரிகழும் இகழ்ச்சிக்கு மாளாவன்; ஒருவினையை முடித் தற்பொருட்டுத் தன்னிலைமையோடு பொருந்தாத உபாயங் களைச் செய்யினும் அவன் அவரா னிகழப்படுவன்.

கொடுங்கோன்மன்னர் தங்குடிகளுக்கும் ஏனை யயனுட் டரசர்க்கும் அவர்குடிகளுக்கும் இன்னாதவற்றைச் செய்தலைச் செங்கோன்மன்னர் கண்டுழி அவரை யொறுத்து நன்னெறிக் கட் செலுத்தன் முறையாகலின், அவர்தாம் அக்கொடுங்கோன் மன்னரைப் பகைத்து அவரொடுபொரச் செல்லுங்காற், றாம் அவரென்னு மிருபாலார் வலியுங் காலமு மிடனு மறிந்தே செல் லுதல்வேண்டும். ஒருவன் வினைசெய்யத் தொடங்குங்காற் றான் செய்யக்கருதிய வினைவலியையும் அதனைச் செய்துமுடிக்குந் தன்வலியையும் பகைவலியையும் இருதிறத்தார் துணைவலியை யுஞ் சீர்தூக்கி எல்லாவற்றானுந் தன்வலி மிகுமாயிற் றொடங்குத றக்கதாம். அங்ஙனஞ் சீர்தூக்கித் தொடங்காது பகைத்துப் பொரின், அஃதப் பகைவலி மிகுந்துழித் தன்னையுந் தன்குடி களையும் அப்பகைவர்க் காளாக்கிக் கெடுத்தற்கே யேதுவாகும்.

ஒருவன் காலத்தோடுபொருந்த வினைசெய்தொழுகுதல், அங்ஙனஞ் செய்யாதா ரொருவர்கண்ணும் நில்லாது நீங்குஞ் செல்வத்தை, வினைவாய்த்துவருதலாற் றன்க ணெஞ்ஞான்றும்

நீங்காமற் பிணிக்குங் கயிறும். தன்னின் வலியதாய கூகையைக் காக்கை பகற்பொழுதின்கண் வெல்லாநிற்கு மாறுபோலப் பகைவர் தம்மினும் வலியவரா யுள்ளவரேயெனினும், அறிவுடையார் அப்பகைவரை மிகைசெய்தபொழுதே அவரறியப் புறத்து வெகுளாது, தாம் அவரை வெல்லுதற்கேற்ற காலத்தினையறிந்து அது வருந்துணையும், உளதாயவப்பகை தேயாவண்ணம் உள்ளே வெகுள்வர். கொக்குக் கடற்கரைக்கண் மீன்கோடற் கிருப்புழி, அக்கடல் பெருகுங்காலமாயிருப்பினும் ஓடும் மீன்களெல்லாஞ் சிறுமீன்களாயிருப்பினும் வற்றுங்காலமும் பெருமீனும் வருமளவும், முன்னறிந்து அம்மீன்க டப்பாமைப்பொருட்டு உயிரில்லதுபோன்று வாடியிருந்து, அக்காலமும் பெருமீனும் வந்தெய்தியவழி அம்மீன் றப்பிப்போதற்குமுன் விரைந்துகுத்து மாறுபோல, அடக்கமுடையார் தாம் வினைமேற் செல்லத்தகாத காலமாயிருப்பினும் எதிர்ப்பட்டவர் தமக்கு எதிரிகளாகத்தகாதவராயிருப்பினும் தக்ககாலமும் எதிரியும் வந்தெய்துந்துணையும் அடங்கியிருந்து எய்தியவழி விரைந்து வினைமேற்சென்று அதனைத் தப்பாமற் செய்துமுடிப்பர். எதிரிகளாகத் தகாதவரோ டெதிர்த்து வினைசெய்வார் யாவரானு மவமதிப்பும் பழியும் பாவமுமே யெய்துவர்; படிமுறையே வலிதொலைதலான் அப்பெற்றியினரானும் பின்னர் வெல்லப்படுவர்.

வினைமேற் செல்வார் வலியுங் காலமுமேயன்றி இடனறிந்து சேறலும் வேறற் கின்றியமையாது. நிலைப்படா நீரின்கட் பிறவெல்லாம் வலியுட னிற்றலாற்றாமையின் அவற்றையெல்லாம் முதலை வெல்லும்; அவையெல்லாம் இயங்குதற்குரிய நிலத்தின்கண் வலியுட னிலைபெறலாற்றாமையின் அப்புனலைவிட்டு நீங்கியவழி அதனைப் பிறவெல்லாம் வெல்லாநிற்கும். அதுபோல வினைமேற்செல்வார் பகைவர் நிற்றலாற்றா விடனறிந்து செல்வாராயின் அப்பகைவர் அவர்தமக் கெளியராவர்; அன்றித் தாம் நிற்றலாற்றா விடத்துச் செல்வாராயின் தாம் அவர்க் கெளியராவர். ஆகவே அரசனாவான் வினைமேற் செல்லுங்கால் வலியுங் காலமு மிடனு மென்னுமிவற்றை யாராய்ந்து அவை தாந் தனக்கு வாய்ப்புடையவாயின், வினைதொடங்குமாற்றையும்

அதற்கு வரும் இடையூறுகளையும் அவற்றை நீக்குமாற்றையும் வெல்லுமாற்றையும் இவைபோல்வன பிறவற்றையும் நன்கெண்ணித் தெளிந்தபின்னர் அவ்வினைமேற் செலின் வெல்லுதல் திண்ணமாம்.

கொடுங்கோன் மன்னரோடும் பகையாது அவர்க்கு நல்லறிவைப் புகட்டி நல்வழிப்படுத்தலே செங்கோன்மைப்பாலதாம். வேற்றரசர் எப்பெற்றியினரா யிருந்துளரே யெனினும் அவ்வொருவரோடும் பகையாது தங்குடியோம்ப வல்லவரே நல்லரசர். அயலாரோடு பொருந்தியொழுகுவதுஞ் செய்யாது தன் வலியள வறிவதுஞ் செய்யாது தான் மெலியனாயினுந் தன்னை வியந்து அவ்வயலாரோடு பகைத்தவன் விரைந்துகெடுவன். எளியரென்று பலரோடு பகைகொள்வான் தான் வலியனேயாயினும் அவர் தொக்கவழி வலியழிதல், பீலியேற்றிய சகடமும் அப்பீலியை அது பொறுக்குமளவன்றி மிகுத்தேற்றின் அச்சமுறிதல்போலும். ஆற்றுமையின் வினைமேற்செல்லும் வலியனுய வரசனும் செல்லலாமளவுமே செல்லல்வேண்டும். ஒருமரக்கோட்டினது நுனிக்க ணேறிநின்றார் தம்மூக்கத்தால் அவ்வளவினைக் கடந்து மேலுமேற வூக்குவாராயின் அவ்வூக்கம் அவருயிர்க் கிறுதிக் கேதுவாமாறுபோலப், பகைமேற் செல்வான்றொடங்கித் தன்னாற் செல்லலாமளவுஞ் சென்றுநின்றான் பின் அவ்வளவி னில்லாது மனவெழுச்சியான் மேலுஞ் செல்லுவானாயின் அவ்வெழுச்சி வினைமுடிவிற் கேதுவாகாது அவனுயிர் முடிவிற் கேதுவாகும்.

ஈட்டியபொருளை நான்கு கூறாக்கி, அவற்று ளிரண்டனையுந் தன்செலவாக்கி, ஒன்றனை மேல் இடர்வந்துழி உதவும் பொருட்டு வைப்பாக்கி நின்றவொன்றனைத் தக்கார்க் கீந்து வாழமாட்டாதான் வாழ்க்கைகள் உள்ளனபோலத் தோன்றி மெய்ம்மையான் இல்லையாய்ப் பின்பு அத்தோற்றமுமின்றிக் கெட்டுவிடுமாறுபோலச் செய்யத்தகும் வினையைச் செய்யும் வகை யறிந்து செய்யாதான் வாழ்க்கையும் விரையக்கெடும். ஒருவற்குப் பொருள் வருகின்ற நெறியளவு சிறிதாயிற்றாயினும்

போகின்ற நெறியளவு அதனிற் பெருகாதாயின் அதனாற் கேடில்லை யாகலின் பயனில்லனை முதலாயினவற்றைச் செய்யாமை செய்யத்தக்கனவற்றைச் செய்யாமையினு நன்று. பாவமும் பழியுங் கேடும் பயக்கும் வினைகளை யாவரும் செய்யா தொழிதலைப் பாதுகாத்தலில் விழிப்பாயிருத்தலே மேலாய வினைசெயல்வகையாம்.

தன்னைப்போல யாவருஞ் செங்கோன்மன்னரா யிருந்துழியன்றிப் போரின்றியிருத்தல் செங்கோன்மன்னற் கரிதாகலின், வேற்றரசர்சேனை வெற்றிபெறலைக் கருதித் தான் அறியாவகை வந்து போர்புரியச் செய்மைக்க ணன்று மிகவண்மைக்கட்டன்னகர்மதிலின் நாற்புறத்துஞ் சூழ்ந்துகொண்டதே யெனினும், அறிவுடையனாய வச்செங்கோன்மன்னன் றுணைவரோடெண்ணியன்றி வெகுளிமேற்கொண்டு விரைந்தமர்செய்யச் செல்லான். அப்பகையரசர்தங் குலத்தையும் பகைக்குக்காரணமாய அவர்த முள்ளக் கொள்கையையும் அவர் இருந்துவந்த நிலத்தையும் அவர்தஞ் சேனையையும் முன்ன ரெய்திய வெற்றிகளையும் இன்னோரன்ன பிறவற்றையும் ஒற்றரா னறிந்து முன்னுள்ளார் முறையினையுஞ் சீர்தூக்கிச் சாம பேத தானமென்னும் மூவகை மரபானும் முற்றாதேயாயின் பின்னர்த்தண்டஞ் செய்தலைமேற்கொண் டொழுகுவன். தன்னின் மெலியாரை வலியராய்வைத்து வழங்கன் முதலிய மூன்றனுள் ஒன்றனைச் செய்தலும் வலியாரொடு பொரச்சேறலும வேந்தர்க் கிழுக்காம்.

பெருவெள்ளத்தைத் தடுக்குமணை யாண்டும் மிக்க வலியுடைத்தாயதே யெனினும் ஓரிடத்தின்கண் ஓர் சிறுத்துவாரமுடைத்தாய்ப் போற்றுவா ரிலதேயாயின் அவ்வணையாற் பயன்படுதலின்றாமாறுபோல, அரசன் படைமுதலாயின வலியுடையவாயினும் போற்றுவா ரிலரேயாயின் அவை பயப்படாவாம். அரியயனரனென்னும் மூவரோடொத்த வலியுடையராயினும் அரசர்க் கமைச்சர்சொல்வழி யாற்றலே யாற்றல். ஒற்றரை ஒற்றரா னாய்தலும், கற்றறிந்தாரைத் தங் கண்ணெனக் கோடலும், சுற்றத்தைச் சூழ்ந்து பெருக்கலும் வினைசெய்வார்க்

கின்றியமையாதன. இனியசொல்லு மீகையுந் துணையோ டெண்ணிச்செயலும் வினைத்தூய்மையும் நீதிநெறி கடவாமையும் முதலியவற்றாற் சிறந்த மன்னர்க்கு வினைசெய்தற்கண் ஓர் காலத்தும் அழிவுவாராது. வினை வாய்த்தலும் மாதம் மும்மாரி பெய்தலும் வயனிலம் விளைதலும் மாந்தர் அறம்பொருளின் பங்களைப் பெறுதலும் முதலிய விவையனைத்தும் அரசன்றன் செங்கோலின்கட் டங்கினவாம்.

அரசன் அரசிய னடாத்தல்போலவே ஓர் குடித்தலைவன் குடித்தன நடாத்தலு முளது. பழிபாவங்கட் கேதுவாய குற்றங்க ளெய்தாவண்ணமும் நடுவுநிலைமை யொப்புர வீகைமுதலிய குணங்க ளெய்தும்வண்ணமும் சிறந்து விளங்கிக் குடித்தனத்தை யினிதினடாத்த வல்லானொருவன் அரசிய னடாத்தற்கும் வல்லனாவன். தத்தங் குடிக்குத் தலைமைபூண்டுள்ளார் யாவரும், நள்ளாரையழித்தும் நட்டாரை யாக்கியும் தங்கீழ்ப் பட்டாரைப் புரத்தல் பொருளீட்ட லறஞ்செய்தல்களாய தங் கடமைகளைச் செய்தல்வேண்டும் அங்ஙனஞ் செய்வாரே அவற்றானெய்து மின்பந் துய்ப்பவராவர்.

---

## ௨௮ அதி. செங்கோன்மை

செங்கோன்மையாவது உருவுந் திருவு மாற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தன் முதலிய காரியங்களினுஞ் சோர்வில்லாத அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை ஒருபாற் கோடாது செவ்விய கோல்போறலின் செங்கோலெனப்பட்டது.

நாடோறும் இரவான் வருந்தித் தன் வயிறு நிறைத்தல் ஒருவற்கு இளிவரவானும் பாவத்தானும் எள்ளற்பாட்டினை விளைத்து நன்குமதிப்பினை யழிக்குமாறுபோல, அரசற்குச் சோர்வு தற்காவாமையானும் காரியக்கேட்டானும் எள்ளற்

பாட்டினை விளைத்து நன்குமதிப்பினை யழிக்கும். பகைவரை யடர்த்தற்கும் கொடியோரை யொறுத்தற்கும் வேண்டியவளவின் மிகுந்தவெகுளி, தன்னைக் கொல்லாது ஒரோவழிப் பகைவரையுங் கொல்லுமாகலின், அரசற் கவ்வெகுளியைக்காட்டினும் பெருஞ்செல்வ மின்பம் பெருமிதமென் றிவற்றான் வருஞ் சோர்வு தன்னையே கோறலிற் றீது.

தன்கீழ் வாழ்வார் குற்றஞ் செய்தால் அக்குற்றத்தை நாடி, அவர் யாவரேயெனினும் ஒருவர்மாட்டுங் கண்ணோடாது நடுவுநிலைமையைப் பொருந்தி, அக்குற்றத்துக்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடு மாராய்ந்து அவ்வளவிற்றாகச் செய்வதே அரசற்குமுறை. அரசன் செங்கோ லிலதாய் ஏம மில்வழி, மழை யுளதாய் உணவுளதாயினும் குடிகட் கதனா லுளதாகும் பயன் மிகச்சிறிதாகும். இன்சொற் சொல்லலும் தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின செய்து தன்குடிகளையு மணைத்துச் செங்கோலையுஞ் செலுத்து மரசன்மாட் டியாவரும் நீங்கா அன்பின ராவ ராகலின் அவன் போரின்கண் வென்றியெய்தி நிலமுழுது மாளும்; அவனாட்டின்கட் பருவமழையுங் குன்றாவிளைவு முளவாய் எல்லா வளமுங் குறைவின்றி மிகும். மகனை முறைசெய்தானுந் தன்கை குறைத்தானும் போன்று முட்டவந்துழியும் முட்டாமற் செலுத்துவனாயின் பூமியைக் காக்கு மரசனை அவன் செலுத்துஞ் செங்கோலே காக்கும்.

நாடோறு மாராய்ந்து முறைசெய்யாதும், பொருள் வெஃகிக் குடிகளை யலைத்தற்றொழிலைத் தன்மேற்கொண்டு முறையல்லவற்றைச் செய்தும் ஒழுகு மரசனுக்குச் செல்வமும் புகழுமுளவாகா; அவனுடைய கொடுங்கோலின்கீழ் வாழின் யாவர்க்கும் பொருளினை தின்மையினும் உடைமை யின்னாது. முறைவேண்டினார்க்கு எளியசெவ்வியை யுடையனாய், அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடு மாராய்ந்து, நின்ற வுண்மைக்கொப்ப முறைசெய்து, குடிகளைப் பிறர்நலியாமற் காத்துத், தானும் நலியாமற் பேணுபவனே பழிபாவங்கட் காளாகாதவரசன். தீக்கொளுவுவார் நஞ்சிடுவார் கருவியிற்கொல்வார்

கள்வர் ஆறலைப்பார் சூறைகொள்வார் பிறனில்விழைவாரென்றிவர்முதலாய கொடியரைத், துன்பஞ்செய்தல் பொருட்கோடல் கோறலென்னு மூன்றனுள் முன்னைய விரண்டானும் அவரவர் குற்றத்துக்குத்தக வொறுத்து, அவரை அக்குற்றத்தினீக்கித் தூயராக்குதலும், பின்னையவகனால் அதற்கேற்றவரை, உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காக்குமாறுபோல வொறுத்துத் தக்கோரைக் காத்தலும் வேந்தர்க்குச் சாதிதருமமாகலிற் பழியாகா.

ஒருவன் தன்னின் மெலியார்மேற் சென்றவழி அதனை நடுவாகநின் றாராய்ந்து பின்னு மது செய்யாமற்பொருட்டு அவனை அக்குற்றத்துக்கொப்ப வொறுப்பான்றொடங்குங்கால், அவன் அஞ்சுதற்பொருட்டு அளவிறப்பச் செய்வான்போற்றொடங்கிச், செய்யுங்கால் யாவரும் வெருவாமைப்பொருட்டு அளவிறவாமற் செய்பவனே அரசனுவான். தன்னைக் காணவேண்டுவார்க்குக் கால மரியனுந்தன்மை, கண்டால் இன்னுதமுகத்தினை யுடையனுந்தன்மை, கண்ணோட்ட மின்மை, கடுஞ்சொற்சொல்லல், குற்றத்தின் மிக்கதண்டஞ் செய்தலென்னு மிவைகள் குடிகளஞ்சும் வினைகளாகலின் இவற்றைச் செய்யு மரசன் ஆயுளு மடுமூரணுஞ் செல்வமு மிழப்பன். காரியத்தைப் பற்றிவந்த வெண்ணத்தை அமைச்சர்மேல் வைத்து அவரோடு தானு மெண்ணிச் செய்யாத வரசன், பிழைப்பாற் 'காரியந் தப்பியவழி அதனை அவர்மேலேற்றி அவரை வெகுளுவானுயின், அவர் வெருவி நீங்கவே பகுதியஞ்சும் வினைசெய் தாணிழத்தலான் நீதிநூன்முதலிய கல்லாத தகுதியிலலாரைத் தனக்குப் பகுதியாக்கிப், பகைவந்த காலத்து அவரும் வெருவிநீங்குதலிற் றமியனுய்த் தானும் வெருவி அப்பகைவயத்தனுதற் கேதுவாய தானஞ்சும் வினைசெய்து கெடுவன். குடிகளும் பகுதியுந் தானு மஞ்சுதற் கேதுவாய வினைகளைச் செங்கோலரசர் மறந்துஞ் செய்யார்.

ஒருவன் கண்ணுக்கணியும் ஆபரணமாவது தன்னேடு பயின்றுரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமையாகிய கண்ணோட்டமேயாம்... ஒப்புரவுசெய்தல் புறந்தருதல்

பிழைத்தன பொறுத்தலென் றிவைமுதலாயின நிகழ்வது கண்ணோட்டத்தின்கண்ணே யாகலின் அஃதில்லாதார் தமக்கும் பிறர்க்கும் பயன்படார். கண்ணோட்டமில்லாத வரசர், வெருவந்த செய்தலானும் அந்நாட்டு வாழ்வார் புலியை யடைந்த புல்வாயினம்போன்று ஏமஞ் சாராமையானும் நிலவுலகின்கணுளராதல், பழியும் பாவமுஞ் செய்து இந்நிலவுலகிற்குப் பாரமாதற்கே பிறிதொன்றற் கன்று. தம்மொடு பயின்றார் பிறரையிடுக்கண்செய்துழி அவரைக் கண்ணோடி யொறாராயின் முறைசிதையுமாகலின் அம்முறைசெய்தலாகிய தந்தொழி லழியாமற் கண்ணோட வல்லராய்த், தம்மாட்டுக் குற்றஞ் செய்தவரையொறுதும் தம்மை யொறுக்கு மியல்புடையாரிடத்தும் கண்ணோட்ட முடையராய்க் குற்றத்தைப் பொறுக்கு மியல்புடையவரே அரசராவார். வினைசெய்யுங்காலும் அற்றைப்பொழுதுவாடினோரைக் கண்ணோடிக் கோறல்செய்யாமை வேந்தர் தஞ்செங்கோலின்பாலதாம். பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்கவாண்டன்மையென்று சொல்லுவாராயினும், இலங்கையர்வேந்தன் போரிடைத் தன் றானைமுழுதும்படத் தமியனா யகப்பட்டானது நிலைமை நோக்கி அயோத்தியரிறை மேற்செல்லாது இன்றுபோய் நாளை நின் றானையோடுவாவென விட்டாற்போன்று அவர்க்கு ஒருதாழ்வு வந்தவழிக் கண்ணோடி அது தீர்த்துக் கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மையென்று சொல்லுவர்.

வறுமையானுதல் பிறிதொன்றானுதல் மிக்கதுய ருழந்தானொருவன் என்றுயர்களைந் தருள்செய்குதியென் றிரந்துழி இயலுந்திறத்தா னுதவாமை யாவர்க்கும் பழியும் பாவமுமாம். இவன் இன்றே வந்தானென்றும் இவன் என்றந்தையைத் தாயைக் கொன்றுவந்தானென்றும் பாராது எப்பெற்றியரேயெனினும் அடைக்கலமென் றடைந்தோர்ப் புரத்தல் அறத்தின்பாலதாம். அடைக்கலங் காவென் றடைந்த புறவின்பொருட்டுத் துலைக்கட்புக்க பெரியோனென்ன வறிவுடையார் தமதுடம்பை யோம்பலைப் பொருட்படுத்தாது அடைந்தோர்ப் புரந்து புகழுடம்பையே யோம்புவர். அடைந்தோர் மிக்க

பகையாயின செய்யுமியல்பினரேயெனினும் அவரைப் புரத்தல் அரசர்க்குச் செங்கோன்மைப்பாலதாம்.

செங்கோன்மையை நடாத்து மரசற்குப், பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத்தார்மாட்டும் நிகழ்ந்தனவறிந்துணர்த்தும் ஒற்றும் புகழமைந்த நீதிநூலுமாகிய இவையிரண்டும் இரண்டுகண்கள்போலும். ஒற்றுத் தன்கண் செல்லமாட்டாத பரப்பெல்லாஞ் சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லா முணர்த்துதலானும், நூல் அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன்னுணர்வு செல்லமாட்டாத வினைகளையெல்லாஞ் சொல்லி யுணர்த்தலானும் அரச னிவ்விரண்டனையுமே தனக் கூனக்கண்ணும் ஞானக் கண்ணுமாகத் துணிந்துகொண் டொழுகுதல்வேண்டும். தன் காரியஞ்செய்வார் செய்வனவும் சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும் பகைவர் தன்னற்ற மாராய்தலும் மேற்றேறப்படுதலும் முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவு மறிந்து அவற்றிற் கேற்றன செய்யவேண்டுதலின், எல்லார் கண்ணும் நல்லவுந் தீயவுமாகிய சொற்களுஞ் செயல்களுமாய் நிகழ்வன வெல்லாவற்றையும் ஒற்றப்பட்டார் மறையச் செய்த செயல்களையும் அவர்க்குள்ளாயினரை யறிந்து அவர் அயிரா மற் சென்றொட்டித் தாமே சொல்லும்வகை அதற்கேற்ற சொல் லாகச் செயலாக முன்னே விளைத்து அத்தொடர்பாற் கேட் குங்காலும் உருதான்போன்று நின்று கேட்கவல்லனுய்க் கேட் டறிந்த செயல்களிற் பின் ஐயப்படாது துணியவல்லனுய் ஒற் றப்பட்டார் கண்டால் ஐயுறாத வடிவோடுபொருந்தி அவர் ஐயுற் றறியலுறிற் செயிர்த்துநோக்கிய அவர் கண்ணுக் கஞ்சாது நின்று நான்குபாயமுஞ் செய்தாலும் மனத் துக்கொண்டவற்றை உமிழாமையும் வல்லனுயுள்ள ஒற்றனுல் நாடோறும் விரைந்தறிந்து, ஒருவனை யொருவ னறியாமல் மூவரையேனும் ஒருபொருண்மேல் வேறு வேறு விட்டு அவர் மூவர்சொல்லும் பயனுல் ஒத்தனவாயின் அது மெய்யென்று தெளிந்து நீதிநூலின்வழியே ஏற்றன செய்தல் செங்கோன்மை யுடையனுய வரசன் றொழில்.

கல்வி கேள்விகளி னெய்பரியன்ன பான்மையனுய்க் கறை மனம்படைத்த கொடுங்கோன்மன்னன், காமமும் மிக்ககோப

முங் கடும்பற்றுள்ளமும் நன்மையினீங்கிய மானமும் அளவின் மிக்கவுவகையுஞ் செல்வச்செருக்குமென்னுங் குற்றங்களையே குணமெனக்கொண்டு பாவமும் பழியுங் கேடும்முதலாயின பயக்கும் வினைகளையே செய்யும். ஒன்றை யெண்ணிப் பிறி தொன்றைச் சொல்லி மற்றொன்றையே செய்யும். நாணமென் பது சிறிதுமின்றித் தீநெறிக்கட் சேறலையே விரும்பிச்செய்யும். மனவழுக்காற் பொய்ம்மையுந் தீச்செயலாற் பகையுமே அவன் மாட்டு விளையும். அவன் ஆறலைக்குங் கள்வரினு மஞ்சப்படுவன். அவனைக் கண்டமாத்திரமேயன்றிப் பெயரைக்கேட்டமாத்திரத் தும் யாவரு மஞ்சி நடுநடுங்குவர். அவன்மாட் டழுக்காறு முத லாய குற்றங்களெல்லாங் குடிகொண்டுவிளங்கும். தன்னாட்டும் பிறர்நாட்டுங் கல்வி செல்வம் அதிகாரம் முதலாயவற்றானுத் தாரும் மிக்காருமுளராயிற் சிறிதும் மனஞ் சகியானு யவரை யெல்லா மிலராக்கற் கியலுந்திறத்தான் முயல்வன். யாண்டுங் கலகமுந் துயரமு மச்சமும் வறுமையும் பசியும்முதலாய கேடு களும் பழிபாவங்களுமே விளையும். யாண்டு மிடையறவுபடாப் போரும் பொருட்சேதமு முயிர்ச்சேதமு முண்டாம். ஒருவன் கொடுங்கோன்மை உலகம்முழுதையும் மலைவுறச்செய்து நிலை குலைத்து யாவர்க்கு மறம்பொருளின்பங்க ளுளவாகாமற் சிதைத்துவிடும். உலகத்து மன்னுயிரெல்லாங் கொடுங்கோன் மன்னற் கிரையாம்.

கல்வி கேள்விகளி னன்னமன்ன நன்னீர்மையனாய் நல்லறி வெய்திய செங்கோன்மன்னன் றன்னுயிர்போன்று மன்னுயி ரோம்பும். கள்வர் பகைவர் முதலாயினோர்க்கும் மிகையாமிறை யிறுத்தன் முதலாயவற்றுக்கும் அஞ்சுமச்சம் அவனாட்டு மன் னுயிர்க்கில்லை. அவனாற் றந்நாட்டுக் தந் தமக்குங் கேடு விளையு மென்னு மச்சம் பிறநாட்டு மன்னுயிர்க்குமில்லை. பரிசனமுங் குடிசனமு மவ்வரசன் வழிப்படுத றிண்ணம. அவ்வரசன் செங்கோற் காந்தம் வேற்றரசரிருப்பு மனத்தையுந் தன்வசப் படுத்தும். அச்செங்கோன்மன்னன் செம்மையும் நாணும் ஒழுக்கமும் தூய்மையும் வாய்மையும் கேண்மையும் துணி வுடைமையும் தூங்காமையும் அறிவுடைமையும் பொறையுடை

மையும் கொடையுடைமையும் முதலிய குணங்களான் மேம்பட்டு விளங்குவன். அவனாட்டின்கண் மாத மும்மாரி பெய்யும், மாரிபெய்ய நீருயரும், நீருயர வரம்புயரும், வரம்புயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயர வக்கோனு முயரும். யாவர்க்கும் பொருட்செல்வம் மேன்மேலும் மிக்கு வளரும்; வளர, அவர் யாவரும் இல்லறத்தை இனிதினிகழ்த்துவர்; நிகழ்த்தத், தெய்வத்தான் வறியராயினாரும் முட்டில் செல்வத்தராவர். அந்நாட்டு மன்னுயிரெல்லா மின்ப நுகர்ச்சியை யிம்மையிற் செம்மையி னெய்தும். இன்பநுகர்ச்சி தெவிட்டலா னதன்மாட்டு விருப்பு வெறுப்பற்றவராய் யாவருந் துறவறம்பூண் டதன்வழி யினிதினொழுகுவர். அந்நாட்டின்கட் செங்கோன்மையென்னும் ஞாயிற்றினொளி செலலாதவிடமில்லையாக யாண்டு மறியாமையிரு ளிரியல்போகும்; போக, யாவருஞ் செந்நெறிக்கட் சேறலால், அச்செங்கோன்மன்னன் ஆஞ்ஞைச்சக்கர முருட்ட வுருண்டுபோகுமுலகம் ஞானவொளியாயுள்ள ஞாயிற்றின்க ணொடுங்கும்.

---

## உகூ. அதி ஊக்கமுடைமை

ஊக்கமுடைமையாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல். உடம்பினும் வேறாய் அழிதன் மாலைத்தாகிய பொருளுடைமை நில்லாது நீங்கிப்போ மாகலின், ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது உள்ளத்துப்பண்பாகிய ஊக்கமுடைமையேயாம். ஊழான் வறியராய்ப் பிறந்துள்ளார் ஊக்கத்தானே செல்வராவர். ஊழாற் செல்வராய்ப் பிறந்துள்ளார் ஊக்கமின்மையான் வறியராவர். நிலைபெற்ற வூக்கத்தை யுடையார் மாட்டுப் பொருள் தானே வழிவினவிச் சென்று சார்வார்போலச் சென்றுசாருமாகலின் அவ்வூக்கத்தைக் கைப்பொருளாக வுடையார் எய்திநின்ற பொருளை ஊழானிழந்தாராயினும் வருந்தார். ஊக்கமுடையார் முயன்று வினைசெய்து பொருட்செல்வராய் அதனானே அறனுமின்பமுமெய்தி இனிதுவாழ்வர்.

அறியாதார் சிலர் வினைமுயற்சி செய்யாமையே இன்பமா மெனக் கருதுவர். செல்வ முதலாயின வுடையரேயெனினும் அவற்றை யட்டன்முதலாய முயற்சிசெய்யாதார் உணவைப் பெறாராய்ப் பசியான் வருந்துவர். உண்கலத்திட்ட சோற்றைத் தானும் அள்ளியுண்ணும் முயற்சிசெய்யாதார் எங்ஙனம் பசி நோயைத் தணிப்பர்? மாந்தர் முயற்சிசெய்யாது வறிதிருத் தலே அவர் மிக்கதுயருறுதற் கேதுவாம். எறும்பு காக்கை முதலாய பிராணிகள்போலக் கருமத்தைக் கடைப்பிடித்து இடைவிடாமுயற்சி யுடையவரே இம்மைக்கணுணவுடை முத லியவற்றைப்பெற் றின்பநுகர்பவராவர்; அப்பெற்றியினர் தாமே அறஞ்செய்யவும் வல்லவராகலின் மறுமை யின்பத்துக்கு முரியராவர்.

செய்யுங் கருமத்தி னூக்கமுடையார் அதனு லெய்தும் மெய்வருத்தத்தையும் நோக்கார், பசியையும் பாரார், துயிலு வதுஞ் செய்யார், பிறர்செய்யுந் தீமைகளையும் பொருட்படுத் தார், அவர்செய்யும் அவமதிப்பையும் உட்கொள்ளார், செவ்வி யருமையையு மெண்ணார், எடுத்த அக்கருமத்தை முடித்தே விடுவர்; அவர்க் கதுவே யின்பமாம். ஒருவர்க்கு முயற்சி யுடைமை அவரது செல்வத்தை வளர்த்தலையும் அஃதின்மை வறுமையை யடைவித்தலையுங் காண்டலின், முயற்சிக்கட் டிரு மகளும் சோம்பற்கட் சேட்டையும் உறைவாரென் றறிந்தோர் சொல்வ துண்மையேயாம். நீர்மிக்கதுணையும் நீர்ப்பூக்களின் றாள்க ணீளுமாறுபோல, மக்கட்கும் பொருண்முதலியவற்றி னுயர்வும் ஊக்க மிக்கதுணையு முயரும்.

முடிவுறு முயற்சியை முடியுமெனக்கொண்டு முயல்வார் புல்லறிவாளரே; நல்லறிவாளர் வினைசெய்தற்கண் வலியுங் கால மும் இடனும் விளைவும் முதலியவற்றை யெண்ணி முடிவுறற் பாலதனையே முயல்வர். எண்ணிச் செய்யும்வினை முடிதற் பெருமையை ஒருவற்கு மெய்ம்முயற்சியே யுண்டாக்கு மாக லின், எவருந் தஞ்சிறுமை நோக்கி நாம் இதனை முடித்தல் அருமையுடைத்தென்று கருதித் தளராது அவ்வினைக்கேற்ற ஊக்கமுடையராதல்வேண்டும்.

தாமதகுணத்தான் வருஞ் சோம்புதலும் விரைந்து செய்வதனை நீட்டித்துச்செய்யு மியல்பும் மறப்பும் அளவின்மிக்க துயிலுமாகிய இந்நான்கும் ஊக்கமுடைமையைக் கெடுக்குங் குற்றங்களாகலின் அறிவுடையார் அவற்றைத் தம்மாட் டுளவாகாமற் கடிந்துகோடல்வேண்டும் குறித்தநா ளுலந்தார்க்கு ஆக்கம் பயப்பதுபோன்று காட்டி அவர் விரும்பி யேறியவழிக் கடலிடை வீழ்த்துங் கலம்போலத் துன்புறுநீரார்க்கு இன்புறுத்துவபோன்று காட்டி அவர் விரும்பிக் கொண்டவழித் துன்பத்திடை வீழ்த்தலின் அவற்றை அறிவில்லாதவரே மேற்கொண் டொழுகுவர். அவற்றை மேற்கொண் டொழுகுமொருவன் பிறந்த குடியாகிய நந்தாவிளக்கு நந்திப்போதலின், அவை ஏனையிருள்போலாது அவ்விளக்கைத் தாமே யடர்ந்து மாய்க்கும் வலியுடைய விருளாம்.

பிறத்தலு மிறத்தலும் செல்வமும் வறுமையும் இன்பமுந் துன்பமும் அவரவர் செய்த கன்மத்தின் பயனைப் நுகர்தற்குளவாவன. மக்களாய்ப் பிறத்தற்கேற்ற நல்வினையுடையார் அம்மக்கட்பிறப்பை யெய்தி, நெய் யற்றுழி விளக்கொளியு மற்றுப்போமாறுபோல அந் நல்வினைத் தீர்வின்க ணிறப்பர். அங்ஙனமே செல்வ முடையராதற்கும் இன்பந் துய்த்தற்கும் ஏற்ற நல்வினையுடையார் அவற்றை யெய்தி அந்நல்வினைத் தீர்வின்கண் வறுமையையுந் துன்பத்தையு மெய்துவர். ஒருவற்குக் கைப்பொருளாதற்குக் காரணமாய ஆகூழான் முயற்சி யுண்டாம்; அஃதழிதற்குக் காரணமாய போகூழான் மடி யுண்டாம்; பொருள் எய்துதற்குத் துணைக்காரணமாய நல்லறிவுளதாயினும் கைப்பொரு ளிழத்தற் கேதுவாய போகூழ்வந் துற்றவிடத்து அஃ ததனைப் பேதையாக்கும்; அறிவு சுருங்கியிருப்பினும் கைப்பொருளாதற்கேதுவாயவாகூழ்வந் துற்றவிடத்து அஃ ததனை விரியச்செய்யும்; நுண்ணிய பொருள்களை யுணர்த்தும் நூல் பலவற்றையுங் கற்றதனாலாய செயற்கையறிவையும் ஊழ் கீழ்ப் படுத்தும். இவையெல்லாம் பொரு ளுடைமை யின்மைகளானெய்தும் இன்பதுன்பங்களை நுகர்வித்தற்பொருட்டே யுளவாம். அறியாதார் சிலர் ஊழ் ஊக்க முடைமை யின்மைக்ட்

குக் காரணமாகலின் அவ்வூழியையாவழி முயற்சிப்படலாற் பயனில்லையென் றதனை யொழிவர். ஊழாவது இருவினைப் பயன் செய்தவனையே தப்பாது சென்றடைதற் கேதுவாகிய நியதியாகலின், அவ்விருவினைகளைச் செய்தற் கேதுவாகிய முயற்சிக்கும் அவற்றின் பயனை நுகர்தற்கேது வாகிய அவ்வூழுக்கும் உள்ளபேதத்தை உய்த்துணர்தல்வேண் டும். ஒழியாமுயற்சியைக் கனைகணுகக்கொண்டவன் ஊழின் வலியையும் சிதைக்கும் வலியைப் பெறுவன். இவ்வுண்மை யைக்கடைப்பிடித்து நுகர்வுக்குக் காரணமாயவூழ் பொருளீட்ட லறஞ்செய்தல்கட்குத் தடையாகாமற் காக்க வல்லவரே அறி வுடையாரெனப்படுவர். தன்னை விலக்குதற்பொருட்டுத் தனக்கு மறுதலையாவதோ ருபாயத்தைச் சூழினும் தான் அவ்வுபாய மேயானும் பிறிதொன்றானும் வழியாக வந்து அச்சூழ்ச்சியின் முற்பட்டுநிற்கும் மிக்கவலியுடைய ஊழின் விலக்கிற் கிளையாது, அது தானுள்ளளவு ஒருகாலாக இருகாலாகவல்லது விலக்கலா காமையின் வினையைத் தாழ்வறப் பலகான்முயல்வார் விலக்குவ தாய அவ்வூழினையும் புறங்கண்டு பயனைப் பெறுவர். உலகம் பழவினைபற்றிப் பழியாது ஈண்டைக்குற்ற முடைமைபற்றியே பழிக்குமாகலானும், முயன்றவினை விதியில்லாமையாற் கருதிய பயனைத் தாராதாயினும் முயற்சி தனக்கிடமாய உடம்பு வருந் திய வருத்தத்தின் கூலியளவாயினுந் தருமாகலானும் யாவரு மெக்காலத்தும் பொருளீட்ட லறஞ்செய்தல்களி னிடைவிடா வூக்கமுடையராதல்வேண்டும்.

ஒருவன் வினைசெய்யுங்கால் ஒன்றேற பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலுமாய இடுக்கண் இடைவிடாது மேன்மேல் வந்தனவாயினும் தன்னுள்ளக் கோட்பாடு விடாது விலங்கிய விடங்க ளெல்லாவற்றினும், பகடு அளற்று நிலம் முதலிய விடங்களிலே மருங்கொற்றியும் முக்கூன்றியும் தா டவழ்ந்தும் சகடமீர்த் தரிதினுய்க்குமாறுபோலத் தன்மெய் வருத்த நோக்காமை முயறன் முதலியவற்றான் அரிதினுய்க்க வல்லனாயின், வினைமுற்றுப்பெற்றுப் பயன்படவே எல்லா விடும் பையு மிலவா மாகலின் அவனையுற்ற விடுக்கண்டாம் இடுக்க

ணிலே பட்டுப்போம். வினையின்கண் முயல்வான் தெய்வத்தா
னாகப் பொருளின்மையானாக மெய்வருத்தத்தானாகத் தனக்
கிடுக்கண் வந்துழி அதற் கழியாது உண்மகிழ்வானாயின், வினை
யினிதுமுடிந்துழி நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற்கிடையே
இடுக்கண் வருவழிச் செய்கலான் அவன் அழிவின்றி மன
வெழுச்சி யுடையனாய் அதனைத் தள்ளி அக்குறை முடிக்கு
மாற்ற லுடையனாவ னாகலின். அவ்விடுக்கணை மேன்மேலடா
வல்லது அம்மகிழ்ச்சிபோல்வது பிறிதொன்றில்லை. எல்லார்க்கு
முபகாரஞ் செய்தலென்னும் மேம்பாடு முயற்சியென்று சொல்
லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்கண்ணே நிலைபெற் றுளதா
கலின், மெய்வருத்த நோக்கித் தனக் கின்பத்தை விரும்பா
னாகி வினைமுடித்தலையே விரும்புவான், பின் தானும் தன்சுற்
றத்தார் நட்டார் முதலிய கேளிருமாகிய பாரத்தின் றுன்பத்தினை
நீக்கி அதனைத் தாங்குந் தூணுஞ்சிறப்பினைப் பெறுவன்.

ஐம்பொறிகளா னுகரப்படும் பொருள்கள்கோடியை
முயன்று தொகுத்தார்க்கும் ஊழ் வகுத்தவகையானல்லது
நுகர்தலுண்டாகாதாகலின், நல்வினை விளையுங்கால் அதன் விளை
வாய வின்பங்களைத் துடைக்குந்திறன் நாடாது இவை நல்ல
வென்று இவைந் தனுபவிக்கும் நாம் ஏனைத் தீவினை விளையுங்
கால் அதன் விளைவாய துன்பங்களையும் அவ்வா றனுபவியாது
துடைக்குந்திறன் நாடி அல்லலுழப்பது பேதைமையே வினை
முயற்சி துன்பங்களை விளைத்தனவாயினும் அவற்றைச்சகித்து
மேன்மேலும் ஊக்கமுடையாராய் யாவரும் பொருளையீட்டி
யறஞ்செய்தல் வேண்டும். இங்ஙனமே முயற்சியானே யெனி
னும் அல்லது தெய்வத்தானே யெனினும் பொருள் படைத்
தவர் தாம் அதனை நுகர்வதனோ டமையாது அதனாற் செய்யக்
கடவ நல்வினைகளை மேலைக் குதவுமாறு விரைந்து செய்தலினும்
ஊக்கமுடையராதல்வேண்டும்.

# அங்கவியல்

## ௩௰. அதி. அமைச்சு

அமைச்சாவது அமைச்சரது குணங்களுஞ் செயல்களு மாம். நல்லவாயவற்றையுந் தீயவாயவற்றையு மாராய்ந்தறிந்து மன்னவர்க் கறிவுறுத்தி அவரை நன்னெறிக்கட் செலுத்தி அவர்தங் கருமஞ் செய்வாரே அமைச்சராவார். ஞாயிற்றி னாலே தாமரைக்கு மலர்ச்சியுளதாமாறுபோல அமைச்சராலே வேந்தர்க்கு மலர்ச்சி யுளதாம். மன்னராயினோர் மணிமுடிசூட்டி வெண்கொற்றக்குடைநிழற்கீ ழிருந்தனரேனும் அவர்தம மன முங் கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும் சோராவரசுஞ் செங்கோலு மமைச்சரேயாம்.

தீயனாய வமைச்சனால் நல்வேந்தனுந் தீயனாம், நல்லனாய வமைச்சனாற் றீவேந்தனும் நல்லனாம். அரசியலை நல்லமைச்சர் பலருஞ் சொல்வழியாற்றலே வேந்தர்க் காற்றலாம்.

அரசன் வினைசெய்யுங்கால் அதற்குவேண்டுந் தானையும் பொருளுமாய கருவிகளும் அது தொடங்குதற்கேற்ற காலமும் தொடங்கு முபாயமும் இடையூறு நீக்கி முடிவுபோக்குமாறும் அவ்வாற்றிற் செய்யப்படும் அச்சிறிய முயற்சியாற் பெரிய பயன்றரும் வினையும் வாய்ப்பவெண்ண வல்லனாய், வினைசெய் தற்கண் அசைவின்மையும் குடிகளைக் காத்தலும் மறநீதிநூல் களைச் செவ்விதிற் கற்றுச்செய்வன தவிர்வன வறிதலும் முயற் சியுந் திருந்தவுடையனாய், வினைவந்துழிப் பகைவர்க்குத் துணை யாயினாரை அவரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும் தம்பாலாரை அவர் பிரியாமற் கொடை இன்சொற்களாற் பேணிக்கோடலும் முன்னே தம்மினுந் தம்பாலாரினும் பிரிந்தாரை மீட்டுப் பொருத்தவேண்டிற் பொருத்தலும் ஒருகாரியச்செய்கை பல வாற்றாற் றோன்றின் அவற்று ளாவதாராய்ந்தறிதலும் அது செய்யுங்கால் வாய்க்குந்திற னாடிச் செய்தலும் சிலரைப் பிரித்தல் பொருத்தல் செய்தற்கண் அவர்க்கு இதுவே செயற் பாலதென்று துணிவுபிறக்கும்வகை சொல்லுதலும் வல்லனாய்,

அவ்வரசனாற் செய்யட்டடும் அறங்களை யறிந்து தனக்கேற்ற கல்வியானிறைந்தமைந்த சொல்லையுடையனாய் எக்காலத்தும் வினைசெய்யுந் திறங்களை யறிந்தவனே நல்லமைச்சனாவான்.

தம்மரசர்க்கு மங்கங்கட்கு மாக்க வழிவுகள் தஞ்சொல்லான் வருமாகலின் அழிவைத் தாராதனவாய், நட்பா யேற்றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பிணிப்பனவாய், மற்றைப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமை யொழிந்து நட்பினை விரும்பத்தக்கவாய்த், தாம் குறித்தனவே யன்றி வேறு நுண்ணுணர்வுடையோர் கொள்பவற்றின்மேலும் நோக்குடையவாய், மாற்றாது சொற்களை வெல்லவல்லனவாய்ச் சுருங்குதல் விளங்குதல் இனியவாதல் விழுப்பயன் றருதலென்றிவைமுதலாய குணங்களையுடைய சொற்களை, அமைச்சர் தம்முடையவுங் கேட்பாருடையவுமாய குடிப்பிறப்புக் கல்வி ஒழுக்கஞ் செல்வம் உருவம் பருவமென்பனவற்றான் வருந் தகுதி வேறுபாடுகளை யறிந்து, அவற்றாற் றமக்கும் அவர்க்கு முள வாய ஏற்றத்தாழ்வுகளை நோக்கி அவ்வம்மரபாற் சொல்லுதல், உலகத்தோ டொட்ட வொழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறத்தையும், தங் காரிய முடித்தலிற் பொருளையும் பயத்தற்கேதுவாகும். பிறர் சொற்களுட் குற்ற முளவாயினும் வல்லாரல்லாரை யிகழ்தல் வல்லுநர்க்குத் தகுதியன்மையின் அவர் தமக்குச் சொல்லும் சொல்லின் பயனைக் கொண்டொழிந்து, பிறர்க்குத் தாஞ் சொல்லுங்கால் அவர் பின்னுங் கேட்டலை விரும்புமாறும், அவர்க்கு அவை காரியமல்லவாயினும் ஆமெனத் துணியுமாறும், சொல்லப்படுங் காரியங்களை முன்சொல்வனவும் பின்சொல்வனவு மறிந்து நிரல்படக்கோத்து இனியவாகச் சொல்லுதலில் வல்லாராய்ச், சொல்லவேண்டுவன மிகப் பலவாயவழியும் ஒன்றினுஞ் சோர்விலராய், அவைக்கஞ்சாது ஒட்பமுந் திட்பமு நுட்பமும் பொருந்தக் கூறுவாரே நல்லமைச்சர். மன்னவன் றீநெறிக்கட் சென்றனனாயின் அவன்றன் சினத்தின் நெருப்பிற் காய்ச்சிய விருப்புக்கோலைச் செலுத்தினாற் போன்று சிறிதுமஞ்சாது இடித்துரையான் நன்னெறிக்கட் செலுத்தும் நடுவுநீதியைச் சொல்ல வல்லவரே நல்லமைச்சர்.

இம்மைக்கட் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளையும், தாம் உளகாலத்து எல்லாரானும் நன்குமதிக்கப் படுதலாகிய தம்மொளி கெடுதற்குக் காரணமாய வினைகளையும், இடுக்கண் சிறிதுபோழ்திற் கழிவதெனவும் இளிவந்தசெயல் என்றுங் கழியாத இழிவைத் தருவதெனவுந் தெளிந்து தாம் இடுக்கணிலே படவரினும் அது தீர்தற்பொருட்டு முன்செய்தார்க்கு இளிவந்த வினைகளையும் அறிவுடையார் செய்யார். இறந்த மூப்பினராய இருமுது குரவருங் கற்புடை மனைவியுங் குழவியும் பசியான் வருந்துமெல்லைக்கண்ணும் அவ்வருத்தங்கண் டிரங்கிச் சான்றோர் பழிக்கும் வினைகளை அறிவுடையார் செய்யார். யான் செய்தது எத்தன்மைத்தென்று பின்றானேயிரங்கும் வினைகளை ஒருவன் ஒருகாலுஞ் செய்யாதொழிதல் வேண்டும்; அன்றி ஒருகால் மயங்கி அவற்றைச் செய்யுந் தன்மையனாயினானேயெனினும், அவன் பின்னிருந் திரங்கின் அது தீரும்வாயி லறிந்திலனெனவும் திட்பமிலனெனவும் பயனில்லன செய்கின்றானெனவும் தன் பழியைத் தானே தூற்றுகின்றானெனவும் எல்லாரு மிகழ்தலின் அங்ஙனஞ் செய்யாமையே நன்று. ஒருவன் தீய வினைகளைச் செய்து பிறர் அழக்கொண்ட பொருளெல்லாம் இம்மையிலே அவன்றானழப் போகாநிற்கும், மற்றைத் தூய வினையான் வந்த பொருள்கள் முன் இழந்தானாயினும் அவனுக்கு இம்மைக்கண் அல்லது மறுமைக்கட் பின்னர் வந்து பயன்கொடுக்கும். ஞாயிற்றினொளி குளிர்தலுந் திங்களினொளி சுடுதலும் யாண்டுமில்லையாகலின் யாவருந் துன்புறற் கேதுவாய தீயவினைகளைச் செய்யாதொழிந் தின்புறற் கேதுவாய தூய வினைகளையே செய்தல்வேண்டும்.

தன் அரசன் மாற்றாரோடு பொரும்வினை செய்யுமிடத்து நல்லமைச்சன் அவ்வினையால் அழிவது மாவதுமாய பொருளும், தன்றானை அம்மாற்றார்தானையாகிய கருவியும், தனக்காவது மவர்க்காவதுமாய காலமும், தான்வல்லது மவர்வல்லதுமாய வினையும், தான் வெல்லற் கேற்றதும் அவர்வெல்லற் கேற்றதுமாய இடனுமென்று சொல்லப்படும் இவ்வைந்தனையும் தான் வென்றியெய்துந் திறத்திற் பிழையாமல் எண்ணிச்செய்வன். யாம் இவ்வினையை இவ்வாற்றாற் செய்துமென் நிரல்படச்சொல்

னுதல் யாவர்க்கு மெளிது, அதனை அவ்வாற்றானே செய்தல் யாவர்க்கு மரிதாகலின், மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் யாவரும் பின் அசைதலின்றி மனத்திண்மை யுடையராய், விரைந்து செய்யவேண்டியவற்றை நீட்டித்துச் செய்தலையொழிந்து விரைந்தே செய்தல்வேண்டும்.

நல்லமைச்சர் சொற்கேட்டு அதன்வழி யொழுகு மரசன்ற னாட்டின்க ணெல்லா வளமு மெய்திக் குடிக ளினிதுவாழும்.

---

## ௩௧. அதி. மன்னரைச்சேர்ந்தொழுகல்

மன்னரைச்சேர்ந் தொழுகலாவது அம்மன்னர்தங் கருமஞ் செய்யும் அமைச்சரேயன்றித் தூதர்முதலாயினோரும் அவ ரைப் பொருந்தி யொழுகுமாறு.

சந்திவிக்கிரகங்கட்கு வேற்றுவேந்தரிடைச் செல்வாராய தூதர், தாம் வகுத்துக் கூறுவாரும் கூறியது கூறுவாருமென இருதிறத்தராவர். தஞ்சுற்றத்தார்மாட் டன்புடையராதலும், அரசர்சாதி விரும்பும் பண்புடையராதலும், தம்மரசன்மாட் டன்புடையராதலும், அவனுக் காவனவறியும் அறிவுடையரா தலும், அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல்வன்மை யுடையராதலும் தூதுவர்க் கின்றியமை யாத பொதுவிலக்கணங்களாம். மன்னர்தங் கருமஞ்செய்வார் யாவரும் பழிபாவங்கட் கஞ்சுபவராய்ப், பொருளவாமுதலிய குற்றங்க ளில்லாதவராய், நடுவுநிலைமை முதலிய குணங்க ளுள்ளவரா யிருத்தல்வேண்டும்.

நீதிநூலை யுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வல்ல னாதலும், இயற்கையாகிய வறிவும் கண்டார் விரும்புந் தோற்றப் பொலிவும் பலரோடும் பலகாலும் ஆராயப்பட்ட கல்வியுமுடைய னாதலும், பலகாரியங்கட் குடம்படாதார் பரம்பரையான் அவற் றிற்குக் காரணமாய தொன்றைச் சொல்ல அதனால் அவை

விளையுமா றுய்த்துணர வருமையானுஞ் சுருக்கத்தானும் உடம்படுவ ராகலின் வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லும் வழிக் காரணவகைபாற் றொகுத்துச்சொல்லியும் இன்றைவற் றிற் குடம்படாதார் தம்மனமகிழச்சொல்ல அவ்வின்றைமை காணாது உடம்படுவராகலின் அவ்வின்றை காரியங்களைச் சொல் லும்வழி வெய்ய சொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகி ழச் சொல்லியும் தன்னரசனுக்கு நன்மை பயப்பவனாதலும், நீதிநூல்களைக் கற்றுத் தான்சென்ற கருமத்தைப் பகைவேந் தர் மனங்கொளச்சொல்லி அவர்செயிர்த்து நோக்கின் அந்நோக் கிற் கஞ்சாது காலத்தொடுபொருந்த அது முடிக்கத்தக்க உபாய மறிய வல்லனாதலும், வேற்றரசரிடத்து அவர்நிலையுந் தன்னரச னிலையுந் தன்னிலையுந் தூக்கி அவற்றிற்கேற்பக் காணுமுறை மையும் சொல்லுமுறைமையும் முதலாயின வறிந்து அவர் தன் சொல்லை ஏற்றுக்கொள்ளும் மனநிகழ்ச்சிக்குரிய காலம் பார்த் துச் சென்றகருமஞ் சொல்லுதற்குத் தனக்குத் துணையாவார் உடனுப விடனறிந்து தான் அது சொல்லுமாறும் அதற்கு அவர் சொல்லு முத்தரமும் அதற்குப் பின் தான் சொல்லு வனவுமாக இவ்வாற்றாற் சொல்லுமாற்றை முன்னே விசாரித்து அவ்வாறு சொல்லுபவனாதலும் தான் வகுத்துக் கூறுவான திலக்கணமாம்.

பொருள்காமங்கள்பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத் தூய்மையும் தன்னரசனுக்கு உயர்ச்சி கூறிபவழி எம்மனோர்க் கஃதியல்பெனக் கூறி அவ்வேற்றரசர் வெகுளி நீக்குதற் பொருட்டுத் தனக்கு அவரமைச்சர் துணையாந்தன்மையும், இது சொல்லின் இவர் ஏதஞ் செய்வரென் றொழியாமற்பொ ருட்டுத் துணிவுடைமையும், யாவரானுந் தேறற்பொருட்டு மெய்ம்மையு முடையனாதலும், தனக்குவரு மேதத்திற் கஞ் சித் தன்னரசனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந் துஞ் சொல்லாத திண்மை யுடையனாதலும், தன்னரசன் சொல் லிய வார்த்தை தனக்கு இறுதிதருமாயினும் அதற் கஞ்சியொ ழியாது அவன் சொல்லியவாறே அவனுக்கு மிகுதியை வேற் றரசரிடைச் சொல்ல வல்லனாதலுங் கூறியது கூறுவான இலக்

கணமாம். தன்னரசன் கொடுத்த வோலையை வேற்றரசர்க்குக் கொடுசென்று கொடுப்போனுங் கடையாய தூத னெனப் படுவன்.

மன்னரைச்சேர்ந் தொழுகுவார் யாவரும் அம்மன்னர்மாட் டன்புடையராயும், அவர்க்குங் குடிகளுக்கு மாவனவற்றை யறியும் அறிவுடையராயும், அவற்றைக் கலங்காமல் நன்கு முடிக்கும் மனத்துணிவுடையராயும், அம்மன்னர் தங்கரும நிகழ்வின்பொருட்டுத் தங்கைக்க ணுளவாய பொருள்களிற் றுங் கவரும்விருப் பில்லாதவராயும், குடிகளாயுள்ளவர்க்கு நன்மையாவனவற்றை விரும்பிச்செய்பவராயு மிருத்தல்வேண் டும். வெகுளுந்தன்மையராய அம்மன்னரைச் சேர்ந் தொழுகும் அமைச்சருந் தூதரு மேனையோரும், மிகவகலிற் பயன்கொடா மைக்கும் மிகவணுகின் அவமதிபற்றித் தெறப்படுதற்கு மேது வாமாகலிற் றீக்காய்வார்போல இடைநிலத்திலே நிற்றலும், நுகரப்படுவன ஒப்பனை மேன்மையென் றிவைமுதலாய அவர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாதொழிதலும், அறைபோ தல உரிமையொடுமருவல் அறம்பொருள்வெளவலென் றிவை முதலாய அரிய பிழைகள் தங்கண் வந்தனவாகக் கேட்டு அவர் ஐயுற்றால் அவரைப் பின் தெளிவித்தல் யாவர்க்குமரி தாகலின் அப்பிழைகள் தங்கண் வாராமற் காத்தலும், தங்குற்றங்கண்டு செய்தனவாகக் கொள்வராகலின் அவர் அருகிருந்தால் அவர் காண ஒருவன் செவிக்கட் சொல்லுதலையும் ஒருவன்முகநோக்கி நகுதலையுந் தவிர்ந்தொழுகுதலும், அவருக்குப் பிறரோடு மறை நிகழ்வுழி யாதொருபொருளையுஞ் செவிகொடுத்துக் கேளாது அவரைமுடுகி வினவுவதுஞ் செய்யாது அம்மறைப்பொருளை அவர் தாமே யடக்காது சொல்லியக்காற் கேட்டலும், அவர்க் குக் காரியஞ்சொல்லுங்காற் காரியத்தின்கணன்றிக் காமவெகுளி யுள்ளிட்டவற்றி னிகழ்வுழியும் அதற் கேலாக்காலத்துஞ் சொல் லுதல் பயனின்றாகலின் அப்பொழுது நிகழ்கின்ற அவர் குறிப்பினையும் சொல்லுதற்கேற்ற காலத்தினையும் நோக்கி, அவ ருடம்படாதன முடிவுபோகாமையானும் பயனில்லவும் அது சுருங்கியவும் செய்தல்வேண்டாமையானும் வெறுப்பிலவுமாய்

வேண்டுவனவுமாய காரியங்களை அவர்மனம் விரும்பும்வகை இனியவாய்ச்சுருக்கி விளங்கியபொருளவாய சொற்களாற்சொல்லுதலும், பயன்பெரியனவுமாய் அவர்விரும்புவனவுமாய காரியங்களை அவர் கேட்டிலராயினுஞ் சொல்லி என்றுமொன்றும் பயனிலவாயவற்றைத் தாமே கேட்டாலுஞ் சொல்லாது விடுதலுமாகிய இவைகளை அவதானித்து அவற்றிற் சிறிதும் வழுவாதொழுகுதல்வேண்டும். இவர் எம்மினிளையரென்றும்எமக்கின்ன முறையினையுடையரென்றும் அவரை யவமதித் தொழுகலும், இவர்க்கு யாம் பழையமெனவும் இவரால் யாம் நன்குமதிக்கப் பட்டேமெனவுங் கருதித் தமக்கியல்பல்லாதவற்றைச் செய்தொழுகலும். மன்னரைச்சேர்ந் தொழுகுவார்க்குக் கேடு பயப்பனவாம்.

மன்னர் குறித்த கருமத்தை அவர் கூறவேண்டாவகை அவர்முகமானுங் கண்ணானும் நோக்கியறிதல் அம்மன்னரைச் சேர்ந் தொழுகுவார்க் கின்றியமையாததொன்றும். மனத்துக் கிடந்த பகைமையையும் ஏனைக்கேண்மையையும் வேறுவேறாவந்தர் சொல்லிற்றிலராயினும் அவர்கண்களே தூதர்க்குச் சொல்லும். தன்னையடுத்த பொருளினது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்குபோல, ஒருவனெஞ்சத்து மிக்கதனை உயிரது கருத்தறிந்து அஃதுவக்குறின் மலர்ந்துங் காய்வுறிற் கருகியும் அவன் முகந்தானே கொண்டுகாட்டும். குறிப்பறிந்தொழுகு மமைச்சர்சொற் கேட்டொழுகற் கெவ்வரசரும் விரும்புவர்.

அறிந்துசொல்லியாரது அறிவையுமழித்து அரசன் தானுமறியானேயாயினும் அக்குற்றம் நோக்கியொழியாது அவனவைக்க ணுறுதியாயின கூறல் இயற்கையாகிய நுண்ணறிவுஞ் செயற்கையாகிய நூலறிவுமுடைய அமைச்சர்க்கு முறைமையாம். செஞ்சொல் இலக்கணச்சொல் குறிப்புச்சொல்லென்னும் மூவகைச்சொற்களுள் தமக்காகாதனவொழித்து ஆவனகொண்டு, தம்மின்மிக்கது ஒத்தது தாழ்ந்ததென மூவகைத்தாய அவையில் அரசனோடிருந்த அப்பொழுதையவையினைத் தம்மோடு தூக்கியறிந்து, அவ்வவைக்கட் சொல்லுங்காரியம் இது

சொல்லுமாறு இது அதன் முடிவு இதுவென்று இவையுள்ளிட்டன வாராய்ந்து, பின்ன ரவ்வவைக்க ணென்று சொல்லுங்காற் கேட்டற்கண் விருப்புடைமையாகிய அதன்செவ்வியை ஆராய்ந்தறிந்து சொல்வழுப் பொருள்வழுப்படாமல் மிகவுந் தெளிந்து சொல்லுதலும், தம்மின் மிக்காரவைக்கண் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கமும். பிறருணர்த்தலின்றிப் பொருள்களைத் தாமே புணரவல்ல அறிவினையுடையராய தம்மோ டொத்தாரவைக்கட் சொல்லுங்காற் பலநூல்களையுங் கற்று அவற்றினுபயனை அறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித்தோன்றுமாகலின் எவ்வழியுஞ் சொல்லுதலும், அவையறியாமையை நோக்கி நல்லவையும் பொருளறியாமையாற் புல்லவைதானும் இகழ்தலின் புல்லரிருந்த தாழ்ந்தாரவைக்கண் மறந்துஞ் சொல்லாதொழிதலும், சொல்லினும் அவர் மதிக்கும்வகை தந்நூலறிவுஞ் சொல்வன்மையுந் தோன்ற விரித்துச்சொல்லாமையும் கற்றுவல்ல நல்லமைச்சரதியல்பாம். பிறர் கூறும் நுண்மைப்பொருளவாய மொழிகளைநோக்கி அப்பொருள்கோடலும்,வெண்மைப்பொருளவாய மொழிகளை வேண்டினுந் தாஞ் சொல்லாமையும், நுண்மைப்பொருளவாய மொழிகளைச் சிற்றினமல்லார்கட் சொல்லலும் நல்லமைச்சர் கடன். வாழைக்காய் தானுளதாய அவ்வாழைக்கும் அறம் அதனைச்செய்யாதார்க்கும் இறுதியை விளக்குமாறுபோலக் கற்றுணர்ந்தா ருறுதிச்சொல் அதனைக் கற்றுவல்லரல்லார்க் கிறுதியை விளக்குமாகலின் அமைச்சர் முதலாயினோர் எவ்வகை யவையின்கண்ணும் கற்றுணர்ந்தா ருறுதிச்சொற்களைக் கற்றுவல்லரா யவற்றையே சொல்லுதல்வேண்டும். எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறுவேறாய கல்வியுடையார் பலரிருந்த வவைக்கண் அஞ்சாது தாங் கற்றவற்றை அவர்க்கேற்பச் சொல்லின் அவருந் தாங் கற்றவற்றையெல்லாம் சொல்லுவ ராகலின் ஏனைக் கற்கப்பெறாதனவற்றைக் கேட்டறிதலும், வேற்றுவேந்த ரவையிடை யஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லவேண்டுதலின் சொல்லிலக்கண நெறியானே அளவைநூலையுட்பட்டுக் கற்றலும் அமைச்சர் முதலாயினோர்க் கின்றியமையாதன. நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றாற் பயன் அறிந்துவைத்தும் நல்லாரிருந்த வவையினை யஞ்சி

ஆண்டுச்சொல்லாதார் அக்கல்வியறிவாற் றூழும் பயனெய்தாது பிறரை யெய்துவித்தலுஞ் செய்யாது கல்வித்துன்பமே யெய்தி நிற்றலின் அவரைக் கல்லாதவரினுங் கடையரென்று உலகத்தவர் பழிப்பர்.

மன்னரைச் சேர்ந்தொழுகுவார் அச்சேர்க்கையாற் றூமெய்திய அதிகாரம் முதலியவற்றான் அகங்காரமுற்றுத் தங்கீழுள்ளாரையும் ஏனைக்குடிகளையு மோம்பாது எல்லைகடந் தொறுத்தன் முதலாயினசெய்தலும், பரிதானம் வாங்கலும், நடுவுநிலைமையிற் றவறி யொருபாற் கோடலும், தமக்குப் பொருள்வருவாயாகும்பொருட்டுப் பொய்வழக்கை விருத்தியாக்கல் உரியகாலத்து வழக்குத்தீர்ப்புச் செய்யாமை சமாதானமாக வொட்டாமற் றடுத்தன் முதலாயின செய்தலும், மற்று மிவைபோல்வன பிற கொடுஞ் செயல்களைச் செய்தலுமே தமக்குரிய தொழிலெனத் திரிபுணர்வெய்தித் தீநெறிக்கட் செல்வரேயாயின் அவர்தாம் இம்மையி லொருபோது அரசதண்டனைக்குத் தப்பிப் பிழைப்பினும் அவமானத்துக்கும் பழிபாவங்கட்கு மாளாய் மறுமையின் மீளா நரகத்துன்ப மெய்துவர். தாம் செய்வது குற்றமென் றறிந்துவைத்தும் அதனைச் செய்யாவண்ணம் தம்மைக் கடிந்து நல்வழிப்படுத்தத் தகுதியில்லாத அவர்தாம் பிறர் குற்றங் கடிந்து அவரை நல்வழிப்படுத்தத் தகுதி யுடையராமாறியாங்ஙனம்? அரசவதிகாரத்தொடு நின்று குடிகளிடத் தபகரித் தீட்டிய பொருண்முழுதும் சிறிதுபொழு தாவனபோன்று தோன்றினும் பின்னர்ப் பழிபாவங்களையே நிலைநிறுத்திவிட்டு முன்னருள்ள பொருளையுங்கொண் டழிவெய்தும். அவர்க்குச் சந்ததியும் விருத்தியாகாது. அதிகாரமும் மதிப்பும் புகழும் பொருளுமென் றிவைமுதலாயின வெய்துதற்கு மற்றெத்தொழிலைக்காட்டினும் மன்னரைச்சேர்ந் தொழுகலே தக்கதென் றதனை மேற்கொண்டொழுகுவார், செய்யத்தக்கவற்றைச் செய்யாமையானும் செய்யத்தகாதவற்றைச் செய்தலானு மெய்தற்பாலவாய கேடுகட்கு மஃதே தேனைத்தொழில்களினுந் தக்கதென்பதனை உய்த்துணர்வாராக.

இக்காலத் திப்பூவுலகின்க ணரசியன்முறை சென்றுதேய்ந்
திறும்பதத்தை யெய்துவதாயிற்று. மன்னரைச்சேர்ந் தொழுகு
வாருங் குடிகளும் பண்டைக்காலத்தின்கட் கண்கண்டதெய்வம்
அம்மன்னவனே யெனக்கொண் டவன்வழியொழுகுவாராயினர்.
மாந்த ருக்கோ ரெகங் காக்கு மரியெனு மிறையே யரசெனு
மெண்ணம் இப்பரதகண்டத்துள்ளார் மனத்துப் பதிந்துகிடந்
தது. அக்காலத் துமெங்கும் பல்லாயிரவர் சிற்றரசராய்த் தத்
தந் நாட்டை யாள்வாரா யிருந்துளர். அவர் அவ்வச்சாதியரசரா
யிருந்தமையிற் பெரும்பான்மையுஞ் செங்கோலரசராயே விளங்
கினர். சுவநயங் கருதிக் கொடுங்கோன்மை புரிந்துளாருஞ் சிற்
சில ரிருந்துளரேனும் அவராற் குடிகள் இக்காலத்துப் போன்
றத்துணைப்பெருங்கேட்டை யெய்தினரல்லர். பிற்காலத்துச் சிற்
றரசர்பலரைத் தங்கீழ்ப்படுத்தி முடிமன்னர் தலைப்படுவாராயி
னர். தேசம்பற்றியுஞ் சாதிபற்றியுஞ் சமயம்பற்றியும் பாடை
பற்றியும் சுவநயங் கருதலாற் கொடுங்கோன்மைக்குங் குடிகளிற்
பெரும்பாலார் பெருங்கேடெய்துதற்கும் அஃதேதுவாயிற்று.
கொடுங்கோன்மன்னர் கொடுங்கோன்மை சகிக்கலாற்றுமையாற்
சிற்றரசரும் பிறருஞ் சேர்ந்த சபையின்கீழ்ப்பட் டாளும்முறை
அதன்பின்னர்த் தலைப்படுவதாயிற்று மன்னனை அவற்குள்ள
நிலையிற் கீழ்ப்படுத்துச் சபையை மேற்படுத்தற் கிஃதேதுவா
யிற்று. படிமுறையே மன்னனுஞ் சிற்றரசருங் குடிகளுட் டலை
மக்களு மதிகாரத்திற் சமப்படும் நிலையை யெய்துவாராயினர்.
அச்சபையாருட் பெரும்பாலார் குடிகளுட் டலைமக்களேயாக
லின், அவர் மன்னனுஞ் சிற்றரசருமென்னும் பேதத்தை யொ
ழித்துத் தஞ்சபையாரு ளொருவரைத் தலைவராகத் தெரிந்து
வைத்துத் தாமே யாளும் முறையைச் சிற்சில நாடுகளிற் படி
முறையே யாக்குவாராயினர். இம்முறை, தலைமக்களைத் தெரிவு
செய்யுங் கீழ்க் குடிமக்களுக்கே ஒருவாறு முதன்மையையும்
அவர்க் கிருத்தலாகா வதிகாரத்தையுங் கொடுப்பதாயிற்று.
செல்வர் வறியர்முதலாய பேதமொழிய யாவருஞ் சமத்துவமா
யிருத்தல்வேண்டு மென்னுங் கொடியநினை வுண்டாதற் கிம்
முதன்மையும் அதிகாரமுமே காரணமாயின. பாவயுகமாகிய
கலியுகஞ் செல்லச்செல்ல இந்நினைவுதலைப்பட் டுலகத்தைக்
கெடுத்த றிண்ணம்.

## ௬௨ அதி. பொருட்சிறப்பு

மக்கட்பிறப்பினர்க் குண்டியு மருந்து முடையு முறையுளு
முதலாயின வின்றியமையாதன. அவர்தம் முடம்புகளுண்டியு
மருந்து முதலாயவற்றான் வளர்த்துப் பாதுகாக்கப்படவேண்டும்
பெற்றியினமைக்கப்பட்டுள்ளன. அவற்றைவேண்டி யோருடம்பு
பசிநோய்முதலியவற்றை யெய்தியவழி அதன்கட்குடியிருக்கும்
உயிர், அத்தொடர்பாற் றானெய்திய பசிநோய் முதலியவற்றாற்
றுன்பமுற்று, அவற்றைத் தணித்தலாற் றுன்பநீங்கி யின்ப
முறும்பொருட்டு, உணவும் மருந்தும் முதலாயவற்றை யீட்டு
தற்கு வேண்டியன செய்யுந்தொழிற் குரியதாயிற்று. தொழில்
செய்யாதிருத்தல் சுகமெனக்கருதி அங்ஙனமிருக்கப் பிரயாசப்
படு மறிவீனருஞ் சிலருளர். தொழில் செய்தற்குரியதைச் செய்
யாமைக்குரியதாக்கால் யாவர்க்கு மரிது. ஒருவன் உடம்பை
யியக்கித் தொழிற்படுத்தானாயின் அவ்வுடம்பு நோய்வாய்ப்
பட்டு விரையக்கெடும். உடம்பகத்துயிர் மனம் வாக்குக் காய
மென்னும் மூன்றானுந் தொழில்செய்தற்குரியது. அறிவிச்சை
தொழிலுடைமை ;ஆன்மவிலக்கணம். உடம்பகத்தான்மா அவ்
வறிவு மயக்கத்தாற் சுகத்துக் கேதுவாவனவற்றை விரும்பிச்
செய்யாது துக்கத்துக் கேதுவாவனவற்றையே விரும்பிச்செய்யு
மியல்பிற்று.

அறம்பொருளின்பமென மக்கட்கு வேண்டியனவாய் உட
னெண்ணப்பட்ட மூன்றனுட் பொருளே ஏனையறத்துக்கு மின்
பத்துக்குந் துணைக்காரணமா யுள்ளதாகலின், யாவரும் முடிவிற்
றுன்பம் விளைத்தற் கேதுவாகும் தொழில்களைச் செய்யாதொ
ழித்து இன்பம் விளைத்தற் கேதுவாகுந் தொழில்களை விரும்பிச்
செய்து அப்பொருளை யீட்டித் தாமு நுகர்ந் தறமுஞ் செய்
தின்பமுறுதல்வேண்டும். பொருள்களாவன உணவுக்கு வேண்
டிய நென்முதலியனவும் உடைக்கு வேண்டிய பஞ்சு
முதலியனவும் உறையுண்முதலியவற்றின் உபயோகங்
கட்கும் மருந்துக்கும்வேண்டிய இரும்பு பொன்முதலியனவும்
இன்பந்தரும் அணிமுதலியவற்றுக்கு வேண்டிய பல்வேறு
வகைப்பட்ட ஒளியுடைய மணிமுதலியவைகளுமென்னு மிவை

கலையாம். இவைகளையும் இவைகளுண்டாதற் கிடமாயுள்ள நிலங்களையும் உண்டாக்குதற்குத் துணையாயுள்ள ஆன்முதலிய வற்றையும் இவைபோல்வன பிறவற்றையுமுடையவரே பொருட்செல்வ முடைய ரெனப்படுவர்.

அறிவில்லாதார் இழிகுலத்தாரென மதிக்கப்படாதாரும் பொருளுடையாராயின் அறிவுடையாரும் உயர்குலத்தாருமாகிய பகைவர் நட்டார் நொதுமலரென்னு மூவகையாரும் அவரை மதித்து அவர்பாற்சென்று தாழ்ந்து நிற்றலான் உயரச்செய்வ ராகலானும், அஃதில்லாரை அவரெல்லாரு மிகழ்வ ராகலானும், நெய்யிருக்கும் பாண்டத்துட்புகுத லரிதாயினும் அதனை யுண்ணும் விருப்பாற் புறத்திற் சுற்றித்திரியும் எறும்புகள்போல ஈயாதார்கண்ணும் பொருளுளதாயின் உலகத்தவர் அவரைச் சூழ்ந்து நன்குமதிப்பராகலானும், வேற்றுத்தேயத்துஞ் சென்று நினைத்தவாறு பகையைக் கெடுக்கவல்லதும் பகைவரைப் பகையாயின செய்யாவண்ணம் அடக்கித் தடுக்கவல்லதும் அதுவே யாகலானும், அஃதில்லையாயின் உணவின்மையான் இறந்துபடாற் கேதுவாய் ஒருவற் குடம்பொடு கூடியிருத்தன்றி யமையாத அறனு மின்பமு மில்லையா மாகலானும், அஃதெல்லார்க்கு மெஞ்ஞான்று மின்றியமையாததும் சீருஞ் சிறப்பும் வென்றியும் பெருமையும் கல்வியும் வலிமையும் அழகும் புகழும்முதலிய வெல்லா வாக்கங்களையுங் கொடுப்பதுமா யுள்ளதாம்.

ஒருவன்பொருளுடையனுதற்கும் அதனால் அறமுமின்பமு மெய்துதற்கும், நீரரண் நிலவரண் மலையரண் காட்டரணென்ன இயற்கையுஞ் செயற்கையுமாய இந்நான்கரணுஞ் சூழ்ந்த தாய்ப், பகைவரைக் கடிதிற் கொன்று நிற்றற்கேற்ற மானமும் அழியுநர்புறக்கொடை யயில்வா ளோச்சாமை அழிநகர்க்கண் மகளிரை வெளவன்முதலிய இளிவரவாயின செய்யாமை முதலியவாக முன் வீரராயினேர்சென்ற நன்னெறிக்கட் சேறலும் முதலிய குணங்களான் மேம்பட்ட படைமாட்சியும் செங்கோன் மையுமுடைய அரசனாற் காக்கப்படுவதாய், ஆயங்களும் அற

வேரும் நீர்வளமும் நிலவளமும் சேர்ந்ததுமாயுள்ள நன்னாட்டின்கண் வாழ்வு ஊழான் வாய்ப்பின் அவனை மக்கட்பிறப்பானெய்தற்பாலதாய பயனை யெய்தினவனாவன்.

அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேயத்தாரானும் விரும்பப்படத்தக்கதாய், மிக்கபெயல் பெயலின்மை எலிமுதலியன கொடுங்கோன்மையென் றிவற்றான்வருங் கேடின்மையோடு கூடி மிகவிளைவதாய்ப், பிறநாட்டு மக்கட்டொகுதியும் ஆனெருமைமுதலிய விலங்குத்தொகுதியும் தத்தந் தேயத்துப் பகைவந்திறுத்ததாக அல்ல தரசுகோடியதாக அல்லதுணவின்மையானாகத் தன்கண் வந்தால் இனிதிருப்பச்செய்தலான் அப் பொறையைத் தாங்கற்கேற்றதாய், உழவின்மையானும் ஆற்றவிளைதலின்மையானும் மிக்கபசியும், தீக்காற்று மிக்கதுளிர் வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமையுமுண்மையின் நீங்காத நோயும், அரசனாற்றன் முதலியன வின்மையிற் புறத்து நின்றுவந் தழிவுசெய்யும் பகையும், சாதி பற்றியுங் கடவுள்பற்றியும் பலர்க்குளதா மொருமைவயத்தான் மாறுபட்டுக்கூடும் பலகூட்டமும், ஆறலைப்பார் கள்வர் குறளை கூறுவார்முதலிய மக்களும் பன்றி புலி கரடிமுதலிய விலங்குகளுமென உடனுறையாநின்றே பாழாகச்செய்யு முட்பகையும், அளவுவந்தால் வேந்தனை யலைக்குங் கொல்வினைக் குறும்பரு மில்லாததாய், அரசனாற்றலுங் கடவுட்பூசை யறங்களென்றிவற்றது செயலுமுண்மையிற் பகைவராற் கெடுத லறியாததாய், அரிதிற் கெட்டதாயினும் ஆகரங்களிற் படுவனவும் வயலினுந் தண்டலையினும் விளைவனவும் செய்யவேண்டாமல் இயல்பாகவே யுளவாதலும் முன்னீட்டப்பட்டுங் குறைவறாமையு முடைமையான் அப்பொழுதுந் தன்வளங் குன்றாததாயு முள்ளதே நன்னாடாவது.

ஒருநாட்டு மக்கட்டொகுதி முதலாயின உணவின்மைமுதலிய காரணத்தான் மற்றொருநாட்டுச் சேறல் பண்டைக்கால வழக்கென்பதைக், கடைச்சங்கத்தார்காலத்துப் பாண்டியனாடு பன்னிருயாண்டு வற்கடஞ்செல்லவே பசிகடுத்தலும் பாண்டியன் சங்கப்புலவரெல்லாரையுங் கூவிப், புலவிர்காள் வம்மின்! யான்

உங்களைப் புறந்தரகில்லேன், என் றேயம் பெரிதும் வருந்து
கின்றது, நீயிர் நுமக்கறிந்தவாறு யாண்டேனும் புக்கு நாடு
நாடாயினஞான்று என்னை யுள்ளி வம்மினென, அரசனைவிடுத்து
அவரெல்லாரும்போய் அப்பன்னீரியாண்டு கழிய நாடுமலிய
மழைபெய்தபின்னர் ஆண்டுவந்தனரென்னு மிதுபோன்ற முற்
சரிதைகளா னுணர்க.

தூரவு கிணறு கேணிகளாய கீழ்நீர் ஏரி குள மாறுகளாய
மேனீரெனப்பட்ட நீரும், இடையதன்றி ஒருபுடைய தாகலும்
தன்வளந் தருதலும் மாரிக்கணுண்ட நீர் கோடைக்க ணுமிழ்த
லும் வாய்ந்த மலையும், அதனினின்றும் அருவியாய்வரு நீரும்,
அழியாத வரணுமென்னும் அவயவங்களை யுடையதேயாயி
னும், நீர் நில நலத்தாற் பிணியின்மையும் தன்கண் வாழ்வார்
தேடிவருந்தாமல் அவர்பாற் றானேயடையுஞ் செல்வமுங் குறை
யாது விளைதலும் விழவுவேள்விகளை யுடைமையானும் சான்
றோரை யுடைமையானும் நுகர்வனவற்றையுடைமையானும் நில
நீர்களது நன்மையையுடைமையானும் வாழ்வார்க்கு உண்ணிகழ்
வதாய வின்பமுங் காவலுமென் றிவ்வணிகளை யுடையதே நன்
னாடாவது. இங்ஙனமே நாடு நன்னாடாயினும் அந்நாட்டை
யாளு மரசன் குடிகண்மாட் டன்பிலனையும், அவரின் மிகுதி
யாயினோ ரெண்ணத்துக் கிசைந்தொழுகானையும், சாதிபற்றியுங்
கடவுள்பற்றியும் மாறுபடுங் குணத்தனையும், தோன்றுவண்ணம்
பொருளைக் கவர்ந்து தன்சார்பினர்க் காக்கன்முதலாய செய
லுடையனையு முளனேயாயின், அந்நாடு நன்னாடாகாது பாழா
கும். அதன்கண் வாழ்வார்க்குப் பொருளு மதன்வருவாயும்
படிமுறையே குறைய அவர்க் கறனுமின்பமு மில்லையாகும்.
அரசன் கொடுங்கோன்மை யிலனேயாயின் அப்பெற்றியதாய
நாட்டின்கண் வாழ்ந்து நெறியான்வரும் பொருளை இறப்ப
மிகப்படைத்தார்க்கு, அவ்வரசன்மாட்டும் ஏனைக்குடிகண்மாட்
டும் நிலைத்துள்ள அன்பு முதிர்ந்துழி யுளதாவதாய் அவ்வன்
பீன்ற வருளென்னுங் குழவி, ஏனையுலகிற் செவிலியர்போலாது
தானே யெல்லாப்பொருளு முதவி வளர்க்கும் அப்பொருளென்

னுஞ் செல்வச் செவிலியான் வளர்தலின், பயன் கொடுத்தல்லது. போகா அப்பொருளின் விளைவாய மற்றை யறனு மின்பமுந் தாமே யொரே காலத் துளவாம்.

வேந்தர்க்குப் பொருளானே படையுளதாம், அப்படை யானே நாடுளதாம், அந்நாட்டானே பொருட்பெருக்கமுளதாம், அப்பொருட் பெருக்கத்தானே மற்றை யெல்லா வாக்கங்களு முளவாம். மானுடப்பிறவி யெய்திய மக்கட்கின்றியமையாதது பொருட்செல்வமே. அம்மக்களைப் பெருமைப்படுத்துங் கல்விச் செல்வம் பொருட்செல்வமென்னு மிரண்டனுட் பொருட் செல்வமே மேலானதெனலாம். கல்விகற்றற்குரிய நூல்களையும் கல்வியையுங் கொள்ளுதற்கும் பசிமுதலியவற்றான் வருந்தாமற் செவ்விதிற் கற்றற்கும் கற்றவற்றைத் தமக்கும் பிறர்க்கும் பயன்படச்செய்தற்கும் பொருளே காரணமாகலின் அக்கல்விச் செல்வத்தையுந் தரற்குரியது பொருட்செல்வமே. அக்கல்வி யையேயன்றி யொருவற்குத் தானதருமப் பெரும்பேற்றையுந், தேவருலகத்தின்கட் சென்றிருத்தலையும், இவ்வுலகத் தெண் ணியது முடித்தலையும், உறவினர் பசியை நீக்கலின் அவரற வையும், இவைபோல்வன பிறவெல்லா வாக்கங்களையுந் தருதற் குரிய வத்துணைச் சிறப்புவாய்ந்த பொருட்செல்வத்தை யாவ ரும் இடையறா முயற்சியோடு மெய்வருத்த நோக்காது தத் தமக்கேற்ற தொழிலைச்செய் தீட்டல்வேண்டும். எவ்வாற்றா னேனுஞ் சிறிதுணவையேனும்பெற் றுண்ணக்கிடையாது பசி யாற் கிடந்துவருந்து மன்றைக்கேனும் ஒருவன் பொருளின் சிறப்பை யுணரானோ?

பொருளீட்டற்குரிய அறநெறிகளாவன கல்விகற்பித்தலும், மாந்தர்க் குறுதிபயக்கும் அறநூல்களை அச்சிட்டு வெளிப்படுத் தலும், கல்லாதவரும் மெய்ந்நூற் பொருளைக்கேட் டுய்யுமா றப் பொருளைப் போதித்தலும், மன்னரைச் சேர்ந் தொழுகலும், வேளாண்மை வாணிகம் நெசவு சிற்பம்முதலியவற்றையும் ஆக ரங்களிற்படு முலோகங்களை நிலத்தைச் சுரங்கமாகத்தோண்டி யெடுத்தன் முதலியவற்றையுஞ் செய்தலுமென்னு மிவைகளே

யாம்; எனைப்பாவநெறிகளாவன களவுசெய்தல், பிறர்பொருள் கவர்தல், பொருள்பெறக்கருதிப் பொய்வழக்குப்பேசல், பொய்ச் சான்றுகூறல், பொய்ப்பத்திரம் பிறப்பித்தல், விசுவாசகாதஞ் செய்தல், பரிதானம்வாங்கன்முதலிய வினைகளேயாம். அறநெறியான் வந்தபொருளே சிறப்புடைத்து.

அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க் குதவித் தானு முண்ணுதலே அறமாம், அன்றிப் பாவநெறியான் வந்த பொருளை ஒருவன் தானதருமஞ் செய்வனேயாயின் அறம் பொரு ளுடையானையும் பாவம் அவனையுஞ் சேரும். தானத்தை யேற் றற்குத் தக்காராவார் நல்லொழுக்கமுடைய அறவோர் அந்தணர் சான்றோர் அதிதி குருடர் முடவர் வயோதிகர் நோயாளர்முத லிய விவர்களேயாம். கடவுட்பூசைக்குரிய ஆலயங்களைப் பொரு ளுடையார் தனித்தேனும் பலர் ஒருங்குசேர்ந்தேனும் வேண்டு மிடத் துண்டாக்கல், சிதைமாய்க்கிடக்கும் புராதனாலயங்களைப் புதுக்குவித்தல், நித்தியநைமித்திகங்களை நடைபெறச்செய்தல், வித்தியாசாலை அன்னசாலை வைத்தியசாலை முதலியவற்றையும் இவைபோல்வன பிறவற்றையும் உளவாக்கிப் பாதுகாத்தன் முத லாய தருமங்களைப் பொருளுடையார் யாவருஞ் செய்தல்வேண் டும். நல்லறிவாளர் தாயப்பொருளையுஞ் சீதனப்பொருளையுஞ் செலவழியாது தாமே யறநெறியா னீட்டிய பொருளைத் தான தருமங்களிற் செலவுசெய்வர். அங்ஙனஞ் செலவுசெய்து வைக் கும்பொருளே மறுமையிற் றமக்குதவுஞ் சேமதனமாமென்பதை அவர் நன்கறிவர்.

ஈட்டியபொருளை உண்ணுது முடாதும் தானதருமஞ்செய் யாதும் தம்மக்கட்கென்று போற்றிப்பேணிப் பொதிந்துவைப் பார் தம்பொருளாற் றாமெய்தும் பயனை யிழந்தவராகின்றனர்; அஃதேயுமன்றி அம்மக்கடாம் பொருட்செருக்கெய்திக் கல்வி கற்றலையும் தொழில்செய்து பொருளீட்டலையு மவமதித்து உள்ளபொருளையும் வீண்செலவுசெய்து வறியராய் விரைந்து கெடுதற்குங் காரணராகின்றனர். ஈயாண்மைக்குண்முடையார் பலர் தாம் ஈட்டியபொருளை, மக்களிலராகவுந், தானதருமஞ்

செய்யிற் றமக்குப் பிற்பயக்குமென்பதை யறிந்துவைத்தும் அங்ஙனஞ் செய்ய மனமுடன்படாதவராய், உறவினர் வீண்வழக்குப்பேசி அழித்தற்கு மவரையலைத்தற்குமே யுரியதாகக், காத்துவைத் திறக்கின்றனர். தாம் ஈட்டிய பொருளை அழுக்காறுமுதலாயின காரணமாகப் பிறரைப் பகைத்து அவரோடு பொய் வழக்கு முதலாயின பேசியழித்தல் வியபிசாரஞ்செய் தழித்தன் முதலாயின வெல்லாம் புல்லறிவாளர் செயல்களே.

பொருளை யீட்டுவார் வருவாய்க்குத்தக்க வாழ்க்கையுடையராய், ஈட்டியபொருளை நான்குகூறாக்கித் தானதருமங்களின் பொருட் டோர்கூற்றையும் பொருள்வருவாய் குன்றியகாலத் துதவும்பொருட்டுச் சேமதனமாக வோர்கூற்றையுஞ் சேர்த்து மற்றிருகூற்றையும் நுகர்வின்பொருட்டுச் செலவுசெய்தல் வேண்டும். அங்ஙனமின்றி ஈட்டுபொருளையெல்லாம் அப்போதைக் கப்போதே நுகர்வின்பொருட்டு மாத்திரஞ் செலவுசெய்வார் சேமதன மில்லாமையான் இம்மையினும் அறஞ் செய்யாமையான் மறுமையினுந் துன்பத்தை யெய்தி யின்பத்தை யிழப்பர். ஒருவன் நுகர்வின்பொருட்டன்றிப் புகழ்முதலாயின நோக்கி வீணிற்செலவு செய்தலும் இம்மை மறுமை யிரண்டினுங் கேடெய்துதற்கேதுவாகப். எவனுக்கு முதற்பொருளிற் செலவுமிகுமோ அவன் வாழ்க்கை உள்ளதுபோலத் தோன்றி மெய்ம்மையால் இல்லையாகிப் பின்பு அத்தோற்றமுமின்றிக் கெட்டுவிடும். அவன் கடன்படத் தலைப் பட்டுப் படிமுறையே பொய் களவு கொலைமுதலிய பாவங்கட் கெல்லா மாளாவன், கடன்கொடுத்தவரை இடர்க்கடலு ளமிழ்த் துவன், அவனுக் கிம்மைமறுமை யிரண்டினும் இன்பமேயில்லையாகலின் வீண்செலவுபோலவே மிக்கசெலவுங் கேட்டிற் கேதுவாகும்.

மாந்த ரிறப்பமிகப் பொருள்படைத்துடையாராயினும் அதனாற் செருக்கெய்தினராயின் அஃதவர்க்கு நன்மை பயவாது தீமையே பயக்கும். அரசு மிளமையு மறியாமையு முதலியவற் றான் எய்துஞ் செருக்கினும் பொருளா னெய்துஞ் செருக்கு

ரிக்கொடிது. பொருட்செருக்குடையவன் தனக்குத் துணை யாயினார்சொற் கேளானாய்த், தன்னைத்தானேயன்றி மற்று முள்ளாரெவரையும் மதியானாய்ச்,செந்நெறிக்கட் செல்லானாய்க், கண்ணிருந்துங் குருடனாய்ச், செவியிருந்துஞ் செவிடனாய், வாயிருந்து மூமனாய்த், தெய்வசிந்தை சிறிதுமிலனாய்த், தீநெறிக்கட் சென்று கெடுவன்.

புல்லறிவாளர் பலர் எல்லைகடந்த பொருளவாவெய்தி, அல்லும்பகலு மூணுமுறக்கமுமின்றி, அளவின்மிக வருந்தும் மெய் வருத்தத்தையும் பொருட்படுத்தாது, அப்பொருளொன்றனையே தம்முயிரினு மேலாகப் பொருட்படுத்தி, அறநெறியும் பாவ நெறியு மென்னும் பேதமும் பாராது, எந்நெறியானும் மேன் மேலு மதனை யீட்டி, அதினற்ப பாகத்தையேனுந் தானுகர்ந் துந் தானதருமஞ்செய்துந் தமக்காக்கிக்கொள்ளும் விருப்புச் சிறிது மிலராய்த், தாமிருந்துள்ள காலத்து மிறந்துள்ள காலத் தும் அதனையு மதனானெய்தும் பயனையு மிழந்தவராய், எக்கா லத்துந் துன்பத்தையே நுகர்பவராகின்றனர். மக்கட்பிறப்பி னர்க்குப் பொருளோவெனின் அஃதவர்க்கு வேண்டியதும் பெரிய நன்மைகளைக் கொடுப்பதுமாயுள்ளது, மற்றுப் பொரு ளவாவோவெனின் அஃதவர்க்கு வேண்டாததும் பெரிய தீமை களைக் கொடுப்பதுமாயுள்ளது. பொருளவா வெய்தப்பெற்றான் மனம், ஈட்டியதிற் சிறிதுஞ் செலவுசெய்யும் விருப்பிலதாயும், உள்ளதனோ டமைவிலதாயும், மேன்மேலும் வேண்டி யவாவுவ தாய் எல்லையின்றிச் சேறலின், அவன் ஒருஞான்றும் ஆறுதலின் றியும், அப்பொருளா னெய்தவேண்டிய வின்பத்தை யிழந்தும், எய்தவேண்டாத துன்பத்தை யுழந்தும் எஞ்ஞான்றும் வருந்து வன். அவன் உள்ளதனோ டொன்றைப்பெற வவாவுவன், அவ் வொன்றைப் பெற்றனனாயின் அவ்வளவோ டமையாது நூற் றைப்பெற வவாவுவன், நூற்றைப் பெற்றனனாயினும் அவ்வள வோடமையாது அளவின்றி மேலும் மேலுஞ்செல்லு மவன் பேரவாவுக் கெல்லையு முளதாமோ? அவன் அப்பொருளை யீட்ட லானுங் காத்தலானும் அஃதழிதலானும் மிக்கதுயருறுவன், அது குறைபடுமோ! கெடுமோ! கொடுங்கோன்மன்னர் அழுக்

காறுடைய பகைவர் உறவினர் கள்வரென் றிவர்முதலாயினோ
ராற் கவரப்படுமோ! அழனீரா னழிவெய்துமோவென்று நினை
ந்து நினைந் தெஞ்ஞான்று மச்சமுந் துயரமுமே யுறுவன். பொரு
ளக்கணக்காய்ப் பொருளை யீட்டினனேனும் அப்பொருளில்
எள்ளத்தனையேனும் செலவுசெய்தற் கவன் மனமுடன்படாது.
எத்துணைப் பெரும்பொருளை யீட்டிவைத்தனனாயினும், அஃ
தெத்துணைப் பெருந்துயரை யூட்டிற்றாயினும், அத்துயரத்தை
மேற் சகிக்கலாற்றானே யாயினும், அப்பொழுதேனும் அதன்
மாட்டு வெறுக்கையிலனாய் மேலும்மேலும் வெறுக்கைவேண்டி
எல்லாப் பொருட்பற்றினு மமிழ்ந்திப் பித்தன்போலாய் வாழ்
நாண் முழுவதையும் வீணிற்கழிப்பன். ஐயையோ! அவன்
மனம் அளவின்மேற்படப் பொருட்பற் றெய்தினாற்போலக் கட
வுட்பற் றெய்திற்றிலதே! எய்திற்றாயி னவ னுய்ந்துவிட றிண்
ணமா மன்றோ! நல்லதன் நலனையுந் தீயதன் றீமையு முய்த்
துணரவல்ல மேலாய மக்கட்பிறப்பினனாய்ப் பிறந்துளனேயெனி
னும் அவன்மனத்து நல்லறிவெய்திற்றிலதே! அஃதெய்தப்
பெற்றுளனாயின், மக்கட் கின்றியமையாச் சிறப்பிற்றுப் பொரு
ளென வதனை யீட்டுவானாய்ப், பொருளெய்துதற்கு மழிதற்கு
மூழே முன்னைக் காரணமென வுட்கொண் டதிற் பேரவாவுந்
துன்பமு மிலனாய், இம்மை மறுமைக்குரிய புருடார்த்தங்கள்
மூன்றனுள் நடுவின்கண் வைத் தெண்ணப்படும் நிலையாத வப்
பொருள் நிலையினபொழுதே அதனா னெய்தற்பாலவாய அறனு
மின்பமு மென்னு மிருதலையையு மெய்தும் நெறிக்கட் செல்வன்.

ஒருவற்குப் பொருள் நல்லதேயாயினும் பொருளாசை
கேட்டை விளைப்பதொன்றெனவே, பிறர்பொருளாசை அதனி
னும் மிக்ககேட்டை விளைப்பதொன் றென்பது சொல்லவும்
வேண்டாததாயிற்று. இப்பூவுலகின்கண் ஒருவன் எல்லாப் பழி
பாவங்களையும் எய்துதற் கேதுவாயுள்ளது பிறர்பொருளா
சையே. ஒருவன் கேடெய்துதற் கேதுவாவனவற்றுள் அதற்
கொப்பதேனும் மிக்கதேனும் பிறிதொன்றில்லை. பிறர்பொரு
ளாசை ஒருவற்கு நடுவுநிலைமையைச் சிதைக்கும்; சிதைக்க,
அப்பிறர்பொருளைக் கவரும்விருப் புளதாகும்; உளதாக, அப்

பிறரோடு பகை யுண்டாகும்; உண்டாக, வெகுளிமுதலிய தீய குணங்க டோன்றும்; தோன்றப், பொய் கொலை களவுமுதலிய பாவங்களெல்லாம் விளையும்; விளைய, அப்பாவங்கள் அவனை எஞ்ஞான்றும் விட்டுநீங்காத துன்பக்கடலுள் அமிழ்த்திவிடும். பிறர்பொருளாசை யுடையவன்றா னெய்திநின்ற பொருளா னொருஞான்றுஞ் சிறப் பெய்தப்பெறான்.

ஒருவற்குப் பொருட்செல்வம் இம்மை மறுமையின்பத்துக் கேதுவாமேயன்றி, அப்பொருளை யீட்டன் முதலியவற்றானெய் தும் துன்பத்தையும் அத்துன்பமாகிய வரம்பையுடைய நிலை யாத வின்பத்தையும் மேலும் மேலும் நுகர்ந்தெய்த்தலான், அச்சிற்றின்பத்தை விழைதலும் வெறுத்தலுமின்றிக் கடவுள் வழிபாடு சித்திக்கப்பெற்று, நிலையுடைத்தாய வீட்டின்பத்தை யெய்துதற்கு மேதுவாகும். அற்றாகலினன்றே ஒருவற்குப் பொருட்செல்வஞ் செல்வமன்று, அப்பொருட்கட் செல்லும் ஆசையற்ற சிந்தையி னிறைவே செல்வமாமென் றறிந்தோர் கூறுவாராயினர்.

---

## ௩௩ அதி. நல்குரவு.

நல்குரவாவது நுகரப்படுவன யாவுமில்லாமை. நல்குர வென்று சொல்லப்படுவதோ ரொப்பற்ற பாவி ஒருவனுழை வருங்காற், பிறர்க் கீயாமையான் மறுமையின்பமும் தானுய்வ வாமையான் இம்மையின்பமும் இல்லையாக வருமாகலின், அவனுக்கு அவ்வறுமைபோல இன்னாதது பிறிதொன்றில்லை. அஃதவ னழகைக் கெடுக்கும், உடம்பை வாட்டும், சோம்பலை யுளதாக்கும், உலோபகுணத்தை மிகவிளைக்கும், இல்லாட்குங் கணவற்கும் பலகலகங்க ணிகழ்தற் கேதுவாமாகலின் இல் வாழ்க்கையைக் கெடுக்கும், மானமின்மை பேராசை பொய் முதலாயவற்றை யுளவாக்கும், முன்னிருந்த களிப்பை யிலதாக் கும், அஃதவற்குப் பற்பல துயரங்களும் தீராக்கவலைகளுந் தோன்றற் கிடமாயதோ ராகரமாம்.

ஒருவன் நல்குரவெய்தினனாயின் அதன்பின்னர் அவனை அவனில்லாளும் மதியாள், மக்களும் வெறுப்பர், அவன் தன் றந்தையாரையன்றி ஈன்ற தாயானும் பிறனைக் கருதுமாறுபோல கருதி நோக்கப்படுவன், கொள்வதின்றாதலையன்றிக் கொடுப்பதுண்டாதலு முடைமையின் அது நோக்கிச் சுற்றத்தார் யாவரும் அவனைத் துறப்பர். நட்டார் முதலாயினோருங் கைவிடுவர். செல்வமுளதாயகாலத்துச் சூழ்ந்திருந்த உறவினர் முதலாயினோர் அஃதொழிந்து வறுமைவந் துற்றகாலத்து ஒருவனை விட்டுநீங்குதல், ஆலிற் பழம் பழுத்தகாலத்துச் சூழ்ந்திருந்த காக்கைமுதலாய பறவைகள் அஃதொழிந்த காலத்து அதனை விட்டுநீங்குந் தன்மைக் கொப்பாகும். நல்குரவெய்தினோன் உயிருடையனேயாயினும் நடைப்பிணமென்றே யாவரானுமெண்ணி அவமதிக்கப்படுவன்.

நல்குரவென்னும் பெரும்பகை தம்மைவந் தடுத்ததாயின், இரவாமைக்குண முடையாரும் இரப்பத் துணிவர் இரந்தார்க்குக் கரவாமைக்குண முடையாருங் கரப்பத் துணிவர், இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையும் இலராய உயர் குடிப் பிறந்தாரும் இழிந்த குலத்தார்கண்ணு மிரக்கச்சென்று எமக்கீதுமென் றிளிவந்த சொற்களைக் கூறத் துணிவர். பல நூல்களையுங் கற்றுவல்லவராயுள்ளவர்தாமும் பொருளில்வழிப் பகைவரையுஞ் சென்று பணிந்து நிற்பர். அக்கற்றுவல்லவர் வறியராயவழி மெய்ந்நூற்பொருளைப் பிறர்க்குப் போதித்தாராயினும் அவர்சொல்லைக் கேட்பிற் கண்ணோட்டத்தாற் பொருளீதல்வேண்டுமென் றஞ்சி யாவருங் கேளாதொழிவர். அவர் சொற்பயனில் சொல்லாய்முடிதலின் அவர்கல்வியு மவர்க்குப் பயன்படாததாகும்.

வறுமையென்னுங் கொடிய பாவி வந்தவழியே வழிவிருய்க் கடுகிவரும் பசிப்பிணியெனும் மிகப்பெருங்கொடிய பாவி, அவன் குடிப்பிறப்பு மாண்மையும் மானமு மெழிலும் நாணமும் விழுப்பமுங் கல்வியு மறிவு மின்பமு மூக்கமுந் தானமுந் தவமுமென்னு மிவற்றைச் சிதைத்து, அவற்குக்

கந்தையை யுடுத்தி, வெயிலென்று வெறாதும் மழையென்று மறையாதும் புயலென்று தரியாதும் விரையத்தொடருமாறு வலிந்தீர்த்துச்சென்று கண்டகண்ட வில்லங்களெங்கும் புறங் கடைவாயிற்க ணிறுவிப், புன்மைமொழிகூறி யிரக்குந்தொழி லிற் புகுத்தி அவனை அலைத்துவிடும். அவன் பசிப்பிணியைச் சகிக்கமாட்டாதவனாய்ப், இரத்தற் கேற்புடையார் இவர் ஏற் புடையரல்லாதார் இவரென நோக்காது யாவரிடத்துஞ் சென்று இரந்துநிற்பன். இங்ஙனம் நெருநன் மிகவருந்தித் தன்வயிறு நிறைத்தானொருவன் சிறிதுபொழு துறங்கி விழித்தவுடன் இன்றிருந்து "நெருநற்றுங் கொன்றதுபோன் றெனக் கின்னாத வற்றைச் செய்த நல்குரவு இன்றும் என்பால் வரக்கடவதோ! வந்தால் இனி யாது செய்வேன்! மந்திரமருந்துகளான் ஒருவ னுக்கு நெருப்பிடையே கிடந்து உறங்கலுமாம் நிரப்பு வந்துழி யாதொன்றானும் உறக்கமில்லையே" யென்று பசிக்கொடுமையு மிரத்தலின் வருத்தமு நோக்கி யிரங்காது வேறென்செய்வன்?

தன்னுபகன் பொருள்வருவாய் மிக்குடையவனும் அள விறந்த செல்வ முடையவனுயு முள்ளவழியும் மிக்கவன்பு டைய தனதொருகுழவிக் கேற்பனவற்றை யெண்ணிய வெண் ணியவாறளித் தோம்பி யழாவண்ணம் பாதுகாத்தல் ஈன்ற தாய்க் கரியதேயாகப், பலகுழவிகளைப் பெற்றதாய் மிகக்கொடிய மிடியாற் பிணிபட்டு மெய்வாட்டமுற்றவ ளாயவழிப், பாலு முணவும் யாண்டுப்பெற் றக் குழவிகளையெல்லாம் அளித்தோம்பி யழாவண்ணம் பாதுகாப்பவளாவள்? "அட்டற்குரிய வங்கிபடர்ந் திருந்துள்ள வடுப்பின்கணிதுபொழுதுகாளான் பூப்ப நெடுநாட் டொட் டுணவின்மையாற் கொடிய பசிநோய்மிக வருந்துகை யினுலே கண்டேர்ந்த பொல்லா முலையைச் சுவைக்குந்தோறுஞ் சுவைக்குந்தோறும் பாலகாணமற் குழவி தாய்முக நோக்க மனைவி யென்முகநோக்க யானு முன்முக நோக்கி வந்தனன் குமணா" வென்று கூறி யிரந்தானைப்போன்று, இரத்தற் கேற் புடையா னொருவனைத் தேடிச்சென் றவன் புறங்கடை வாயிற் கணின் றிரந்தேனு மக்குழவிகளை யோம்பா தவனுபகன் வே றென்செய்வன்?

நல்கூர்ந்தானொருவன் உரையாமைமுன் றுணரும் ஒண்மை யுடையாராய் மாற்று தீவாரைக் காணின், அவர்மாட் டிரந் தார்க்கு இரவான்வரு மிழிவின்மையின் இரக்கக்க வன், இர தாம் ஒருபோது அவர் ஈதற்குறைகாட்டுவராயின் அப்பழி தூவெள்ளறுவைக்கண் மாசுபோல அவர்கட் கடிதுசேறலின் அவர்க்குப் பழியாவதல்லது ஏற்பிலார்மாட் டிரவன்மையிற் றன்பழி யாகாது. ஈவார துணர்வுடைமையான் ஒருவன் இரந்த பொருள்கள், அவர்கட் காலமு மிடனு மறிந்து சேறலும் அவர் குறிப்பறிதலும் அவரைத் தன்வயத்த ராக்கலும் அவர் மனம் நெகிழ்வன நாடிச் சொல்லலும் முதலியவற்றான் எய்துந் துன் பமும் மறுத்தழி எய்துந் துன்பமு முறால் வருமாயின் அவற் கிரத்தலும் இன்பத்தின்பாலதாம். இரந்து குறையுறுவான் தன் மனத்தைக் குறிப்பா னறிந்து தானுற்றவதனைத் தீர்ப் பாரைப் பெறின், அவர் தன்முக நோக்கும்வகை தானும் அவர் முகநோக்கி அவ்வெல்லைக்க ணிற்க வமையும், அவ்வெல்லை யைக் கடந்து சொல்லுபாயின் இருவர்க்குஞ் சிறுமையாம். சொல்லுதன்மாட்டாது முன்னிற்றன் மாத்திரத்தான் இரப்பார் உயிரோம்பற்பொருட்டு அதனைமேற்கொண்டு போதுகின்றது, அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பார்சிலர் உலகத் துளராய தன்மையானே, பிறிதொன்றானன்று. மானந்தீர விரவு இர வாமையேயா டொத்தலின் அதனானும் வீடெய்துற் பயத்ததாய உடம்போம்பப்படும். வறுமையுற் றிரப்பா ருளராயினன்றே அவரையொழிந்தார் அவர்க்கீந்து புகழும் புண்ணியமு மெய்து வர், அவரிலராயின் ஞாலத்துள்ளார் செல்வுவரவுகள் உயிரில் லாத மரப்பாவை இயந்திரக் கயிற்றாற் சென்றுவந்தாற்போலும்.

தமக்குள்ளது கரவாது இவர் வரப்பெற்றேமென்று உண் மகிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்தார்மாட்டும் இரவாது வல்லதோர் முயற்சியான் உயிரோம்பலே ஒருவற்கு நல்லது. வறுமையான் வருந் துன்பத்தை முயன்று நீக்கக்கடவேமென்று கருதாது இரந்து நீக்கக்கடவேமென்று கருதி அதனைச் செய் தல், நெறியாய முயற்சி நிற்க நெறியல்லாத இரவாற் றீர்க்கக் கருது மறிவின்மையா மாகலின் அஃ தோராது செய்துநிற்

கும் முருட்டுத் தன்மையேயாம். மெய்வருத்த நோக்கி வேறு
தொழில்செய்தற் கஞ்சி இரத்தலைத்தானே யோர்தொழிலாகக்
கொண்டொழுகுவார், செல்வர் கடைநோக்கிச் சேறலானும்,
அவரைக் காணுந்துணையுந் தாமதித்தலானும், கண்டவழி நாண
லானும், அவர் முகத்தைப் பார்த்த நுளை நோக்குதலானும், இன்
முகத்தா னஃ தாளதெனக் கண்டுழி யிரத்தலானும், உடன்
பட்டவழி இல்லைப்பார்த்து நிற்றலானும், அவர் கொடுத்தது
வாங்கலானும், அது கொடுவந்து நுகர்வன கூட்டலானும் அல்
லத் மறுத்துழி யதனானும், இவைபோல்வன பிறவானு மெய்
துந் துன்பத்தை நோக்கிற்றிலர். வறுமைத் துயரத்தை முகத்தி
னூட்டிப், பற்களையெல்லாந் தெரியக் காட்டி, இளிவந்த சொற்
களையெல்லாஞ் சொல்லி யதனுண்மையை நாட்டி, ஆண்மை
முதலிய குணங்களை யகலவோட்டி, மான வரணை வீட்டித்,
துணைக்கரங்களை விரித்து நீட்டி, இல்லங்க ளொவ்வொன்றனை
யும் நாடிச்சென் றிரந்தலைந்து திரிதல, இம்மை மறுமைக்கட்
டோராத்துன்பத்தையும்இழிவையுங்கருங்இழிந்ததொழில்கள னெல்
லாவற்றுள்ளும் இழிந்த தொழிலேயாம். செல்வர்பாற் சென்று,
வறியனாயினேன் பொருட்ருதியென் றிரக்கும் மாற்றம், ஒருவற்
குரிய தானத்தைத் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானத்தை யீர்ந்துதள்ளலான மக்களை மரமாக்கி யரிவதோர்
கூரிய வாளாம்.

இவ்வறுமையென்னுங் கடலை இதனைப் கடத்துமென்று
கருதி ஒருவனை றிய இரவென்னுஞ் சேமமற்ற தோணி, அதன்க
ணோடுங்கால், நிலமறியாது செலுத்தியவழிக் காத்தலென்னும்
வன்னிலத்தோடு தாக்குமாயிற் பிளந்துபோமாகலின் அதன்க
ணேறற்க. நெறியான் முயற்சி கொடுவந்து தந்தது தெளிந்த
நீர்போலும் அடுபுற்கையேயாயினும அதனை யுண்டற்குமேல்
இனிய தில்லையாகலின் இயலுந்திறத்தான் முயற்சிசெய் தெய்
தியதின் மனந்திருத்திப்பட்டுண்டு வாழ்க.

தண்ணீர் பெறாது தாகத்தா னிறக்குநிலைமைத்தாயதோர்
ஆவினைக்கண்டு, ஆகாத்தோம்பல் பேரற மாகலின் அவ்வற
நோக்கிப், பொருள் கொடுத்துக் கொள்ளவேண்டாத எண்மைத்

தாயதேனும், இதற்குத் தண்ணீர் தரல்வேண்டுமென்று அத் தண்ணீரையே இரந்து சொல்லுங்காலும், அவ்விரவுபோல ஒருவன் நாவிற்கு இளிவந்தது பிறிதில்லையாகலின் அறனும் முயன்றுசெய்வதல்லது இரந்துசெய்தலாகாது. இரக்கசவென ஆண்டுக்கூறி இரவற்கவென ஈண்டுக் கூறியது பிழைவாம்பிற வெனின், அற்றன்று. என்னை? ஆண்டுக் கூறியது வீடுபேற்றி னிமித்தம் இரந்தாயினும் உயிரோம்புகவென உயிரோம்புதற் சிறப்புக் கூறியவெழுந்த தாகலானும் ஈண்டுக்கூறியது நெறி யாய முயற்சியிற்க நெறியல்லாத இரவாற் றீர்க்கக் கருதற்க வென இரவினிழிவு கூறியவெழுந்த தாகலானு மென்க. ஆகவே யாவரும் நல்குரவெய்தியவழியும் இயன்றமட்டும் இடையறு முயற்சியான் மெய்வருத்த நோக்காது ஏற்றதொழிலைச் செய்து பொருளை யீட்டித் தாமுந் நுகர்ந் தறமுஞ் செய்தல்வேண்டும்.

---

## ௩௪. அதி. பொருள்செயல்வகை

இவ்வுலகத்து மாந்தரொவ்வொருவருந் தத்தமக் கின்றி யமையாது வேண்டற்பாலனவாய உண்டியு முடையு முறையு ளும் மருந்தும் முதலாயவற்றைத் தாந்தாமே தத்தமக்குப் பிற ருதவியின்றி வேண்டியவேண்டியாங் கமைத்துக்கொள்ளும் ஆற்றலுடையரல்லர். அவர்தாம் ஒவ்வொருவரும் ஒவ்வோராற் றாற் பொருளீட்டி அவ்வவ்வாற்றாற் றமக்கும் பிறர்க்கும் பயன் படுவாராய் எல்லோருந் தத்தமக்கு வேண்டியவற்றை யெய்தா நின்றனர். அரசனு மவனைச்சேர்ந் தொழுகுவோரும் காவலைச் செய்தலாற்றமக்கும் பிறர்க்கும் பயன்படுவாராய்த் தமக்குவேண் டியவற்றை அப்பிறர்பாற் பெறுகின்றனர். உழவுத் தொழில்செய்வார் உணவுப்பொருள்களையும்நெசவுத்தொழில்செ ய்வார் உடைகளையும் சிற்பம் முதலாய தொழில்செய்வார் உறை யுண்முதலாயவற்றையும் உளவாக்கலானும், மருத்துவர் மருந்து கொடுத்துப் பிணியைத் தீர்த்தலானும், கல்விகற்பிப்போர்

தொழில்செய்வார்க்கு அவ்வக்கல்வியைக் கற்பித்தன் முதலிய வாற்றானும், வணிகர் உணவுப்பொருண் முதலாயின மிகுந்தவிடத் திற் கொண்டு குறைந்தவிடத்திற் கொடுத்து ஊதியம் பெறலா னும் அவர்யாவருந்தமக்கும் பிறர்க்கும்பயன்படுவாராயினர். இங் ஙனமே ஏனைத்தொழில் செய்வாருமொருவர்க் கொருவர் பயன் படுவாராயினர். மாந்தர் பொருள்செயல்வகை தொழில் செய்த லாற்றானே யமையும். தொழில்செய்வா ரிலரேயாயின் இந்நில வுலகங் காடாய்க் கிடக்கும். அதிவிசித்திரமான மாடமாளிகை களுங் கூடகோபுரங்களுங் கோட்டைகளும் நெருங்கி விளங் கும் பற்பன்னூறாயிரம் நகரங்களும், நறுநாற்றப் பன்னிற மலர் களுங் காய்களுங் கனிகளும் நிறைந்த மரங்களுஞ் செடிகளுங் கொடிகளும் நெருங்கிவிளங்கும் பொழில்களும், நெற்பயிர் முத லாயின செழித்தோங்கி வளரும் வயல்களும், இவைபோல்வன பிறவும், மக்கட் தொழின்முயற்சியாற்றானே இவ்வுலகத்தின் கட் காணப்படாநின்றன. எண்ணிறந்த மாந்தர் காலத்துக்குக் காலம் இவ்வுலகின் மேற்பரப்பைக் காணப்படு மிந்நிலையிற் சேர்ப்படுத்தப் பல்லாயிரம் வருடங்கள் சென்றன.

கல்வி கற்பிக்குந்தொழில் கற்பிப்பார்தமக்கும் கற்பார்க்கும், இம்மைமறுமைப் பயனைமாத்திரந் தரும் ஏனைத்தொழில்கள் போலாது கடவுள்வழிபாடு செய்து வீடுபேற்றையு மெய்துதற் கேதுவாயுள தாகலானும், பழிபாவங்கட் கேதுவாகாததொன் றாகலானும் மற்றெல்லாத் தொழிலினுஞ் சிறந்ததாயுள்ளது. கற்பார்க்கேயன்றிக் கற்பிப்பார்க்கும் அறிவு குறையாது மிக்கு வளரு மாகலானும், ஒருவிளக்கிற் பலவிளக்கும் அப்பலவிளக் கிற் பற்பலவிளக்கும் ஏற்றப்படுமாறுபோல ஒருவற்குக்கற்பித்த கல்வி அவ்வொருவராற் பலருக்கும் அப்பலருள் ஒவ்வொருவ ராற் பற்பலருக்குங் கற்பிக்கப்பட்டுக் கற்பிக்கப்படுவார் எண் ணில்லாதவர்க்குப் பயன்படுமாகலானும், உடம்போ டழிவெய் தும் உணவுமுதலாயின ஈட்டு மேனைத்தொழில்போலாது அழி துயிரோடுஞ் சென்று பயன்கொடுத்தற் கேதுவாகுந்தொழி லாகலானும், ஏனைத் தொழில்போன்று மிக்க மெய்வருத்தம் வேண்டிற்றில்லதொன் றாகலானும், அழிவில்லாது குறைந்

துங் கூடியு மொத்தும்வரும் ஏனைத்தொழில்போலாது அஃதழி வெய்தும் முதற்பொருளப் போதைக்கின்றிப் பயன்றருவதொன் றாகலானும், இவைபோல்வனபிற வேதுக்களானும் அறத்தொ ழில்களுட் சிறந்தது அதுவேயாம்.

கொடுங்கோன் மன்னரொடு போர்புரிந் தவர் நாட்டைக் கைப்பற்றல் குடிக ளிறுக்குமிறை முதலாயவற்றாற் செங்கோன் மன்னரு மவரைச்சேர்ந் தொழுகுவோரும் பொருளீட்டுவர். பாலுந் தயிரும் மோரும் நெய்யும் எருவும்முதலாயின தருதற் குரிய ஆன்காத்தலென்னுந் தொழில் சிறந்ததோர் புண்ணியத் தொழிலாம். உயிர்கட் குலகு. முடம்புமென்னு மிரண்டன் பயப்பாடு முழுதற் றொழிலின்கட் டங்கிற்று.

நென்முதலாய உணவுக்குரிய பொருள்களையும், பஞ்சு முதலாய உடைக்குரிய பொருள்களையும், மரம்முதலாய உறை யுட்குரிய பொருள்களையும், விக்துவேர்முதலாய மருந்துக் குரிய பொருள்களையும், இவைபோல்வன பிறபொருள்களையும் உளவாக்குந் தொழிலே உழவுத்தொழி லெனப்படும். மாந்தர் உணவுமுதலாயவற்றைப்பெற் றுடம்பைப் பாதுகாத்தலா னுல கத் துளராயினர். உழுதற் றொழிலா னுலகம் உணவுமுதலாய வற்றை அம்மாந்தர்க் குதவும். மக்கட் பிறப்பினராய மாந்தரும் ஏனைப்பிறவிகளாய விலங்குமுதலாயினவும் உயிரோடிருத்தற் கின்றியமையாத நென்முதலாயவற்றை யுளவாக்கும் உழுதற் றொழில் செய்வார், அதனைச் செய்யமாட்டாது பிறதொழில் கண்மேற்செல்வார் யாவரையும் மற்றைச் சராசரங்களையுந் தாங்குதலால், உலகத் துயிர்களாகிய தேர்க்கு அச்சாணிபோல் வர். உழுதலான்வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொழில்களைச் செய்து பொருளெய்தியவழியும் உணவின்பொருட்டு உழுவார் கட் செல்லவேண்டுதலின் உலகத்தை நடைபெறச் செய்வார் அவ்வுழுதற்றொழில் செய்வாரே. பிறரைச்சேவியாது உழுதலைச் செய்து தாமுமுண்டு பிறர்க்குங் கொடுக்கும் உழவரே தமக் குரியராய் வாழ்வார்; மற்றைப் பிறரைச் சேவித்து அவர் சில் லொப்பப் பெற்றுந் தம்முயி ரோம்பற்கு அப்பிறர்பின் செல்

வார் சுமக்குரியராய் வாழுமாறில்லை. மன்னரேயெனினும் மற்றெவரேயெனினும் தமக்கின்றியமையாத துணையென்னு மிவ்வண்மையைக் கடைப்பிடித்துத் தம்மா லியன்றளவு சிறிது பொழுதேனும் நாடோறும் உழுதற்றொழிலையுஞ் செய்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்வாரேற் பசிநோய் உலகத்து மிக்கு வருத்துமாறில்லை.

நென்முதலாயவற்றை விளைவிப்போர் நிலத்தினை யுழுது இறுகிக்கிடந்த மண் நெகிழ்ந்து புழுதியாம்வண்ணம் காயவிடுதலும், பயிர்கள் பணைத்து விளைவைத் தரும்பொருட்டு எருப்பெய்தலும், அப்பயிர்களை அவற்றொடு தாமே முளைத்த புன்முதலாயின வொருவண்ணம் களைகட்டலும், வேண்டியவளவுக்கு மிகாமலுங் குறையாமலும் நீர்கால்யாத்தலும், பட்டி முதலியவற்றான் அழிவெய்தாமற் காத்தலுமென் றிவ்வைந்தனையும் வழுவாமற் செய்தல்வேண்டும். இங்ஙனமே முயன்று வைத்துச் செய்பவர்க்கு நிலமகள் நுகரப்படுவன யாவற்றையும் உவந்து நல்குவள். அங்ஙனம் நல்குதல் கண்டுவைத்தும் அதுசெய்யாது பிறரைச் சேவிப்போரையும் யாசிப்போரையுங் காண்பளேல், அவர் மக்கட்பிறப்பின ரல்லரென்றும் பேதைமையுடையரென்றும் முருட்டுத்தன்மை யுடையரென்றும் நகுவள்.

மாந்தர்வேண்டிய வேண்டியாங்கெய்தற்பாலனவற்றை யெளிதினெய்துதற்கு வாணிகமேதுவாகும். வாணிகமாவது உள்ளூர்க்கண் அல்லது பிறவூர்க்கணுள்ளார் பிறர்க்கு வேண்டியதோர் பொருளைக்கொடுத்து அதன் விலையையும் இலாபத்தையும் பணமாகவேனும் வேறுபொருளாகவேனும் பெற்றுப்பண்டமாற்றஞ் செய்யும்தொழிலேயாம். பணமாவது அரசினர்பண்டமாற்றத்தை இலகுப்படுத்தும்பொருட்டுப் பொன்முதலாய வுலோகங்களான், அவற்றின் விலையையுங் குறித்துண்டாக்கிய நாணகங்களே. அளவின் மிக்குறுதன் முதலாயவற்றான் ஒருவர்க்கு அல்லதோரூவர்க்கு வேண்டாதபொருள் அளவிற் குறைதன் முதலாயவற்றான் மற்றொருவர்க்கு அல்லது மற்றோரூவர்க்கு வேண்டப்படு மாகலானும், தனித்தனியே யொவ்வொருவரும் தக்

தமக்கு வேண்டாதவற்றை வேண்டியவர்க்குக் கொடுத்து அவர் வேண்டாதனவும் தாம் வேண்டியனவுமா யுள்ளவற்றை அவரிடத்துப் பெறுதல் இலகுவாகா தாகலானும் அப்பண்ட மாற்றஞ் செய்தற்குக் குறித்தசிலர் வேண்டப்பட்டு வாணிக முளதாயிற்று. வாணிகஞ்செய்வா ரிலரேயாயின் ஒவ்வொரு வருந் தத்தமக்கு வேண்டிய பொருள்களையெல்லாந் தாந்தாமே வேண்டியவளவி னமைத்துக்கோடலும், தத்தந்தேயத்து விளை யாதனவும் பிறதேயத்து விளைவனவுமா யுள்ளவற்றைத் தாந தாந தனித்தனியே சென்று பெற்றுக்கோடலும் பெரும் பிர யாசமேயாம். சீர்திருத்தம விருத்தியாதற்கும் இறப்பப்பொரு ளீட்டற்கும் ஒருசாதியாரொடு மற்றொருசாதியார் அளவளாவி மகிழ்தற்கும் இவைபோல்வன பிறநன்மைகளை யெய்துதற்கும் வாணிகமேதுவாம். அறியாமை ஒருவரையொருவர் நமபாமை ஒருவரோடொருவர் நட்புச்செய்யாமை வஞ்சகம் பொறாமை பொய் சுவநயங் கருதன்முதலாய குற்றங்கள் வாணிகஞ் செய் வார்மாட் டெள்ளளவேனு மிருத்தலாகாது; இருப்பின் அவ ரொற்றுமை கெடும்; கெட, அவர்செய்யும்வாணிகம விருத்தி யாகாது, ஏற்றவளவிற் கொள்வது மிகையுங் கொடுப்பது குறையு மாகாமலும், விற்பாரெண்மை கண்டுழி மிக்கவூதியங் கருதிப் பண்டவிலையைக் குறையாமலும், நீதிவழி யொப்ப நாடுதலாற் பிறர்பொருளையுந் தம்பொருளைப்போலப் பேணிச் செய்யின் அவ்வாணிகம் நன்றுப வாணிகமாம். விசுவாசகாதம் முதலாய குற்றங்களோடு கூடிய வாணிகம் சிலநாட் கிளர்வது போற் றோன்றிப் பின்ன ரதுவுங்கெட் டீட்டியபொருளையும் முதலையுங் கெடுத்துப் பழிபாவங்களையே அவ்வாணிகர்க்கு நாட்டிவிடும்.

கோடைக்கண் வெயில் வெப்பத்தானும் மாரிக்கட் பனி மழைக்குளிரானும் வருந்தாமைப்பொருட்டு வேண்டப்படுவன வாயு உடையு முறையுளுமென்னு மிரண்டினையும், உணவட் டன் முதலாயவற்றுக் குபயோகமாகு முபகரணங்களையும். இவைபோல்வன பிறவற்றையும் உளவாக்கும் நெசவுமுதலாய தொழில்களும் ஆளப்படும் பொன் வெள்ளி இரும்பு

முதலியவற்றை யகழ்ந்தெடுத்தல், அவற்றை யாபரணம் முதலி யனவாக வமைத்தல், கடலிற்படும் முத்து முதலாயவற்றைக் குளித்தெடுத்தன் முதலிய தொழில்களும். இவைபோல்வன பிறதொழில்களும் மாந்தர்க்கின்றியமையாதனவும் அவர் செயற் பாலனவுமாம். இத்தொழில்களைச் செய்தலான் மக்கட் குபயோ கப்படாதனபோன்று காணப்பட்ட பொருள்களெல்லாம் அவர்க்கு மிகப்பயன்படுவன வாகின்றன. கையானன்றி அமைத் தாக்கிய கருவிகளின் றுணையானுந் தொழில்களெல்லாம் செய் யப்படக் கிடத்தலின், அவ்வத்தொழிற்கு வேண்டிய கருவிகளை ஆக்கும் பெற்றியையும் உபயோகிக்கும் பெற்றியையும் அறிந் தவர்வாய்க் கேட்டுப் பயின்று கோடலும், அவற்றை யாக்கிக் கோடலும், அவ்வத்தொழில்களை மேன்மேலு மிலகுவாக்கும் பொருட்டு நூதனமான கருவிகளை மதிநுட்பத்தா னாராய்ந் தறிந் தாக்கிக்கோடலும் தொழில்செய்வார்க் கின்றியமையாதன

யாவருந் தத்தமக் கேற்றதென்று கற்றுக்கொண்ட தொ ழிலை விரும்பிச்செய்தல்வேண்டும். விரும்பிச்செய்யாத தொழில் தாங்கற்கரிய சுமையாய்த்தோன்றி அல்லும்பகலும் மனத் துயரத்தை யுண்டாக்கிக் காலத்தை நீட்டித்துக் காட்டிப் பின் னர் அத்தொழில் கடைபோகாவண்ணஞ்செய் தவனை இடர்க் கடலு ளமிழ்த்திவிடும். மடியின்றி யூக்கித்துத் தன்கருமத் தைச் செய்வான், பல்வகைச் செல்வமும் புகழு மெய்துதலாற் றன்னையேயன்றித் தான்பிறந்த குடியினையு முயர்ச்செய்வன். போர்க்களத்திற் சென்று பொருவார் பலரேயெனினும் போர் தாங்கல் ஆண்டுள்ள வன்கண்ணர் சிலர்பாலதேயாமாறுபோல, ஓர்குடிப்பிறந்தார் பலரேயெனினும் குடிதாங்கல், "கருமஞ் செய்தற்கியான் கையொழியே" னென்னும் ஆள்வினையுடைய சிலர்பாலதேயாம். "இக்குடியினுள்ளார் யாவரு மின்புமுறக் கருமஞ்செய்து வெயின் மழை பனிமுதலியவற்றான் மெய்வருந் தித் துன்பமுறுவேன் யானே" வென்றுமடிசெய்வான், தானுங் கெட்டுப் பிறந்தகுடியையுங் கெடுப்பன் "ஆலின் வீழ்க டாங்க டோன்றற்கிடனுய மாத்தைத் தாங்கி யாங்கு நன்குடியைத் தாங்குவா ரா" மென்று, தங்குடி யையவருங் காலத்து, அக்

குடிப்பிறந்த நல்லவாண்மக்கள், அக்குடி செய்துணைகளாக்கு தொழிலையேனும், அல்ல தக்குடிக்குத் தாழ்வைத் தாராததா அந்நைவு தீர்தற் கேற்றதுமாய பிறதொழிலையேனும், முடிக்குந் திறம் பிழையாமலெண்ணிச்செய்து, அதனைத் தாங்குவர். அந்நனங் குடிக்குத் தாழ்வுவாராத நற்கருமங்களைச்செய்து அதனையுயரச்செய்தொழுகுவாரைத் தாமும் பயனெய்தநோக்கி உலகத்தவர் யாவருஞ் சுற்றமாய்வந்து சூழ்வர். தொழில்களெல்லாம் பெரும்பான்மையும் ஒருவரானன்றிப் பலர் ஒருங்குசேர்தலாற் செய்யப்படுவன வாகலின், அவ்வத் தொழில்செய்யுங் கூட்டத்தாருட் டொழிறுங்குவார் பிறரா னறியப்பட்டுப் புகழும் பொருளு முயர்வு மெய்துவர்.

களவுசெய்தல் பொய்வழக்குப்பேசல் முதலியவற்றைப் பொருள்வருவாயாகுந் தொழிலென மேற்கொண்டொழுகுவார். தாம் ஈட்டிய பொருளையும் அவ்வாற்றானேனும் வேறெவ்வாற்றானேனும் விரைவினிழந்து, பிறரா னறியப்பட்டமையான் அத்தொழில் செய்தற்கு மியலாதவராய்ச், செய்ததொழிலா னெய்தி விட்டுநீங்காத பழிபாவங்கட்கே யாளானவராய், உயிரோடுள்ளதுணையும் யாவரானு மவமதிக்கப்பட்டுந் தண்டிக்கப்பட்டும் அலைந்துதிரிந்து வருந்தி யிறந்தபின்னரும் நிரயம் புக்கு வருந்துவர் குடிப்பிறப்புச் சால்பு பண்புமுதலாய குணங்களா னுயர்ந்தோர் தமக்கொவ்வாத அத்தொழில்களினு நாணுலுடையராவர். பழிபாவங்கள் புகுதாமற் றம்மைக் காக்கும் நாணுடையார், அவற்றைச் செய்யாவழி உயிர் துறக்கவருமேயெனினும், அல்லது செய்தவழிப் பூமிமுழுதையும் பெறலாமேயெனினும், அவற்றைப் பொருட்படுத்தாது தமது நாணத்தையே சிதையாமற் காப்பர். ஆகவே யாவரும் பழிபாவங்கட்கேதுவாய களவுசெய்தல் பொய்வழக்குப்பேசல் முதலாய தொழில்களைச் செய்யாது, பழிபாவங்கள் சிறிதும்விளையாவண்ணம் கல்விகற்பித்தல் மன்னரைச்சேர்ந்தொழுகல் ஆன்காத்தல் உழவு வாணிகம்முதலாய தொழில்களு ளேற்றதொன்றைத் தெரிந்துசெய்து தமக்கும் பிறர்க்கும் பயன்படுவாராயிருத்தல்வேண்டும்.

## ௭௯ அதி. நட்பு

நட்பாவது தொடர்புடையார்மாட்டுச் செய்யப்படுங் கடையாய வன்புபோலாது, இவர் தொடர்புடையர் இவர் தொடர்புடையரல்லரென நோக்காது அதுசெய்தற்குரியா ரெல்லார்மாட்டுஞ் செல்வதாய விருப்பமேயாம். அன்புசெய்தற் குரியார்மாட் டதனைச் செய்தலுடையவரே அத்தன்மையான் நட்புச் செய்தற் குரியார்மாட்டும் அதனைச் செய்தலுடைய ராவர். தொடர்புடையார்மாட் டன்புடைய ரல்லாதார் பிறர்மாட்டு நட்புடையேமென் றொழுகுமொழுக்கம் நடிப்புமாத்திரமேயன்றி யுண்மையன்றாம்.

இவ்வுலகத்துமாந்தர் ஒருவர் மற்றொருவர் துணையைப் பெறாது அவரெல்லோருந் தாந்தாமே தத்தமக்கு வேண்டிய வூணுடை முதலாயவற்றை யமைத்து விரும்பியவண்ணம் நிறைவுபெற்று வாழமாட்டாமையான் நட்புளதாயிற்று. அம்மாந்தர் துணை பெற்றவழியும் அவர் தாம் எண்ணிய வெண்ணியாங் கெய்திச் சிறிதுங் குறைவின்றியிருத்தல் நிறைவுடையாராய விறைமுதற்கடவுடுணை பெற்றவழியேயாம் அத்துணைபெற வேண்டியே அக்கடவுள் அடியாரை நட்டலு முளதாயிற்று. முழுமுதற்கடவுளா தன்மையைச் சொன்மாத்திரையின் மறுக்குமவராமும், ஆற்றுவா ரிலராய மிக்க பசியானுந் தீரா நோயானும் அம்மாது தனிவழியிரு ளச்சத்தானும் அல்லதிவைபோல்வன பிறவேதுக்களானும வருந்துழியேனுந் தங்குறைவுநோக்கி நிறைவுடையராய அவ்விறைமுதற்கடவு டுணைவேண்டி வழிபாடு செய்யாதொழியார். நட்பின் றுணையினும் மிக்கதுணை அவ்வெல்லைக்கண் வேண்டப்படுவதாயிற்று. தொடர்புடையார்மாட்டுச் செய்யப்படுங் கடையாய அன்பும், அருளோடு தொடரும் இடையாய அன்பும், அஃதிறப்ப முதிர்ந்துழி யெய்துந் தலையாய பேரன்பும் எல்லார்மாட்டுஞ் செல்லும் நட்பும் மாந்தர்க்குளவாதற்கு அவர்தங் குறைவுடைமையே காரணம்.

ஒருதேயத்த ராதலும் பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் பருவ[illegible] ஒத்தவுணர்ச்சி யுடையீர்தலுமென்னும் இம்மூன்

றும் மாந்தர் நட்புக்கோடற் கேதுக்களாம். தொடர்புடைமையா னுளதாய அன்புடைய சுற்றத்தா ரொருவரோடொருவர் செய்த நட்பும். அயலார் ஒருவரோடொருவர் செய்த நட்பும், பிறப்புமுறையானுந் தேயமுறையானு முளவாய்ச், சுற்றமுந் தேயமு மாகலி னின்றியமையாமைபற்றி நிகழும் இயற்கையா னெழுந்த நட்பாம். பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் மருவுதலா னுளதாய நட்பு, ஒருவர்க் கொருவர் செய்த வுதவி பற்றி நிகழ்தலின் செயற்கையா னெழுந்த நட்பாம். நட்பின் முதிர்ச்சியே ஒத்தவுணர்ச்சி யுடைமைக் கேதுவாம். சுவநய மாத்திரங்கருதிச் செய்யப்படும் நட்புக் கடையாயநட்பு; அங்ஙனங் கருதா துளதாய நட்பு இடையாய நட்பு; கோப்பெருஞ்சோழற்கும் பிசிராந்தையார்க்கும் உளதாய நட்புப் போன்று நட்புடையாளன்படும் இடுக்கட் கண்டுழி ஒத்தவுணர்ச்சியான் உடனுயிர்நீங்கும் அத்துணைச்சிறப்பு வாய்ந்ததே தலையாய நட்பு.

விலங்குமுதலிய இழிந்த பிராணிகளேயெனினும் பற்றினைத் துறந்த துறவிகளேயெனினும் தனித்திருத்தலை விரும்பாது இயலுந்திறத்தாற் கூடுங் கூட்டத்தையே விரும்பலின், அக்கூட்டத்தா னெய்தற்பாலவாய நட்புப் பகையென்னு மிரண்டனுள், அவ்வக் கூட்டத்தினுள்ளார் பற்பல தீமைகட்கு மேதுவாய பகையையொழித்து, எல்லா நன்மைகட்கு மேதுவாய நட்பை வளர்க்குங் குணமுடையரா யிருத்தல்வேண்டும். அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்த நட்புக்கள் முன் சுருங்கியுளவாய்ப் பின் படிமுறையே பெருகிவளர்தலால் வளர்பிறை போலும், மற்றைப் பேதையாரும் பேதையாருஞ்செய்த நட்புக்கள் முன் பெருகிப் பின் சுருங்குதலாற் றேய்பிறை போலும். நல்லாரோடு நட்புக்கொண்டவன் எஞ்ஞான்று மின்பமே யெய்துதலின் சுவர்க்கம் புக்கவனுக் கொப்பாவன், ஏனைத் தீயாரோடு நட்புக்கொண்டவன் எஞ்ஞான்றுந் துன்பமே யெய்துதலின் நிரயம்புக்கவனுக் கொப்பாவன்.

இன்றியமையாமைபற்றி நிகழாத செயற்கை நட்புக்கோடலை யாவரும் விரும்புதல்வேண்டும். செயற்கைநட்[illegible]செய்தற்

காவாமைப் பெறுதலும், பெற்றால் அந்நட்பு நிலைக்குமாறு செய்யவேண்டிய உபாயங்களைச் செய்தலும், செய்தாற் றிரிபின்றி நிற்றலும்முதலிய வரிய வாகலின், அதனைப்போலச் செய்துகோடற் கரிய பொருளும், செய்துகொண்டால் அச் செய்துகொண்டவர்க்குப் பற்பல நன்மைகளைக் கொடுக்க வல்லதாந் தீமைக ளெய்தினவேல் அவற்றைக் கெடுக்கவல்லதும் பிறிதொன்றில்லை. ஒத்ததன்மையினரா யுள்ளவரே நட்புக்கோடற்குரியர். அங்ஙனம் நட்டாரிருவருள் ஒருவர் பின் கல்விமுதலியவற்றா னேற்றமுற்று அதனானே அகங்காரமுதலாயின வெய்தினராயினும், மற்றையவர் அவ்வேற்றங்கண்டு பொறாமை முதலாயின வெய்தினராயினும், அவர்நட்புப் பங்கமாதற்கும் இருவருங் கேட்டையெய்துதற்கும் அவைகாரணமாகும். பகைக்குக் காரண முள்ளதாயவிடத்தும் ஒருவர்பொறையான் இருவர் நட்புளதாம். ஒருவரோடுகொண்ட நட்பை யொழிதல்வேண்டிய வழியும் பகை வெளிப்படாவண்ணம் ஒழிதலே அறிவின் பாலதாம்.

பாம்போடு பழகினும் பழகியபின் விடுதலரிதாகலின், நன்காராய்ந்தன்றி ஒருவரோடு நட்புக்கோட லாகாது. ஆராயாது நட்புச்செய்தார், நட்டவர் தீயவரா யுள்ளாராயின் அவர் செய்யும பழிபாவங்க டமவேயாயுந் துயருறுவர், அவைபோல்வனவற்றைத் தாமேசெய்யப் பயின்றுந் துயருறுவர். நல்லாரும் நல்லாரும் நட்டலான் உலகத்தவர் யாவர்க்கும் பலநன்மைக ளுளவாம், ஏனைத் தீயாருந் தீயாரும் நட்டலான் அவர் தமக்கும் பெருங்கேடுக ளுளவாம். ஆகவே நட்பினை விரும்பி அதன் கண்ணே நிற்பார் ஒருவரோடு நட்புச் செய்யுங்கால், குற்றமில்லாதா ருலகத் தின்மையின் உள்ள குற்றம் பொறுக்கப்படத்தக்கதாயின் அவர்நட்பு விடற்பாற்றன்றாகலின் அக்குற்றத்தினையும், அதுகெட மிக்குத்தோன்றும் அவர் குணத்தினையும், குடிப்பிறப்பாற்றும் பிழைசெய்யாமையும் பழிக்கஞ்சிப் பிழைத்தன பொறுத்தலு முடையராவ ராகலின் குடிப்பிறப்பினையும், சுற்றப்பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருவராகலின் [illegible] சுற்றத்தினையும் [illegible] இவைபோல்வன [illegible] பிறவும்

ஆராய்ந்தே நட்புக்கோடல்வேண்டும். ஆராயாது நட்பினைத் தீயாரோடுகொண்டு நட்டபின் தாம் அவரென்னும் வேற்றுமை யின்மையின் அவரை விடுதலுண்டாகாது அவர்வயப்படுதலுண் டாம்; உண்டாக, அவரைத் தீநெறிக்கட் செல்லவொட்டாமற் றடுத்தலாகிய தங்கடனைச் செய்யாமையான் அவர்செய்யும் பழி பாவங்களெல்லாந் தாஞ் செய்தனவேயாக எண்ணப்படும்; எண் ணப்பட, அவர்க்குவரும் பகையெல்லாந் தம்மேலவாய்த் துன் பத்தினை விளைக்கும்; விளைக்கத், தாமும் பழிபாவங்களைச் செய் தற் கேதுவாகும்; நட்பை விடினுந் தமக் கவர் பகையாவர். அந் நட்பு எவ்வழியுங் கேட்டை விளைக்குமாகலின் பலகாலும் பல வாற்றானு மாராய்ந்து குணத்தானும் சொல்லானும் செய்கை யானும் நல்லவரோடேயே நட்புச்செய்தல்வேண்டும். தீயவ ரோடு நட்டல் கரும்பின் வேர்ப்புறத்தைத் தின்றதனோடொக் கும், நல்லவரோடு நட்டல் அதன் நுனிப்புறத்தைத் தின்றதனோ டொக்கும். கயபபூப்போல முன்மலர்ந்து பிற்கூம்புவாரோடு நட்டலாகாது, கோட்டுப்பூப்போல முன்மலர்ந்து பிற்கூம்பாத வரே நட்டற் குரியர். பல நன்மைகளைச் செய்த பாகன் தீமை யொன்றனைச் செய்தானாயினும் அந்நன்மைகளையெல்லாம்மறந்து அத்தீமையொன்றனையே நினைந்திருந்து சோர்வுபார்த்துக் கொல்லும் யானைபோலவாரோடு நட்புக்கொள்ளாது, ஒருநாள் ஒருகால் உணவுகொடுத்தவன் பின் கொன்றுமொத்த இன்னா வற்றைப் பலகாட் பலகாற் செய்தானாயினும அவற்றைப் பொ ருட்படுத்தாது அந்நன்றியொன்றனையே நினைந்து எஞ்ஞான் றும் மகிழ்ச்சிக்குறி காட்டும் நாயனையாரோடேயே நட்புக் கோடல்வேண்டும்.

நண்பருட் கடையாயார் உள்ளதுணையும் நீர்ப்பாய்ச்சன் முதலாயின வேண்டப்பட்டு மிக்கபிரயாசத்துடன் வளர்க்கப் படுங் கமுகையும், இடையாயார் தொடக்கத்தினன்றிப் பின்ன ரத்துணைப் பிரயாசம் வேண்டப்படாத தென்னையையும், தலை யாயார் தொடக்கத்தினு மத்துணைப்பிரயாசம் வேண்டப்படாத பனையையும் போல்வர். இம்மூவகைப் பகுப்பினருள் அவர் எப் பகுப்பி[illegible]யேனினும் ஆரா[illegible] இவர் நல்லவரென்று ஒரு

வரோடு நட்புக்கொண்டவர், பின்னர் அவர் தாம் விரும்பிய வத்துணை நல்லவரல்லரெனக் கண்டனராயினும் நட்பினைக் கைவிடாது, நெல்லுக் குமியு முளதெனவும், நீர்க்கு நுரையு முளதெனவும், பூவுக்கு நறுமணமில்லாத புல்லிய விதழு முள தெனவு முட்கொண்டு அவரை யடக்கிக் கோடல்வேண்டும்.

நீர் வற்றியவழிக் குளத்தை விட்டுநீங்கும் நீர்ப்பறவை போலத் தமக்குப் பயனுள்வழி நட்புச்செய்து அஃதில்வழி யொழிவாரும், பொருளையே குறித்து வஞ்சித்தொழுகிக் கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் கணிகையரையும் பிறர்கேடு நோக்காது அவர்சோர்வு நோக்குங் கள்வரையும்போன்று நட்பளவு பாராது அதனால்வரும் பயனளவு பார்ப்பாரும், அமர் வாராதமுன்னெல்லாந் தாங்குவதுபோன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போங் கதியைந்துஞ் சாரிபதினெட்டும் பொருமுரணுற்றலு மறியாத புரவிபோலத் துன்பம் வாராதமுன்னெல்லாந் துணையாவார்போன்று வந்துழி விட்டு நீங்குவாரும், விடமரையுந் தூர்த்தரையும் வேழம்பரையும் போன்று பலவகையா னகுவித்துத் தாம் பயன்கொண்டொழி வாரும், தம்மான் முடியுங் கருமத்தை முடியாதாக நடிப்பாரும் வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருப்பாரும், தனியே மனைக்க ணிருந்துழி நட்பாடிப் பலரோடும் மன்றின்க ணிருந்துழிப் பழிகூறுவாரும், பேதையாருமென் றிவர்போல் வார் நட்புச்செய்தற்குத் தகுந்தவ ராகார்; அவர் பொறுக்கப் படாத குற்றமுடைய ராகலின் முன்னறியாது நட்புச்செய்தா ரும் பின்னறிந்துழி அவரறியச் சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அதுபொழுது பரிகரித்துப் பின்னு நட்பாயொ ழுகக் கருதுவராகலின் அறியச்சொல்லாமலும் விடுகின்றவாறு தோன்றாமலும் ஒருகாலைக்கொருகால் ஓயவிடுதல்வேண்டும். பகைமையான் மனத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற்கூடி யொழுகுவாரும் நட்டுப் பின் னகத்துப் பகையாயினாரும் மனந்திருந்தி நட்பாதலில்லையாக லின், அவர் கண்டபொழுது முகத்தான் இனியவராகச் சிரித்தா ராயினும் நன்மைபயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும் அழு

தாராயினுந் தொழுதாராயினும் ஒருவன் தானும் அவரைப் பகையென்று வெளிப்பட நீக்கலாகாதவளவும் புறத்தால் நட்புச் செய்து அகநட் பிலனாய்ப் பின் னதுவுந் தவிர்தல்வேண்டும். உண்மைநட் புடையரல்ல ராயினும் செல்வக்காலத்துப் பயன் பெறுதற்கு நட்புடையார்போன்று புறத்தே நடித்தொழுகி னார் கேடுவந்துழிச் செயல்வேறுபட்டு விட்டுநீங்குவ ராகலின், ஒருவனுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய புலங்களை யளந் தறியுங் கோல்போலும்.

தீநிலத்து நீர் நன்னிலத்தையும் நன்னிலத்து நீர் தீநிலத் தையு மடையின் அந்நிலங்களின் றன்மையாற் சுவைமுதலியன திரியுமாறுபோல, நன்னட்பாற் றீயவன் நல்லனுதலுந் தீநட்பால் நல்லவன் றீயனுதலு முளவா மாயினும், தன்னோ டளவளாவிக் கலந்தபோதும் அடுதல் சுடுதல்களாகிய தன் றீக்குணங்கள் கெட்டுத் தான் பாலுஞ்சங்குமாகிய அவற்றின் றட்பமாகிய சுவையினையும் தூய்தாகிய வெண்ணிறத்தினையுமெய்தாக தீ அடுதல் சுடுதல்களாற் றமது சுவையும் வெண்ணிறமும் மிக்கு மேன்மேலும் விளங்கித்தோன்றும் அப் பாலுஞ் சங்கும்போ லத், தம்மோ டளவளாவிக் கலந்தபோதும் பகைக்குண முடைமை நட்புக்குண மெய்தாமைகளாகிய தந்தீக்குணங்கள் கெட்டுத் தாம்பெரியராகிய அவர்கம், பிழையாயின பொறுத் தல் நன்மையாயின செய்தல்களாகிய நற்குணங்களை யெய்தாத சிறியராயினர் செய்த பிழையாயின பொறுத்தல் அவர்க்கு நன்மையாயின செய்தல்களான் ஒளியைப்பெற்று அப்பெரிய ராயினர் மேன்மேலும் விளங்கித்தோன்றுவ ராகலின், சிறிய ராயினர் தம்மோடு நட்புக்கொள்ளிற், பெரியராயினர் அவரைப் புறக்கணித்து நீக்கிவிட லாகாது. சிறியராயினர் தீநெறிக்கட் செலுத்து மேனைச் சிறியராயினரோடு நட்புக்கொள்ளாது நன் னெறிக்கட் செலுத்துமப் பெரியராயினரோடேயே நட்புக் கோடல்வேண்டும். பாலோடு சேர்ந்தநீர் தன்றன்மை தோன் றப்பெறாது அதன்றன்மையை யெய்தித் தோன்றுமாறுபோல, அந்நல்லவரோடு சேர்ந்த தீயவர்தாமும் பயப்பாடுமுதலியவற் றான் அந்நன்னச்சிறப்பின ரல்லோராயினும் காண்பார்க்

கப்பெற்றியினராய் விளங்கித்தோன்றுவர். பின்னர்ப் படி முறையே அவர்தம் பகைக்குணமுடைமை நட்புக்குண மெய்தாமைக் தேய்ந்துபோக அவர்தாமும் பெரியராய் விளங்கித் தோன்றுவர். ஆகவே நல்லவரோடு தீயவர் நட்டலான் அந் நல்லவர் மேன்மேலு மொளியைப்பெற்று விளங்கித் தோன்றுவர், அத்தீயவர் படிமுறையே நல்லவராவ ராகலின், நல்லவர் நல்லவரோடுமன்றித் தீயவரோடும் நட்புக்கோடற்கும், தீயவர் நல்லவரோடேயன்றித் தீயவரோடு நட்புக்கோடற்காது.

ஒருவனோடொருவன் நட்புச்செய்தல் தம்முள்ளே நகுதற் கேற்றனவற்றைச் சொல்லி நகையாடி மகிழ்தற்பொருட்டன்று, நட்டவன் கேட்டினைத்தருந் தீநெறிக்கட் செல்லுங்கால் இன்சொற்சொல்லி விலக்கியும், இன்சொற்கு மீளானாயின் இடித்துரைத்து விலக்கியும், ஏனை நன்னெறிக்கட் செல்லுங்கால் உதவிபுரிந்து செலுத்தியும், அங்ஙனஞ்செல்லுங்கால் இடையே அவனுக் கிடுக்கண் வந்துழி அவையிடை யாடை குலைந்தவனுக்குஅப்பொழுதே மனத்தினும் முற்பட்டுக்கைசென்றுதவி அவ்விளிவரல் களையு மாறுபோல அப்பொழுதே அவன் அவ்வண்ணஞ் சென்றுதவி அதனைக் களைந்தும், அஃதூழான் வந்ததெனின் விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுபவித்தலானும் அக்காரணத்தைத் தெருட்டி விளக்கலானுங் குறைத்தும் ஒருஞான்றும் வேறுபடாது இம்மைமறுமைகட்கு உறுதியாய அறமபொருளின்பங்களை யெய்தும்வழி நாடிச்செய்தலிற் றளராமைத் தாங்குப்பொருட்டேயாம். கண்டபொழுதே அகமொழிய முகமாத்திரம் மலரும்வகை நட்கு மது நட்பாகாது, உள்ளநெகிழ்ச்சியான் அவ்வகமும் மலரும்வகை நட்கு மதுவே நட்பு. நூலைக் கற்குந்தோறுங் கற்குந்தோறும் அறிவு வளருமாறுபோலப் பயிலுந்தோறும் பயிலுந்தோறும் இன்பமிகுமாறு கலப்பதே நட்பாவது.

நட்டார் கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தலும் கெடும்வகை செய்தலும் தமக்கு வேண்டியன தாமே கோடலும் பணிவச்சங்க ளின்மையுமென் றிவைமுதலாய வெறுக்கத்

தக்கவற்றை நட்பாகிய உரிமையாற் செய்தனராயின் உண்மை நட்புடையார், பேதைமையான் அவ்வாறு செய்தனரென்றுதல், ஊழ்வகையான் எம்மின் வரற்பாலது ஒற்றுமை மிகுதிபற்றி அவரின் வந்ததென்றுதல் கொண்டு பொறுத்து அவர் நட்பினை விடாதவராவர். அப்பெற்றியார் செயலை நோக்கி அந்நட்புச் செயப்பெற்றார் மேலு மவ்வாறு செய்தற்கு நாணி முன்னரினும் மிக்க நட்புடையரா யொழுகுவர்; நம்மாட்டு மிவர் இத்தன்மைய ராவரென்று பலரும் வந்து நட்பினராவர்; பகைவரானு மவர் விரும்பப்படுவர்.

இயற்கையா னன்பும் செயற்கையா னிந்நட்பும் உள்வா மாகலின் ஒருவன் தன்மாட் டன்புடையாரைப் பெறுத லரி தன்று, நட்புடையாரைப் பெறுதலோ மிகவரிது. தன்னை யறிந்தவரெல்லாந் தனக்கு நட்பின ரல்லர். தக்காரை யுண்மையி னட்டு மிக்கபிரயாசத்துடன் காக்கினன்றே நட் புளதாவது. ஒருவற் குளதாய துன்பங் குறைதற்கும் இன்பம் மிகுதற்கு மேதுவாய நல்லவரோடு செய்தநட்பானது இம்மைக்கணவற்கு மனவமைதியையும் இன்பத்தையும் மேன்மேலும் மிகவுள வாக்கி வளரச்செய்வதனோ டமையாது அறஞ்செய்தற் கேது வாய் மறுமைக்கண்ணும் இந்திரன்முதலிய இறையவர் பதங் களிற் செலுத்தி மிக்கவின்பத்தை யெய்துவிக்கு மாகலின் அத் தகைய நட்பை யாவரும் விரும்பிச்செய்தல்வேண்டும்.

---

## ௬௯. அதி. பகை

பகையாவது இருவர் தம்முட் பொருது வலிதொலைதற் கேதுவாகிய மாறுபாடு, பகை வருதற்குக் காரணங்கள் பலவுள. அர்சவதிகாரம் இளமை கல்வி செல்வம் முதலாயவற்றான் மாந் தர் செருக்குடைய ராவரேயாயின் அவரோடு யாவரும் பகை யுடைய ராவர். பிறருடைய கல்வி செல்வம் அதிகாரம்முதலிய

வற்றைக் கண்டு அழுக்காறெய்தினவர் அவனோடு பகையுடைய ராவர். ஒருவன் கல்வி செல்வம் அதிகாரம் புகழ் முதலியவற்றைப் பெறவிரும்பி, விரும்பியவண்ணம் அவை யெய்திற்றிலனே யாயின், அவை யெய்தாமைக்குத் தடையாயினானென்று கருதப் பட்டார் யாவரோடும் பகையுடையனாவன். அவாவின் விளைவாய புல்லறிவாண்மையே பகைக்கு முதற்காரணம்.

யாவரேயெனினும் பகையுடைமையை மெச்சி மேற்கொண்டொழுகுவார் புல்லறிவாளரே. நல்லறிவாளர் காரணமின்றிப் பிறர் தம்மோடு பகைத்தனராயினும் அப்பகையைப் பாராட்டாது அதனை நீக்கிக்கோடற்குப் பொறையுடையராவர்; ஏனைப் புல்லறிவாளரோவெனின் அவர் காரண முள்ளவழியும் பிறர் தம்மைப் பகைத்தனராயின் அவரை அவமதித்துத் தம்மையே மதித்துப் பொறையின்றி முற்பட்டுப் பகைத்துக் கெடுவர். ஒருவன் பொருளீட்டற்கும் அறஞ்செய்தற்கும் இன்பந்துய்த்தற்கும் பகைக்குண முடைமையும் பகைவரை யுடைமையும் பெருந்தடையாமாகலின், நல்லறிவாளர் அத்தடை தஞ்செலவைத் தடாவண்ணம் பாதுகாத்தலின் மிகவிழிப்பாயிருப்பர்.

அரச வதிகாரத்தை ஒருவன் பெற்றவுடனே இனி யானே உலகத்தை நியமிப்பவன், என்னை நியமிப்பவர் யாவருளரென் றெண்ணிச் செருக்குவன். கண்ணில்லாதவன்போன்றும் அறிவில்லாதவன்போன்றுங் களிப்பினாலொருவன் பூமிக்கண் வழிக்கொண்டு விரைந்து செல்லுமாறுபோலச், செருக்குற்றவவன் ஒருவரையும் மதியானாய், இது நன்னெறியென்றும் இது தீநெறி யென்று மோரானாய், ஒருவர்சொல்லுங் கேளானாய்ப் பகையின் வலியையும் பகைத்தலான்வருங் கேட்டின் விளைவையுந்தானே யுணரானாய் வெல்வதையே பொருளாயெண்ணித் தன்செருக்கால் பகையாக்கிய அப்பகைவரோடு விரைந்துசென்று பொருது வலிதொலைந்து கெடுவன். குமாரப்பருவத்தின்கண் யாவர்க்கும் யாவரையும் மதியாமையாகிய வோர்செருக் குளதாகும். அக் காலத் தவர்தாம், முன்னராங்ஙனஞ் செருக்குற்றுறெய்தியகேட்டை அறிந்தவர் கூறக்கேட்டறிந்தும் கண்டறிந்துந் தம்மைத்

தாமே யஃதெய்தி வளராவண்ண மடக்கிக் கோடல்வேண்டும். உலகத்தோடொட்ட வொழுகலைக்கற்று அதன்வழியொழுகும் பெற்றியை யாவரு மெய்துந்துணையுந் தந்தையுந் தாயுங் குருவுமென் றிவர்முதலாய பெரியவர்தஞ்சொற் கமைந்தொழுகல்வேண்டும், ஒருவன் கல்விகற்குங்காற் சிறிது கற்றமாத்திரத்திற் கல்லாதாரையுங் கற்றாரையுங் கண்டு தன்னை யவர்க்கு மிக்கவனாயேனும் ஒத்தவனாயேனும் மதித்தலான் யாவரையும் மதியாமையாகிய வோர்செருக் குளதாகும். பொருளை யீட்டு மொருவற்கும் ஓரளவி னீட்டியதுணையானே தன்னைப் பொருட்செல்வனென மதித்து யாவரையும் மதியாமைக்குண முண்டாகும். இங்ஙனமே கல்வி செல்வம் முதலியவற்றாற் செருக்குற்றார் யாவரையும் பகையாக்கி அவற்றா னெய்தற்குரியவாய நன்மைப் பயன்களை யெய்தாமையோ டமையாது எய்தற்குரிய வல்லவாய பகைமுதலியவற்றானாய தீமைப்பயன்களையே யெய்தா நிற்பர். உயர்ந்தோரெனப்படும் உலகத்தோடொட்ட வொழுகலைக் கல்லாதார், வேறெத்துணைச்சிறந்த கல்விகேள்விகளுடையரேயாயினும் கற்றறிவில்லாப் புல்லறிவாளரேயாம்.

புல்லறிவாண்மையாவது தான் புல்லிய வறிவினனாயிருந்தே தன்னை நலலறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும உறுதிச்சொற் கொள்ளாமை. உலகத்தோடொட்ட வொழுகலைக் கல்லாமையாற் கற்றார்மாட்டும் கல்லாதார்மாட்டு மஃதுளதாகும். நல்லறிவாளர் கூறு முறுதிப் பொருள்களை விவேகிகளாயி னேற்றுக்கொள்வர்; அகப்பை பாற்சோற்றின் சுவையை யறியாதவாறுபோலப் புல்லறிவாளர் அவற்றின் பயனை யுணரமாட்டாமையான் ஏற்றுக்கொள்ளா திகழ்ந்துரைப்பர். கரியைப் பாலிற் பலகாற் கழுவினாலும் அதன் கருமை நீங்கி வெண்ணிறத்தை யஃதடையாதவாறுபோல, முற்றவமில்லாத புல்லறிவாளர்க்கு நல்லறிவைப்பலகாற் புகட்டினும் அவர் அதனை யேற்றுக்கொள்ளார், நன்மணங் கமழும் பூவிற்றேனை விரும்பாது புன்மணங் கமழும் மலத்தின்சுவையை விரும்பு மீயைப்போலப் ல்லறிவாளர் சொல்லையே மெச்சுவர். அடக்கமே ஒருவற் காபரணமா மென்பதை அப்புல்லறிவாளர் அறியாமையாற் றம் புல்லறிவி னெல்லையைக் கடந்து நல்லறிவுடை

யார்போ னடிப்பரேல் அந்நல்லறிவாளர்தம் இகழ்ச்சியும் பகையு மெய்துதற் கே யுரியரவர். பனையின்கட் காய்ந்தவோலை கல கலக்குமாறுபோல அவையின்கட் புல்லறிவாளர் கலகலப்பர்; பச்சையோலைபோல நல்லறிவாளர் சொற்சோர்வுக் கஞ்சி யடங்கி யிருப்பர். புல்லறிவாளர் எல்லாவற்றானும் எல்லாரினுந் தாம் மேம்பட்டவரெனக் கருதி யொழுகலான் அவரெல்லாரையும் பகையாக்கிக் கெடுவர்.

கருமத்தைச் செய்யும் முறைமை யறியாத புல்லறிவாளன் அதனை மேற்கொள்வனாயின் அவன் பலரையும் பகையாக்கி அதனையுங் கெடுத்துத் தானுங் கெடுவன்; செல்வத்தை ஊழா னெய்தினானாயினும் அவனுடன் ஒரியைபு மில்லாதாரெல்லாம் பெற்று நிறைவடைய எல்லாவியைபுமுடைய தமராயினார் பசியா நிற்ப ராகலின் அவரெல்லாம் பகைவராவர்; அவன் அவ்வியை பில்லாதாரையும் பின்னர்த் தீமைசெய்தலாற் பகையாக்குவன்; தன்கைக்கண்ணே ஒன்றனை யுடையனாகப் பெற்றானாயின் அவன் மயங்குந்தன்மை, முன்னே பித்தமிக் குடையானொருவன் அம் மயக்கத்தின்மேலே கள்ளுமுண்டு மயங்கினாற்போலும்; அவன் வரும்பிறவிக ளேழினும் நிரயத்துன்ப முழத்தற் கேதுவாய தீவினைகளை இவ்வொரு பிறப்புள்ளே செய்துகொள்ள வல்ல னாய்; அக்கொடுவினைகள் செய்யக் கண்டோருஞ் சகிக்கலாற் றாராய்ப் பகையாவர்; அவன் கடவுளும் மறுபிறப்பும் இரு வினைப்பயனும் முதலியவாக உலகத்தார் பலரும் உண்டென் பனவற்றை இல்லையென்று சொல்லுவன்; அவன் தனக்கு நட் புச் செல்வம்முதலிய ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிட்டுப் பகை வறுமைமுதலிய கேடு பயப்பனவற்றைக் கைக்கொள்வன்; இங்ஙனமே அவன் பழி பாவங்களென நாணவேண்டு மவற் றுக்கு நாணானாய்க், கருமங்களிற் செய்வன விவை தவிர்வன விவையென நாடவேண்டுமவற்றை நாடானாய், யாவர்மாட்டும் முறிந்த சொற்செயலுடையனாய்க் கல்வி செல்வம் அதிகாரம் முதலிய பேணவேண்டு மவற்றையெல்லாம் பேணானாய்ப் பகை யும் பழியும் பாவங்களுமே யெய்தி இருமையின்பத்தையு மிழப்பன். அவன் தன் புல்லறிவா னெய்திய பயன் நல்லவருக்

தீயவருமென் றுள்ளவரெல்லாரும் அவற்குப் பகையாயினதும் தீமையாயின செயப்பெற்றதுமேயாம் உலகத்துப்புல்லறிவாளரு முளரேயாக யாவர்க்கும் பகையில்லாதிருத்தல் அரிது எல்லா வுயிர்கட்கும்பிறவுயிர்களோடு கூடாமையென்னுந்தீபகுணத்தை வளர்க்குங் குற்றமாகிய பகையான் இம்மை மறுமை யின்ப மிலவாமாகலின், யாவரும் அஃதுண்டாதற்குக் காரணமாகிய புல்லறிவா னெய்தும் வெகுளி முதலாய வேதுக்களை யொழித்து அப்பகை வாராவண்ணம் தம்மைப் பாதுகாத்தல்வேண்டும்.

பகையாயின செய்தார்க்குத் தாமும் பகையாயின செய் யாமை கூடுமாயின் அஃதியாவர்க்குந் தலையாமெனினும், அர சர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையானும் குடி யோம்பற்பொருட்டுப் பகைவரை யொறுத்தல் கடனாகலானும் அவ்வரசர், படைபொருண்முதலிய வேற்றுமைத் துணையும் நல்லறிவுடைமை நீதிநூல்வழி யொழுகன்முதலிய ஒற்றுமைத் துணையுமென இருவகைத்தாய துணைவலியுந் தம்வலியு முடை யாரோடு பகையா யெதிர்தலை யொழிந்து, அவ்விருவகை வலியு மிலராய மெலியார் பகைத்தனராயின் அவரோடு அறநோக்கிப் பகையா யெதிர்தலை விரும்புதல்வேண்டும். தன் சுற்றத்தின் மேல் அன்பிலனாய், இருவகைத் துணைவலியுந் தன்வலியு மில னாய், அஞ்சவேண்டாதவற்றிற் கஞ்சாநிற்பானாய், அறியவேண்டு மவற்றை யறியானாய்ப், பிறரோடு பொருந்த மிலனாய்ப், யாவர் மாட்டும் ஈயாமையாகிய இவறன்மாலையனாய் வெகுளியி னீங்கா னாய், அதனான் மறை பிறரறியாமை வெளிப்படுத்தாத நிறை யுடையனல்லனாய், நீதிநூலை யோதானாய்ப், அது விதித்தவற் றைச் செய்யானாய்த், தனக்குவரும் பழியைப் பாரானாய்ப், பண் புடைய னல்லனாயுமுள்ள வரசன் மேல்வந்த பகைவன் வலியினை யாங்ஙனந் தொலைப்பன். அப்பெற்றியினான் பகைவர்க்கு மிக வெளியனாவன். தன்னினும் வீர முடையாரோடும் சூழ்ச்சி யுடையாரோடும் பகை கொள்ளலும் தான் தனியனாய்வைத்துப் பலரோடு பகை கொள்ளலும் ஒருவற் காகாவாம். தன்னையும் பிறரையுந் தானறியாமைக் கேதுவாய வெகுளியை யுடையா னும், மேன்மேல் வளராநின்ற மிக்க காமத்தை யுடையா

னோடும், பன்மையான் வினையைத் தொடங்கியிருந்து அதற்
கேற்றன செய்வாரோடும், நீதியறி விலனாய் அச்சமுறுவா
ரோடும் பகைகொள்ளலன்று. வேண்டியவழிப் பகையை
வேறுபடுத்துத் தனக்கு நட்பாகச் செய்துகொண்டொழுகலும்,
களையப்படுவதாய களையை அது வலிதாய காலத்துக் களைய
லுறிற் றன்னை யதுதான் களையுமாகலின் மெலிதாய காலத்தே
களைதலும் விவேகமுடையராயினோர் செயல்.

ஒருவனுக்கு அனுபவிக்கவேண்டுவனவாய நீர்முதலாயின
முன் இனியனவேனும் பின் பெருவயிறுமுதலாய நோய்செய்
வன இன்னாவாமாறுபோலத், தழுவவேண்டுவனவாய ஞாதிய
ரியல்புகளும் முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்
னாவாம். வாள்போல எறிதுமென்று வெளிப்பட்டுநிற்கும்
பகைவரை முன்னே யறிந்து தன்னைக் காக்கலாமாகலின்
அவர்க்கு அஞ்சவேண்டியதில்லை; அங்ஙனம் நில்லாது கேள்
போல மறைந்துநின்று துணைபெற்றவழிக் கூடிநின்றேனும்
வீற்று வீற்றாயேனும் வெளிப்பட்டுக் கேடுசெய்வ ராகலின்
அத்தமராகிய பகைவர்க்கே அஞ்சுதல் வேண்டும். மனம்
பொருத்தமில்லாதவரோடு ஒருவன் கூடிவாழும் வாழ்க்கை
ஒருகுடிலின்கட் பாம்போடு கூடி யுறைந்தாற்போலும்.

மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்
யும் நோயை ஒருவன் தன்மனத்தினின்றும் நீக்கவல்லனாயின்
அவனெல்லாச்செல்வமு மெய்திக் கொடைமுதலிய காரணங்
களாற் புகழையு மிம்மைமறுமை யின்பத்தையு மெய்துவன்;
அங்ஙனம் நீக்க வல்லனல்லனாயின் அம்மாறுபாடே அவன்
மனத்திற் குடிகொண் டிருத்தலான் அஃதவனை யல்லும்பக
லுந் துன்பத்துக் காளாக்கிவிடும். யாவருந் தம்முள்ளத்து
மாறுபாடு தோன்றியவழி அதனை அறிவானே யொழித்து
விடுதல்வேண்டும்; அத்தன்மையாரோடு எல்லாரும் நட்பாயொ
ழுகுவர்; அன்றி மாறுபட்டு மிகுதலே தமக்கு இனியதென்று
கருதி அதனைச் செய்து வெல்லக் கருது மவரோடு எல்லாரும்
பகையாவர்; அவர்க்குக் கருதிய வெற்றிக்கேடும் பொருட்கேடு

மேயன்றிக் கருதாத உயிர்க்கே கெய்தினு மெய்தும். ஆக்கத்தை வேண்டினவன் காரணமுண்டாயினும் பகைத்தற் கெண்ணான்; கேட்டை வேண்டினவன் காரணமின்றியும் அதனைக்கருதலை யெண்ணுவன். தன்னோடு கூடாமையைக் கருதி ஒருவன் மாறுபாடாயினவற்றைச் செய்தானாயினும் தானுமவனோடு மாறுபடுதலைச் செய்யின் பகை மேன்மேலும் வளர்ந்து அவன் வலியேயன்றித் தன்வலியுந் தொலையும்; செய்யாதொழியின் அவன்செய்த வின்னாதன தாமே யோய்ந்துபோகத் தன்வலி தொலையா தோங்கிவளரும்.

ஆகவே ஒருவன் பகைக்குண மெய்தினனாயின் அவன் தான் கெடுதற்கேயன்றிப் பிறர் கெடுதற்குங் காரணனாகின்றான். அவன் பகைத்த பிறரும் படிமுறையே பகைக்குண முடையராகின்றனர். அவனோடு பகைத்த அவர்தாமும் அத்தன்மையாற் பிறரோடும் பகைப்பவ ராகின்றனர். ஒருகுடம் பாலிவிட்ட ஒருதுளி பிரைபோல ஆவ்வொருவன் பகைக்குணம் உலகத்துள்ளவர் பலரையும் பகைக்குண முடையவ ராக்கிவிடும். பகைக்குணமுடையவர் மனம் அல்லும்பகலும் பகைவரைக் கெடுக்கும் நினைவி லமிழ்ந்தும். அவர்க் கொருபோதும் மனவமைதியு மின்பமு மில்லை. அவர் பொருளீட்டற்கும் அறஞ்செய்தற்கும் அவர் பகைக்குணமும் பகைவருந் தடையாவர். அவர் இம்மையினும் மறுமையினும் நுகரவேண்டிய வின்பத்தைச் சிறிதும் நுகராராய் நுகரவேண்டாத துன்பத்தையே நுகர்பவராவர். இத்தகைக் கொடிரமான பகைக்குணந் தம்மாட்டெய்தியக்கால், ஒவ்வொருவரும் தன்மனத்தினின்றும் அதனை யறவே களைந்துவிடுவாராயின், எல்லாக் கேடுகட்கு மேதுவாய பகை இந்நிலவுலகின்க ணிலதாம்.

## ௬௭. அதி வியபிசாரம்

வியபிசாரமாவது காமமயக்கத்தாற் றனதில்லாளல்லாத மற்றைக் கன்னியர் பிறர்மனைவியர் வரைவின்மகளிரென் றின்னோரை விரும்பியொழுகுதல். இல்வாழ்வான் புத்திரப்பேற்றி னிமித்தம் ஏற்றவேற்ற காலத்துத் தனதில்லாளைக் கூடி நுகரு மின்பம் காமவின்ப மெனப்படும். ஒருவன் அவ்வளவைக் கடந்து காமமயக்கமெய்திப் பலபெண்களைச் சேர்ந்து அம் மயக்கத்தைத் தீர்க்க முயல்வனேல், அஃது தம்மயக்கம் மேன் மேலும் வளர்தற் கேதுவாமேயன்றிக் குறைதற்கு மில்வாழ்க் கைச்சிறப் பெய்துதற்கு மேதுவாகாது. ஒருவற் கின்பந்தரும் உணவு அளவின்மிக்குழித் துன்பந்தந்து கொல்லும் நஞ்சா மாறுபோல, இன்பந்தரும் காமமும் அளவின்மிக்கு மயக்க நிலையைப் பெறுமேல் அஃது அவனைக் கொல்லும் நஞ்சாகும். சில நச்சுப்பொருள்களை யுண்டுபயில்வார் படிமுறையே அள வின்மேற்பட அந்நச்சுப்பொருள்களை யுண்டற் கிச்சிக்குமாறு போலக், காமமயக்க மெய்தினோர் படிமுறையே அளவின்மேற் பட மகளிர் கூட்டத்தை யிச்சிப்பர். காமமயக்கமெய்தினோர் அதனானே வியபிசாரஞ்செய்யத் தலைப்பட்டுப் பிராணவாயுவை அளவின்மிக விடுதல்செய்தன் முதலாயவற்றாற் குறித்தநா ளெல்லையை யெய்துமுன்ன ருயிர்துறப்பர்.

வியபிசாரஞ்செய்யு மொருவன் அதனாலெய்தும் பொய் யின்பத்தை மெய்யின்பமெனக் கருதி இம்மையி லெஞ்ஞான்றுந் துன்பமே யுழந்து மறுமையினும் நிரயத்திற் புகுந்து துய ருறுவன். கல்வி செல்வம் ஊண் உடை மக்கட்பேறு முதலாய வற்றா னெய்து மின்பம்போன் றொருவன் றனதில்லாளைக் கூடி நுகரு மின்பமே யின்பம்; துறந்தார் அதனையும் பொய்யின்ப மென்பர்; ஏனைப் பொதுமகளிர் முதலாயினோரா னெய்து மின் பம் மெய்யாவதுபோலத் தோன்றினும் ஆகாயத்தாமரைப்பூப் போன்று பொய்யாவதேயாம்; அங்ஙனம் பொய்யாயின் இந் திரிய நுகர்வின்பொருட்டுத் தோன்றுதிருத்தல் வேண்டுமே யெனின் கண்ணுக்குத்தோன்றும் முயற்கோடு போலாம்; முயற்

கோடு பொய்யென் றறிந்தாற் றோன்றுகின்ற தில்லையெனிற் கானற் சலம்போலும்; கானற்சலம் பொய்யென் றறிந்த பின்னருந் தோன்றினும் நீர் உண்ணற் குதவாதே யெனிற் கனவின்க ணுளதாய வனுபவம்போலு மாகலின் அஃ துண்மையிற் பொய்யனுபவமேயாம். மாந்தர் இல்லதை யுள்ளதெனக்கொண்டு மயங்குதற்கு அவரதறியாமையே காரணம். கனுவனுபவம் மனத்தின் பழைய தொழிற்படிவாற் றோன்றி விழித்தவழிப் பின்னது பொய்யாமாறுபோல நனவின்கணனுபவமும் இல்லதை யுள்ளதாகக்கொண்ட மனத்துக்குண்மைபோலுளதாகும் பொய்யனுபவமேயாம்.

பகையு மச்சமும் பழியும் பாவமும் மெய்வருத்தமும் பொருளிழவும்முதலாய வனைத்தையுந்தரும் வியபிசாரவின்பம், ஒருவன் தன்னறிவைத் தானே மயக்கி இல்லதை யுள்ளதெனக் கொண்டு அப்பகைமுதலாயவற்றை யெய்தி யெஞ்ஞான்றுந் துன்பநுகர்தற் கேதுவாயதேயன்றி உண்மையினின்ப நுகர்தற் கேதுவாயதன்றாம். நாய் பன்னடுங்கத் தசையில்லா வென்பைக் கறித்தாலொப்ப வியபிசாரஞ்செய்வான் இன்ப நுகர்வான் போன்று துன்பமே நுகர்வன். அஃ தவற்கு முன்னருளவாயிருந்த மானங் குலங் கல்வி செல்வம் நல்லறிவு நல்லொழுக்கம் முதலாய வனைத்தையுங் கெடுக்கும், இலவாயிருந்த பழி பாவச்செயல்களையு மிழிவையுங் கொடுக்கும். நஞ்சுண்டார்க்குளதாவ தவ்வொருநாளைத் துன்பமே; அங்ஙனமன்றிக் காமமயக்கமெய்தினார்க் குளதாவ திம்மையினும் மறுமையினுமெஞ்ஞான்றும் விட்டுநீங்காத் துன்பமே. உண்டுழி அறிவைக் கெடுக்குங் கள்ளினைக்காட்டினும், நினைப்பினும் காண்பினும் கேட்பினும் பின்னர் வெறுப்பினும் அறிவைக் கெடுத்தே விடுங் காமமயக்கம் மிகக்கொடியது. உடம்பின் புறத்தைச் சுடும் ஞாயிற்றுக்கு மங்கிக்கும் நீருட் குளித்து முய்யலாம், அவ்வாறன்றி உண்மனத்தையுஞ்சுடும் காம மயக்கத்துக்கு நீருட் குளித்து முய்த லரிது, மலை முழைஞ்சுட் புகுந்தொளித்து முய்த லரிது. இத்துணைக்கொடிய காமத்தீயை மூட்டித் தாமே தம்மைச் சுடும் பேதையாரின்மிக்க பேதையா

ருக்கத்தில்லை. மனத்தின்கண் நினைந்தமாத்திரத்துச் சுவாலித்தெரியுங் காமாக்கினியை அம்மனத்தை யடக்கிமகிழ்ச்சியென்னும் நீரா லவிக்கலாமேயன்றி வியபிசாரமென்னும் நெய்யைப் பெய் தவிக்கலாமோ? பொய் கொலை களவு கட் காமமென்னும் ஐம்பெரும்பாதகச் செயல்களுட் காமம் ஏனை நான்கிற்கு மேதுவா மாகலின் அதற்கொப்பாகுங் கொடியபாவம் பிறிதொன் றில்லை. அப்பொழுது இனிதுபோலத் தோன்றினும் பின்னர்த் தொலையாத பழிபாவங்களை விளைத்துச், செய்தவர் தாமேயன்றிச் சுற்றத்தார்முதலிய பலரும் வருந்தற்கேதுவாய வியபிசாரஞ்செய்தல் ஒருவற்குப் பேதைமையிற் பேதைமையே.

காமமயக்கத்தாற் கன்னியரைக் களவிற்சேர்ந்து அவர் வாழ்வைக்கெடுத்தலைத்தல், இல்வாழ்வார்க்கு மேனையோர்க்கும் பெரியதோர் பாதகச்செயலாம். அப்பாதகர் பழிபாவங்கட்கு மாத்திரமேயன்றி எல்லாராலும் வெறுக்கப்படுதற்கும், பகைக்கப்படுதற்கும், அப்பகைவர் யாதுதீங்கு செய்வாரோவென்னு மச்சத்துக்கு மாளாய், எஞ்ஞான்றுந் துன்பத்தையே யின்பமெனக்கொண் டுழல்வர்.

காமமயக்கத்தாற் பிறனொருவ னில்லாளைக் காதலித்தொழுகுவானிடத்து, அப்பிறனுடை அவன்றமர்முதலாயினோரும் மறைவெளிப்படுங்காற் கொள்ளும் பகையும், அவர் மனம் வருந்தலான்வரும் பாவமும், அவர் தண்டிப்பாரோவென்ற வச்சமும், குடிப்பழியுமென்னும் இந்நான்கு குற்றமும் ஒருகாலும நீங்காவாய் நிலைநிற்கும். நட்பும் அறமும் பெருமையும் புகழுமென்னும் இந்நான்கும் ஒருகாலத்து மவற்கிலவாம். அவன் பிறனில்லாளிடத்துப்போதரும்போதும் புக்களிடத்தும் துய்க்குமிடத்தும் பின்னர்ப் புணர்ச்சி தோன்றுமற் காப்புழியுமென எக்காலத்து மச்சமே யுடையனுவன். அவன் எய்தும் அச்சத்தையும் இன்பத்தையும் உற்றுநோக்குங்கால், அச்சம் பலையளவும் இன்பம் அணுவளவுமா மெனலாம்; இன்பத்தைக் கெடுக்குங் குற்ற மச்சமே யாகலின் அஃ தின்பமென்று சொலற்பாலது மன்று. அவன்றன் குடியிலுள்ளாரும் அவடன் குடியி

லுள்ளாருமாகிய இருதிறத்தாரும் உலகத்தாராற் பழிக்கப்படுவ ராகலின் அவரெல்லோரும் அவற்குப் பகையாவர். அவற் கிம்மையி லவரா னல்ல தரசனு னுயிர்க் கிறுதி யெய்தினு மெய்தும். அவன் அப்பாவத்தான் மறுமையி னரகத்துன்ப மெய்துவன். அவன் தீமைபுரிந் தொழுகுவது இல்லுடையானது தெளிவுபற்றியே யாகலின், உயிருடையனே யெனினும் இறந் தவனாகவே யாவரானு மெண்ணப்படுவன். எய்துத லெளி தென்று பிறனில்லாள்கண்ணே நெறிகடந்து செல்லுமவன் குடிப்பழி யெய்துதற்குத் தான் எளியனாயதை எண்ணிற்றிலன் போலும். ஒருவன் பிறனொருவ னில்லாளைக் காமமயக்கத்தாற் காதலித்தொழுகுதல், எவ்வாற்றானே யெனினும் இறுதிக்க ணவற் கிறுதியையே விளைத்தற் கேதுவாமாகலின், அஃது தவ னச்சுப்பாம்பின் வாயை நக்கியதனோ டொக்கும்.

கைப்பொரு ளற்றபொழுதே யற்றுப்போகும் பொதுமக ளிர் நட்பு, நெய்யற்றபொழுதே யற்றுப்போகும் விளக்கொளிக் கும் மழையற்றபொழுதே யற்றுப்போகும் புதுப்புனலுக்கு மொப்பாகும். ஒருவனை அன்புபற்றி விரும்பாது பொருள்பற்றி விரும்பும் அப்பொதுமகளிர், அப்பொருள் கையுறுந்துணையும் தாம் அன்புபற்றி விரும்பினராகச் சொல்லும் இனியசொல், அப்பொழுது இனிதுபோன்று பின் வறுமை பயக்கும்; அவர்த மன்புதான் சொல்லின்கணல்ல தவர்கட்கிடவாது. கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் அப்பொதுமகளிரது முயக் கம், கூலிக்குப் பிணமெடுப்பார் அகத்தான் அருவராநின்று புறத்தாற் றழுவி அதனை எடுக்குமாறுபோலும். அப்பொது மகளிரது நினைவுவேறுபாட்டையும் சொற்செயல்களது பொய்ம் மையையும் உள்ளபடி யாராய்ந்தறிந்தார் இன்பமெய்தா ராக லின், அவர் அங்ஙன மவரைக் காதலித்தொழுக வொருபோது முடன்படார். கவர்மனத் தையலர்க்குப் பொருளில்லாதவர், இளமையழகுடையரேயெனினும் உயர்குடிப்பிறப் புடையரே யெனினும், புகழ் உடையரேயெனினும் கல்வியுடையரேயெனி னும் தம்மாட் டன்புடையரேயெனினும் வயசுமுதலாயினவற் றாற் றமக் கொத்தவரேயெனினும் அவரை நஞ்சுகண்டற்

கஞ்சுவார்போன்று வெறுத்துத் தள்ளுவர்; பொருளுடையாரை யோவெனின், அவர்தாம் அழகில்லாதவரேயெனினும் இழி குலத்தவரே யெனினும் யாவரானும் அவமதிக்கப் படுபவரே யெனினும் கல்லாதவரேயெனினும் தம்மினும் மிகமுதியரே யெனினும் மிகவிளையரேயெனினும் நோயாளரே யெனினும் தம்மை விரும்பாதவரேயெனினும் அவரை மயக்கித் தங்கண்களாகிய வலையிற்படுத்துத் தமதினிய சொற்செயல்களான் மயக்கி மனமழியச்செய் தெள்ளுக் கெண் ணெய்போல வளர்ந்துகாட்டிப் பொருளைப்பெற்றுப் போகத்தை விற்பர். செயற்கையழகானும் பாடலாடல்களானும் பொய்ம் மொழிகளானும் இனியபோற் றோன்றுஞ் செயல்களானும் அவரைத் தம்வயப்படுத்திப் பொருண்முழுதையு மபகரித்துப் பின்னரக் தற்றவழிப் புறக்கணித்துத் தள்ளிவிட்டு வேறு பொருளுடையாரைத் தேடும் பொதுமகளிரை நல்லறிவாள ரொருபோதும் விரும்பார்; ஏனைப் புல்லறிவாளரோவெனின் அவர்தாம், அப்பெற்றியராய மகளிரை விரும்பிக் கெட்டாரைக் கண்டுவைத்துங் கேட்டுவைத்தும் சிறிதும் நல்லுணர் வெய்தப் பெற்றிலராய், அப்போதைக் கவர்செய்யும் மயக்கவலையிற் சிக்கி, ஐம்புல நுகர்வைத் துறந்த யோகிக ளெய்துஞ் செங் கண்மாலுலகம் அவ்வைம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம் விரும்பும் மகளிர் மெல்லிய தோளின்கட் டுயிலுந் துயில்போல வருந்தாமலெய்தலாமோவென்று அம்மகளிரை மெச்சி, விளக் கொளியைக் கண்டு அதனை மெச்சி அதன்கண் வீழ்ந்துகெடும் விட்டிற்பறவைபோன்று அவர்பால் வீழ்ந்து விரைந்து கெடுவர். இன்பமாகிய பொருளை யிகழ்ந்து பொருளாகிய பொருளை விரும்பும் அம்மகளிரது புல்லிய நலத்தை, அருளொடு கூடிய அறம்பொருளின்பங்களை ஆராய்ந் தறிந்துசெய்யும் அறிவினை யுடையார் ஒருஞான்றுந் தீண்டார்; அதனைத் தீண்டுவார் வீட் டினைத்தலைப்பட்டு ஆண்டை நிரதிசயவின்ப மெய்துதற் கொரு ஞான்று முரிய ராகார். தம் புல்லியநலத்தை விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் பொதுவான ஆசையையுடைய அப் பொதுமகளிர துள்ளக்கிடக்கையை யறிந்திருந்தும் அவர்தஞ் சொற்செயல்களான் மயங்கி யேமாந்து உள்ளபொருள்களை

யெல்லாம் அவர்க்குக் கொடுத்து நோயையும் வறுமையையும் தாம்பெற்றுப் பின்னரிருந் திரங்கி வருந்தும் அறிவினரைக் கண்டுவைத்தும் தாமு மவ்வழியே யொழுகிக்கெடும் அறிவினர்க் கறிவிக்க வல்லுநர் யாவருளர்.

பொய் கொலை களவு கள்ளுண்டல் குடும்பகலகம் சண்டை பொருட்கேடு சந்ததியில்லாமை முதலாய வினைகட்கெல்லாம் காரணமாய வியபிசாரஞ் செய்தவர் அவற்றானுமேயன்றிப் பிரமேகங் கிரந்தி பகந்தரங் கல்லடைப்பு நீரிழிவுமுதலாய நோய்களானும் வருத்தமுற்று விரயக்கெட் டுயிர்துறப்பர்; அவர் தாம்மாத்திரமன்றித் தங்கீழுள்ளாரும் வியபிசாரஞ்செய்து கெடுதற்குக் காரணராவர். ஒருவரோடு புணர்தலும் புணராமையு மொரேகாலத்துடைய மனத்தினராய பொதுமகளிருங் கள்ளுஞ் சூதுமென இம்மூன்றுந் திருமகளாற் றுறக்கப்பட்டார்க்கு நட்பாம்.

ஆகவே கன்னியர் பிறர்மனைவியர் பொதுமகளிரென் றின்னோரைச் சேர்தலாகிய வியபிசாரஞ்செய்தல், இம்மையிற் பழியையும் மறுமையிற் பாவத்தையுந் தந்து இருமையின்பத்தையுங் கெடுக்குமென்பதை உய்த்துணர்ந்து யாவரு மதனைச் செய்யாமையைத் தமக் கொழுக்கநெறியாகக் கடைப்பிடித்து அவ்வழிக்க ணொழுகுதல்வேண்டும்.

---

## ௯௩. அதி. கள்ளுண்ணல்.

கள்ளென்பது அதனையுண்டவர்தம் அறிவைமயக்கும் ஓர்வகை வெறிப்பதார்த்தம். பதார்த்தங்கள் புளித்தனவாயின் அவை ஓர்வகை நச்சுத்தன்மை யெய்துகின்றன. *அளவின் மேற்பட்ட நச்சுத்தன்மையுடைய புளிப்படைந்த பொருள்கள் அவற்றை யுண்டவா தறிவைமயக்கலின் அவை வெறிப்பதார்த்தங்களெனப்படும். புளித்தநீராகாரம் மோர்முதலாயினவும் நச்சுத்தன்மைய வாயினும், அவற்றினஞ்சு உண்டவர தறிவைமயக்காதும் நாடோறும் படிமுறையே மேன்மேலளவினேற்றமாக

அதனை அவாவாமைக்கேதுவா யுள்ளுமாகலின், நஞ்சுக்குமருந்து நஞ்சேயென்னும் விதியையுட்கொண்டு ஒருவற்குடம்பின்கணுண்டாகும் நச்சுநீர்க்கு நன்மருந்தாமென ஆயுள்வேதமுடையார் அவற்றையுண்ணுமாறு விதித்து, உண்டார தறிவை மயக்குவதும்நாடோறும் படிமுறையே மேன்மேலு மளவேற்றமாக உண்ணுமவாவை விளைப்பதுமாயுள்ள கள்ளுண்டலைக் கண்டிப்பாராயினர். மற்றெல்லாப் பிறவிகளினும் அறிவினேற்ற மெய்திப் பிறந்த மாந்தர் கள்ளுண்டு தமதறிவை மயக்கினரேயாயின், அவர்தாம் இழிந்தபிறவிகளெல்லாவற்றினும் இழிந்தபிறவியை யெய்தினவராய்க் காணப்படுவர். அற்றே லஃதங்ஙனமாக, இக்காலத்துக் கள்ளுமுதலாயவற்றைக் காய்ச்சிக் கடைந்தாக்கப்படும் சாராயம்முதலாய மிகக்கொடிய வெறிப்பதார்த்தங்கள் அவற்றை யுண்டவரை எத்தன்மையராக்கிவிடு மென்பதை விவேகிகள் சிந்திப்பாராக. புகையிலை கஞ்சா அபினென்னு மிவைகளும் வெறிப்பதார்த்தங்களே. இவ்வெறிப் பதார்த்தங்களெல்லாம் அவற்றை யுண்டவர தறிவை மயக்குவதனோ டமையாது, தொடக்கத்தின்கண் உண்டவ னுடம்புக் கினியபோலத் தோன்றி, அதனை நஞ்சொடு பயிலச்செய்து, அதன்கட் படிந்து மிக்குச்செறியும் நஞ்சி னோயைத் தணித்தற்பொருட்டு, உண்டவளவினு மேற்றமானவளவு நாளுக்குநாட் படிமுறையே மிகுமாறவாவச்செய்து, அவ்வுடம்புள்ளதுணையும் அந்நஞ்சா னெய்தும் நோய் வளர்ந்துகொண்டேவரலான், அவ்வுடம்பைக் குறித்தகால வெல்லையையும் நெடுங்காலங் கொண்டுசெலுத்து நெறியின்மைக்குக் காரணமாகின்றன.

பனையுந் தென்னையு முதலாயின வீனும் பாளைகளை, அவற்றினுண்டாகுங் குரும்பைகள் பருத்து வளர்தற்குமுன்னர் நார்கொண்டுவரிதன்முதலியவற்றாற் கன்றச்செய்து நாடோறுஞ் சிறிதுசிறிதாக நுனிப்புறத்தை அரிந்துவிடலான் அதனினின்றூறிவருஞ் சாற்றைப் புளிக்கச்செய்து கள்ளென் றதனை மகிழ்ந்துண்டவர்க்கு அறிவு மயங்கும், காமாக்கினி சுவாலிக்கும், மான மழியும், நாண மொழியும், நல்லறிவாளர் மதியாத செருக்கு விளையும், வெகுளி யுளதாகும், பகைக்கஞ்சாத குறிக

டோன்றும், இடையிடையே நகையும் மிளிரும், ஈன்ற தாயா ளும் வெறுக்கற்பாலவாய சொற்களுஞ் செயல்களும் நிகழும், வஞ்சனையும் பொய்யுங் களவுங் கொலையும் வியபிசாரமுஞ் சண்டையுங் குடிபுகும், தஞ்சமென் றடைந்தாரைக் கைவிடுங் குணமுண்டாம், தம்பொருளிழவு நோக்காது தம்மோடு கூடி னோர்க்குங் கொடுத்து மேலும்மேலுமுண்டு கூடிக்களித்தலையே அவர்மனம் விரும்பும். இங்ஙனமே அவர் நல்லொழுக்கத்தை யிழந்து தீயொழுக்கத்தை யுடையராவர். அவர்க்கு உண்ணுஞ் சோறுமுதலாய உணவினளவும் அவற்றில் விருப்பும் படி முறையே குறையக் கள்ளொன்றே அவர்வயிற்றை நிறைக்கும். அவர்க்கு நோய்வரின், நச்சுத்தன்மை யெய்திய அவருடம்பில் உட்கொள்ளும் எவ்விதமான மருந்துகளும் பயன்படா.

அறிவில்லாத மாந்தர் முன்னைநல்வினையாற் பெற்றனவும் முயன்று பெற்றனவுமாய பொருள்களையெல்லாம் விலையாகக் கொடுத்து அறிவுமயக்கத்தையும் இம்மைமறுமையிற் றுன் பத்தை விளைக்கும் பழிபாவங்களையுமே கொள்ளுகின்றனர். கள்ளுண்டார்க்கு அது தறிவை மயக்கும்; மயக்க, அவர்தமக்கு நிகழ்ந்தன நிகழ்கின்றன நிகழற்பாலனவென்னும் முக்கால நினைவுங் கெடும்; கெட, அந்நினைவான் மனத்தின்கணிருந்துள்ள துன்பமாயினவெல்லாம் நீங்கும்; நீங்கச், சிறிதுபொழு துள்ளது போன்று தோன்றும் பொய்க்களிப்பொன்றே யுளதாம். நிலை நில்லாத வக்களிப்பொன்றையே விரும்பிக் கள்ளுண்டவர், ஈட் டிய பொருள்கொண்டீகைமுதலாயின செய்யாமையானும் பழி பாவங்களையே செய்தலானும் இம்மைமறுமை யின்பங்களை யிழந் தென்றுந் நிலைநிற்குந் துன்பத்துக்கே யாளாகின்றனர். அவர்க்கு மக்கட்பிறப்பும் எய்திநின்ற பொருளும் அவமாயின.

கள்ளை விலைப்பொருளையே கொடுத்துக் கொள்ளவேண்டு தலின் அதனையுண்பார் விரைவிற் றங்கைப்பொருளையெல்லாம் இழந்துவிடுவர். நாண்முழுதும் அறிவு மயங்கிக் கிடத்தலின், பொருளை மேலீட்டுந் தொழின்முயற்சியும் அவர்க்கில்தாகும். கள்ளை விலைகொடுத்து வாங்கியுண்ணுங் கைப்பொருளின்மை

கண்டுழியேனும், அஃதுண்ணுமையான் அறிவு சிறிது தெளிவெய்தும் அப்பொழுது அதன் கேட்டை நினைந்தேனும் அக்கள்ளுண்டலைக் கைவிடும் நல்லறிவெய்தப்பெற்றிலராய், யாசித்துக் கொடுத்தேனும், அல்லது களவுமுதலாய பாவச்செயல்களைச் செய்துகொடுத்தேனும் அதனை விலைக்குவாங்கி உண்ணுதலையே அம்மயக்கவறிவினர் விரும்புவர். ஒருகாற் பழகினவர் பின் மரணபரியந்தங் கள்ளுண்டலைக் கைவிடமனமொருப் படார். அறியாமையை நீக்கிக் கோடற்கென வமைந்த மேலாய மக்கட்பிறப்பினராய அமரர் அறிவைவேண்டாது அறிவு மயக்கத்தையே வேண்டிக் கள்ளுண்டு வெறிதலைக் கேறலான் உள்ளவறிவையுங்கெடுத்து வீணிற்பிறந்திறந் துழல்வாராயினர்.

கள்ளொன்றையே விரும்பி அதனையுண்பார், தம்மைத் தாம் விரும்பாதவரேயாக மற்றொன்றில் விருப்புடையரென்று சொல்லற்கோ விடமில்லையே. கள்ளொன்றேயன்றி அவர் விரும்பும் பொருள் இவ்வுலகத்துப் பிறிதொன்றில்லை. அவர் தம்மெய்வருத்தத்தையும் பொருட்படுத்தார் நாணழிவையும் நோக்கார், பழிபாவமென்பதையும் பாரார், எவ்வாற்றானேனும் விலைப்பொருளைக் கைப்பற்றுவர், வெயிலென்று வெறார், மழையென்று மறையார், புயலென்று தரியார், காததூரத்துக் கள்ளிருப்பினுங் கடுகிச்செல்வர் தந்நிலையிற் றிரிந்தவறிவீழ்வதையுந் தமவாய மானங் கல்வி பொருண்முதலாய வெல்லாம் அழிவதையும் உள்ளபடி அறிந்துளராயிருந்தும் அவற்றைப் பொருட்படுத்தாது கள்ளொன்றையே பொருட்படுத்தி விலையைக்கொடுத்து வாங்கியுண்பர். அவர் மனைவியர் விதவைகள்போலாவர் அவர்தம் மக்கள் ஆதரிப்பாரிலரா யலைந்து திரிந்து வருந்துவர், அவரை அரிதிற் பெற்று வளர்த்த தந்தைதாயர் மூப்புப் பிணிவாய்ப்பட்டுப் பசியாற் கிடந்துவருந்துவர். தாயின்ற வில்லத்து நெருப்புப்பற்றியது கண்டு பொருளிழவுமுதலாய வொன்றையும் பொருட்படுத்தாது பாங்கர்ச் சூழ்ந்தா ரொருவர் முகத்தையும் பாராது நில்லென்று தடுக்கவும் நில்லாது ஓர் திசையை நோக்கி வழிக்கொண்டு விரைந்தோடுவான்போன்று, ஊணுடையை மறந் இல்லம்முதலாய பொருளை மறந் திம்மைமறுமை யின்

பத்தைமறந் தீன்றதாய்முதலாய தொடர்புடையாரைமறந் துற வினரைமறந் தயலாரைமறந்து நட்டார்முதலாய வெஃலாரை யும்மறந்து தம்மையும்மறந்து தாம்விரும்பிய கள்ளொன்றையே நினைந் தக்கள்ளுக்காதல்கொண் டதன்பிறகே யோடித்திரிந் தலையும் பேதையாரின் மிக்கபேதையா ரிவ்வுலகத் துளரா? அவர்தாங் கள்ளுப்பற்று மொழிவரேல் யானெனதென்னும் பற்றொழிந்தவரென்றுஞ் சொல்லலாந் திறத்தினராய் அக்கள் ளொன்றையேபற்றி மற்றெல்லாப் பற்றையுந் துறப்பர்.

கள்ளுண்டு மயங்கித் தியங்கித் தள்ளாடி நெட்டுயிர்ப் பெறிந்து, தெளிப்பவ ரிலரேற் செல்லுமாற்றிற் றவறி யங்கு மிங்கு முலைந்து மேன்மேலும் வீழ்ந்து வீழ்ந்தெழூந் துடையுங் கழன்று தகாதன சொல்லிப்புலம்பி நாணமும்போய் மானமும் போய்ப் பிணம்போற் கிடப்பாரைக் காண்டலும் பாவம். கள் ளுண்ணின் அறிவு மயங்குமென்பதை யறிந்துவைத்தும் அதனை விரும்பியுண்டார், மனமொழிமெய்கள் தம்வயத்தவன்மையான் நாணழிவை யுடையராய், யாவுமறியாமையேயன்றித் தம்மை யறியாமையாகிய மெய்ம்மறப்பினையு முடையராய் மரம்போல யாவருஞ்செல்லும் வழியின்கட் கிடத்தலையும் இடையிடையே சிரித்தலையும் தகாதவார்த்தைகளைப் பேசுதலையும் எவருமரு வருக்கத்தக்க செயல்களைச் செய்தலையுங் கண்டவர்யாவருஞ் சிறிதுஞ்சகிக்க லாற்றாராய் மற்றொருபுறத்தே தம்முகத்தைத் திருப்பி நாணி யொதுங்கிச்செல்வர். ஆறறிவுடைய மக்களாய்ப் பிறந்துவைத்துங் கள்ளா னழித்துக்கொள்வாரை யாவரும் ஐயறிவுடைய விலங்குகளுடனும்வைத் தெண்ணார். அவர் ஓரறி வுடைய மரமென்றுஞ் சொல்லத் தகாதவரே. தன்மகன் எத் துணைப் பெருங்குற்றஞ் செய்யினும் அதனைச் சகித்திருக்குங் குண முடையவளெனப்படும் பெற்றதாய்தானும் அவன் கள் ளுண்டு களித்தலைக் காணிற் பொறாளாய்வெறுப்பள், ஆனபின் குற்றம்யாதும்பொறாத சான்றோர்முன் அஃ தெத்தன்மைத் தாகும்? யாவரேயெனினும் கள்ளுண்டுகளிப்பாரைக் காணின் நாணிச்செய்மைக்கண்ணே நீங்குவரேயாக, அக்கள்ளினுமை

யுங்கெடுத்த லறிந்து செய்மைக்கண்ணே கடிந்தொதுங்குஞ் சான்றோர்க்கு அஃதின்னாததாத லொருதலையேயாம்.

கள்ளுண்பானொருவன் அதனையுண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டுகளிக்கும் பிறனைக் காணுமன்றே, காணுங்கால் தான் உண்டபொழுதுள்ளதாஞ் சோர்வினை அவன் சோர்வால் அதுவு மித்தன்மையதேயென்று கருதான்போலும், கருதுவனாயின் மனமொழிமெய்கள் தன்வயத்தவல்லவாதலையும் அதனான்வரு மிழுக்கினையும் உய்த்துணர்ந்து பின் அதனை உண்ணுதலை யொழியாதிரான், அவன் அங்ஙனங் கண்டுவைத்தும் பின்னு முண்ணுதலால் ஒருகாலுண்டார்க் கறிவின்றெளிவு பின் ஒருஞான்று மில்லையென்ப துண்மையேயாம். நஞ்சானது தன்னையுண்டவனைக் கொல்வதேயன்றிக் கள்ளைப்போல மறுமைக்க ணரகத்துட் புகுத்திவிடா தாகலின் அந்நஞ்சினும் மிகக்கொடியது அக்கள்ளே. உண்டவர்தம் அறிவை மயக்குவதோ ரிருட்படலம்போலுங் கள்ளுப், பிறவிக்கடலுள்வீழ்ந் தழுந்துவோரைக் கரையேறாமற் றடுக்குமோர் நீர்ச்சுழிக் கொப்பாம். முன்னோரா னெய்திநின்ற ஒளியினை இகழற்பாட்டா னிழக்கச்செய்து இம்மைமறுமையிற் றுன்பத்துக் கேதுவாய கேட்டையே விளைக்கும் கள்ளுண்டலும் உண்ணாதவரை யுண்பித்தலும் உண்டவரோடு கூடுதலும் அதனை விற்றலும் முதலாயின யாவருஞ் செய்யவொண்ணாதன.

---

## ௯௪. அதி சூது

சூதாவது கவறு சதுரங்கம்முதலியவற்றா லாடுதல். சூதாடுவார் அறம்பொருளின்பங்க ளெய்தாமைக் கஃதிடையீடா யுளது. அவர்க்குளதாயிருந்த நல்லொழுக்கங் கெடுதற்குந் தீயொழுக்க முளதாதற்கும் அஃதேதுவா மாகலின் யாவரும் அதனைச் செய்யவொண்ணாதென அறநூல்களிலே விலக்கப் பட்டது.

ஒருவற் கமைந்துள்ள வாழ்நாளிற்பாதி நித்திரை செய்தற்குரிய இரவினும், காற்கூறு உடம்பு மறிவும வளர்தற்கேற்குரிய இளமைமுதுமைகளினுங் கழிய, எஞ்சிநின்ற காற்கூறே, அப்போதும் நோய்முதலிய விடையூறுக ளொப்துமே யெனினும் ஒருவாறு நிரம்பிய வுடற்பெலமும் அறிவினைற்றமு முடையனுய், அவன் செயற்பாலன வல்லவற்றைச் செய்யா தொழித்துச், செயற்பாலனவற்றைச் செய்து இம்மைமறுமை யின்பத்தை யெய்தும்வழி நாடி, நல்லொழுக்க நெறிக்கட் சேறற்கேற்ற காலமாம். அத்துணை அருமையும் பெருமையும் வாய்ந்த காலத்தை ஒருவன் வீணிற் சூதாடலிற் கழிப்பனேயாயின், அவன் மக்கட்பிறப்பினனுப் பிறந்ததனுல் எய்தும்பயனை இழந்தவனுவன்.

உலகியல் நடைபெறற்பொருட்டு ஆதித்தன்முதலிய அளவைகளாற் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானுகக் கூறுபடாத அருவப்பொருளாகிய காலதத்துவத்துக்கும் ஆன்மாவுக்கு மோரியை பில்லையாயினும், அவ்வான்மாக் கன்மவளவுக்கேற்ப எடுத்தவுடற்போ ளொதாகக் குறித்தவெல்லையை வரைசெய்து காட்டும் அக்காலமே வாழ்நா ளெனப்படும். அவ்வாழ்நாளைப் பெரும்பய னெய்துதற் குரியதாய் அரிதிற் பெற்றுவைத்தும், கேட்டையேயன்றி யாதொரு நன்மைப்பயனையு மெய்தாமைக் கேதுவாய சூதாடிப், பொழுது போகாநின்றதென் றின்புறு மாந்தர்தம் அறியாமை இருந்தபடி யென்னை? பொழுது போக்காகுமென்று கருதி அதனைவிரும்பி யாடுவார், அவ்வொழுக்கங் கெடுதற்கும் உணர்வழிதற்கும் நல்குரவுக்கும் பொய் களவு சண்டை வஞ்சகம் முதலாயினவற்றுக்கும் ஏதுவாதலை நோக்கிற்றிலர். அவ்வாட்டத்தா னவர்தா மின்புறுமவ்வின்பம், அவ்வாட்டத்தின்கண் மாத்திரம் பதிந்த மனத்தினராய், அவர்தமக்கு நிகழ்ந்தன நிகழ்கின்றன நிகழற்பாலனவென்னு முக்கால நினைவுங்கெடுதலா னப்பொழு துளதாவது. அவ்வின்பம் மிக்கவிருளின்கண் மின்னலைப்போன்று மிக்கதுன்பத்தின்கண் விரைந்து தோன்றிக்கெடும் பொய்யின்பமே. அப்பொய்யின்பத்தை மெய்யின்பமெனக் கருதி அதன்வயப்படுத்,

கள்ளுண்டவர்போ லறிவுமயக்க மெய்தி, அரிதிற்பெற்று வளர்த்ததாய் இறந்தன ளென்றசொற் கேட்பினும் அதனையும் பொருட்படுத்தாது, அவ்வாடலையே மெச்சி, வாழ்நாளையெல் லாம் உறுதிப்பயன்றரா வீழ்நாளாக்கும் அப்பேதைமாந்தர்க் கறிவுறுத்த வல்லவர் யாவருளர்?

சூதாடுவார் அறநெறியான்வந்த பொருளை அறமுஞ்செய்து தாமும் நுகர்தலே அறத்தா றென்பதை மறந்து, பொருளெய் தலாமெனக் கருதி அதனையாடி, இம்மைமறுமை யிரண்டினுந் துன்பமெய்துதற் கேதுவாய கேட்டையே விளைக்கும் அச்சூ தாட்டத்தா னீட்டிய பொருளையும் முன்னுள்ள பொருளையும் ஒருங்கே யிழந்து, தம்மைத்தாமே கெடுத்துவிடுகின்றனர். கவற்றினையும் அஃதாடுங் களத்தினையும் அவ்வாடற்குவேண் டும் வெல்லுமாயப்பிடித் தொழிலாகிய கைத்தொழிலினையுங் கைவிடாத நளன்முதலாய வேந்தர்பலர் முற்காலத்துத் தம் மரசுவிட்டுக் காட்டினும் நாட்டினும் தாமுளராகியே இலராகி யொழுகின ராகலின், தன்னைவிழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ளபுகழையுங் கெடுக் குஞ் சூதுபோல வறுமையினெல்லையைக் கொடுக்கவல்லது உலகத்துப் பிறிதொன்றில்லையென்பது யாவரானுந் தெள்ளிதி னுணர்தற்பாற்று. சூதாட்டத்தால் வென்று பொருளெய்துவாரு முளராலெனின், அவ்வென்றபொருடானும் இரையெனக்கருதி மீன் விழுங்கிய தூண்டி லிரும்புமுட்போன்றதேயன்றிப் பொரு ளாகாது. எஞ்சியிருந்துளதேயெனினும் அஃதவனையேயன்றி வழியினுள்ளாரையுங் கெடுத்துத் தானும் விரைந்துகெடும். ஒருவன் தான் வெல்லுமாற்ற லுடையனாயினும், சூதாடுவார் வென்றெய்திய பொருள் அவர் அச்சூதாட்டத்தை விட்டுநீங்கா மைப்பொருட்டு இட்டதோர் தளையேயாமெனக் கருதி அதனை விரும்பாதொழிதல்வேண்டும். சூதாடுவோர் அத்தூண்டின் முட்போன்ற ஒன்றனைமுன்பெற்று அதன்றன்மையை யோராது இன்னும் பெறுதுமென்னுங் கருத்தால் ஆடி நூற்றினை யிழப்பர். அவ்வாற்றாற் பொரு ளிழந்தேவருதலான், அவர் அறநெறியான் முன்னரீட்டிவைத்த பொருளைத்தானு மிழந்து, காலத்தை

வினிற் கழித்தலாற் பொருளை அறத்தாற்றான் மேலீட்டுதலு மிலராய்ப், பாவவழியா னீட்டியு மழித்தும், இம்மைக்க ணொன்றானும் பொருளையும் அதனானெய்தும் அறனு மின்பமு மென்னும் இருபயனையு மிழந்தவ ராகின்றனர்.

தன்பெயர் சொல்லல் மங்கல மன்மையென்று போனும் சூதென்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார், வென்றபொழுது அவ்வெல்லி நோக்கியேனும் அல்லது தோற்ற பொழுது அத்தோல்வி நோக்கியேனும் ஒருகாலத்தும் அதனைக் கைவிடாராய், வெல்லினுந் தோற்பினும் மனத்திருத்தி யடையாராயினமைபற்றி எக்காலத்தும் துன்பமே நுகர்வா ராய்ப் பசி நித்திரைமுதலாயின தோன்றுதலை யுணரப்பெறு ராயினமையாற் கடுகிப்பிடிக்கும் பிணிக்கே யாளாயினராய், மனைவிமக்கண்முதலாய மிக்கதொடர்புடையார்மாட்டும் சிறிது மன்பின்றி அவரை மறந்தவராய்ச், சிறிதுபொழுதேனும் மன வமைதியு மிலராய் மற்றெத்தொழிலையுங் கைவிட்டு அல்லும் பகலு மத்தொழிலையே செய்பவ ராவர். குடிப்பிறப்பும் மான மும் ஆண்மையும் வலிமையும் வென்றியும் அழகும் பெருமை யும் ஒழுக்கமும் ஒளியும் செல்வமும் கல்வியுமென்னு மிவை யெல்லாஞ் சூதாடுவோர்க் கிலவா யழிந்துவிடும். அவர்க் கூணுடைமுதலாய துப்புரவுகளிலவாம், தோல்வியாற் களவும் வெற்றியாற் பொய்ம்மையும் பகையு முளவாம். அப்பகையான் வெகுளிமுதலாய குற்றங்களுளவாய், அருண்முதலாய குணங் கள் கெடுதலான் அவர்க் கிருமையின்பமு மில்லை. ஆனமை பற்றியன்றே சூது வறுமைக்குத்தூது, பொய்க் குடன்பிறப்பு, மெய்க்குச் சத்துரு, களவு சண்டைமுதலாயவற்றுக்கெல்லாந் தாயென் றறிவுடையோர் கூறுவாராயினர். அப்பெற்றித்தாய கொடிய சூதை யாவரேயெனினும் விளையாட்டுக்கேயெனினும் ஆடா தொழிதலே அறிவின்பாலதாம்.

## ௯௰௫. அதி. மருந்து

அவிச்சையான் அறிவுமயங்கி அறியாமையுளதாய சீவான்மாச் சிற்றறிவைப்பெற்றுச் செயற்பாலனவற்றைச் செய்து வீடுபேற்றினை யெய்துமாறு, பேரறிவுடைய பரமான்மாவாகிய இறைமுதற்கடவுளருளான் எடுத்தபிறவிகளுண் மேலாயது மக்கட்பிறவியே. ஏனைய விலங்குமுதலாய பிறவிகள் கன்மத்தை யீட்டற்கும் அதன்பயனை நுகர்தற்குமே உரியன. உள்ளவினையையுங்கெடுக்கவேண்டிய மாந்தருணவு முதலாயவற்றானும் மருந்தானும் யாக்கையை நோய்வாராமற் காத்தலும் வந்துழித் தீர்த்தலு மின்றியமையாதன. அங்ஙனஞ் செய்யாதொழிவரேயாயின் வினையளவுக் கமைந்த காலவெல்லையளவும் அவ்வுடம்பைக் கொண்டுசெலுத்துமாறும், உள்ளதுணையும் பிணியுழத்தலான் அவ்வுடம்பின் றுணைகொண்டெய்தற்பாலவாய அறம்பொருளின்பங்களெய்துமாறும் இல்லையேயாம். மக்கட்குப் பழவினையானும் உணவுசெயல்கள் தொவ்வாமையாகிய காரணங்களானும்வரும் வாதம் பித்தம் சிலேட்டுமமென்னும் பகுதிகளையுடைய பிணிகளுட் பழவினையான் வருவன அதன் கழிவின்கணல்லது தீராமையின் மருந்தாற் றீர்வன அக்காரணங்களான் வருவனவேயாம். மருந்தாவன பொன்முதலாய வுலோகங்களானும் தாவரங்களின் வித்து வேர்முதலியவைகளானும் கத்தூரி கோரோசனையெனச் சில விலங்கிற்பெறுமவைகளானும் இவைபோல்வன பிறவானுமாக்கப்படுவன. அவ்வப் பிணிகட்கேற்ற மருந்தை ஆயுள்வேதமுடையார் கூறியவண்ணமாக்கி ஏற்றகாலத் துண்ணின் அவ்வப்பிணிகடரும்.

காரணத்தை யொழிக்கக் காரிய மில்லையாகலின் உணவு செயல்கள தொவ்வாமையை யொழிக்க அதன் காரியமாகிய பிணியு மில்லையேயாம் ஒருவன் தான் உளனாயிருந்தன்றிப் பொருளீட்டலும் அறஞ்செய்தலும் இன்பந்துய்த்தலும் உளவாகாவாமாகலின், இம்மைமறுமைப்பயனை யெய்தவேண்டினோர் உணவானுஞ் செயலானும் அவற்றினொவ்வாமை கண்டுழி மருந்தானுந் தம்முடம்பைப் பேண லின்றியமையாததொன்றே.

உடம்பைப் பேணாதவன் இம்மைமறுமைப்பயனை யிழத்தலோ டமையாது நோய்வாய்ப்பட்டுத் துன்பமு மெய்துவன்.

உணவுஞ் செயல்களும் ஒருவன்பகுதிக் கொத்தவளவின வன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும வாதம்முத லிய மூன்றுநோயும் அவற்றின் பகுதிப்பாட்டுநோயும் அவனுக் குத் துன்பஞ்செய்யும். உணவொத்தலாவது சுவைவீரியங்களா னும் அளவானு மொத்தலாம்; செயலொத்தலாவது மனமொழி மெய்களாற் செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே யொழிதலாம். ஒருவன் முன்னுண்டது அற்றபடியை யாக்கைநொய்ம்மைமுதலிய குறிகளாற் றெளியவறிந்து மிகப் பசித்தபோ துண்ணுங்கால், அவன்றன் பகுதியோடு மாறு கொள்ளாமையும் காலவியல்போடு மாறு கொள்ளாமையும் சுவை முதலியவற்றாற் றம்முண் மாறுகொள்ளாமையு முடைய உணவுகளைக் குறிக்கொண்டு குறித்தகாலந்தவறா துண்ணல வேண்டும். உணவுகள் ஒருவனுடம்பின் வாதம்முதலிய பகுதிக் காவனவற்றைச் செய்யாது அடாதனவற்றைச் செய்வனவாத லும், பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலவேறுபாடு களுள் ஒன்றற்காவன பிறிதொன்றற் காகாதனவாதலும், தேனும் நெய்யும் தம்முளொத்து நஞ்சாதல்போல்வனவாதலுமா யுளவாகலின் அவற்றைக் குறிக்கொள்ளாது மனம்பட்டவாற் றாற் குறித்தகாலத்தன்றி வேண்டிய வேண்டியபோதெல்லாம் உண்ணின் அதனானே அவற்கு நோயும் மரணமு முளவாம் ஒருவன் அம்மூவகைமாறுகோளு மில்லாத உணவைத் தன் னுள்ளம் வேண்டியவளவினு னன்றிப் பிணிவாரா வளவினுற் சிறிதுகுறைய வுண்ணின் வாதம்முதலிய மூன்றுந் தத்தம் நிலை யிற் றிரியாமையின் மனமொழிமெய்கள் அவன்வயத்தவாதலும் அதனான் அறம்முதலியநான்கும் எய்தலுமுடைமையின் அவன் மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்கும்; அவ்வாறன்றித் தன் பகுதியும் அதற்கேற்றவுணவும் காலமும் ஆராயாது வேண் டியதோ ருணவை வேண்டியதோர்காலத்து வயிற்றுத்தீயள வின்றி மிகவுண்ணுமாயின் அவன்மாட்டு நோய்கள் எல்லையற வளர்தலிற் றுன்பம் நீங்காது நிலைநிற்கும்.

நாடோறுங் குறித்தகுறித்தகாலத்துத் தவறாது அவ்வக் காலத்துக்கேற்ற வுணவை அளவா யுண்டுவருதலும், அவ னவன் செய்யுஞ்செயல்கள் அவனவன்பதத்திற் கொத்தவளவின வாதலுமென்னு மிவைகளேயன்றி, ஒருவன் இரத்தத்தை அசுத்தமாக்காவண்ணம் சுத்தமான நீரை அளவாகப் பருகுத லும், அந்நீருணவுகளினின்று பின் பிரியும் மலசலங்களைக் காலை மாலையிற் றவறாது மோசனஞ்செய்துவருதலும், தன்னானும் பிறரானும் இரேசிக்கப்பட்டு இரத்தவசுத்தத்தை அளாவிவந்த காற்றையும் பிறவேதுக்களாற் றுர்க்கந்த மளாவிய நச்சுக் காற்றையும் பூரியாது சுத்தவாயுவைப பூரித்தலும், இரத் தத்தை அசுத்தமாக்காமைக் கேதுவாகும் ஞாயிற்றி னொளி படுமிடங்களிற் சஞ்சரித்தலும், உடம்பினுள்ளிருந்து மயிர்க்கா ளூறும் வழிக்கொண்டுவரும் அசுத்தநீராகிய வெயர்வை புறத் தொழுகும்படி தினந்தோறுஞ் சுத்தவாயு வுள்ளவிடங்களிலே அளவான மெய்ம்முயற்சி செய்தலும், பகனித்திரை நோய்க் கேதுவாகலின் அதனைச் செய்யாதொழித்து மனமொழி மெய் களாற் செய்த முயற்சியளவுக்கேற்ப இரவிற்றுயின் றிளைப் பாறுதலும், நித்திரைசெய்து ஒருமுறை விழித்துப் பின் செய் யும் நித்திரை கணுக்காண்டற்கும் நோய்க்கு மேதுவாமாகலின் அதனைச் செய்யாதொழித்துவிடுதலும், உடம்பின் மேற்றோலில் அழுக்குப்படியாவண்ணம் சுத்தமான வுடையுஞ் சயனமுந் தலையணையும் முதலியவற்றை உபயோகித்தலும், உடம்பின் மேற்றோலிற் படிந்த வழுக்கைத் தினந்தோறுஞ் சுத்தமான நீராற் கழுவுதலும்முதலிய விவற்றின் வழுவா தொழுகுதலும் நோய்வாராமைக் கேதுக்களாம்.

பழவினையானுங் காரணங்களானும் நோய்களுண்டாகும் போது அவற்றி னீக்கத்தின்பொருட்டுச் செய்யத்தகுந்தன விவை தகாதன விவையென் றறிந்து தகாதனவற்றைச் செய் யாதொழிந்து தகுந்தனவற்றைச் செய்தல் யாவர்க்கு மாவசி யகமாம். பழவினையான் வருவன அதன் கழிவின்கணல்லது நீங்காவேனும் கடவுள்வழிபாடு மருந்துமுதலியவற்றான் நோயாளிக்குச் சிறிதுசுகமுண்டாம். பொருளுடைமை மருத்

துவன்வழிநிற்றல் நோய்நிலை யுணர்த்தல்வன்மை மருந்துத் துன்பம் பொறுத்தலென நோயுற்றவன்வகை நான்கும், நோய் காண்டற் கஞ்சாமை ஆசிரியனை வழிபட்டோதிய கல்வியும் நுண்ணறிவு முடைமை பலகாலுந் தீர்த்துவருதல் மனமொழி மெய்க ளேவாதலெனத் தீர்ப்பான்வகை நான்கும், பலபிணி கட்குமேற்றல் சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல் எளிதி னெய்தப்படுதல் பகுதியோடு பொருந்துதலென மருந் தின்வகை நான்கும், ஆதுரன்மாட் டன்புடைமை மனமொழி மெய்க ளேவாதல் சொல்லியன அவ்வாறே செய்தல்வன்மை அறிவுடைமையென இயற்றுவான்வகை நான்குமாய நான்கு பகுதியை யுடைய நான்குதிறத்ததே நோய்க்கு மருந்தாவது. அவையெல்லாம் பொருத்தமுடைத் தாயதேல் அம்மருந்து நோய்நீக்க றிண்ணம்.

ஆதுரன் நோயுளதாகுங் காலத்து மனமொழிமெய்க ளாறும்பொருட்டுத் தொழின்முயற்சி செய்யாதிருத்தலும், மருத்துவன்மாட் டன்புடையனாய் அவனை வழிபட்டுத் தனது நோயை உள்ளபடியறிவித்துப் பொருளைக்கொடுத்து மருந்தை வாங்கி யுண்டலும், அவனால் விதிக்கப்பட்டவற்றைச் செய்த லும், விலக்கப்பட்டவற்றைச் செய்யாதொழிதலும், மருந்தா லுண்டாகும் மாற்றங்களை அவனுக் குள்ளபடி யறிவித்தலும் வேண்டும். மருத்துவனுயினுன்கல்வியறிவொழுக்கங்களிற் சிறந் தவனுயும், ஆசிரியன் கற்பித்தவண்ணம் மருந்தைக் கைபாகஞ் செய்பாகந் தவறாமல் உலோபமின்றிச் செய்துமுடித்தலில் வல்லவனுயும், ஆதுரன்நோயைத் தீர்க்க வுடன்பட்டபோதே அதற்குச் செய்யவேண்டியவற்றைச் செய்யாமையானும் செய்ய வேண்டாதவற்றைச் செய்தலானும் ஏற்றகாலத்துச் செய்யாது தாழ்த்தலானும் பெற்ற பொருட்குறைவா னேற்றமருந்தைக் கொடாமையானும் இவைபோல்வன பிறவானு மெய்தும் பழி பாவங்கட்கெல்லாந் தானே யாளாதல் றிண்ணமென்பதைச் சிறி தும்மறவாது தன்கடனைச் செய்தலிற் சோர்விலனாயு மிருத்தல் வேண்டும். அம்மருத்துவன் ஆதுரன்மாட்டு நிகழ்கின்றநோயை அதன்குறிகளான் இன்னதென்று துணிந்து, பின் அது வரு

தற்குக் காரணமாய உணவுசெயல்களை யாராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கு முபாயத்தினை யறிந்து, நோயினையு முபாயத்தினையு மையமறத் துணிந்து, ஆற்றன்முதலியவற்றிற் றுறையாமை யுளவாயும் பிறிதுநோய் செய்யாமையும் பயனின்மையு முதலாயின விலவாயுமுள்ள மருந்து கொடுத்தல் உதிரங் களைதல் அறுத்தல் சுடுதல் முதலிய செயல்களில் ஏற்றவற்றைச் செய்யும்வழி, அவன்பகுதி பருவம் வேதனை வலிகளி னளவையும் சாத்தியம் அசாத்தியம் யாப்பியமென்னுஞ் சாதிவேறுபாடும் தொடக்கம் நடு வீறென்னும் அதன் பருவவேறுபாடும் வன்மைமென்மைகளும்முதலாய பிணியளவினையும் காலத்துக்கேற்ற மாற்றம் வேண்டுதலின் அக்காலத்தினையும் பிழையாமல் நூனெறியானும் உணர்வுமிகுதியானும் ஆராய்ந்து அவற்றோடு பொருந்தப் பழைய மருத்துவர் செய்துவருகின்ற முறைமையிற் றப்பாமற் செய்தல்வேண்டும். இயற்றுவான் ஆதுரற்குரிமையுடையனும் அவனிடத் தன்புடையனும் மருத்துவன் மனத்தை யொத்தவனும் மிக்கமதிநுட்பமும் நல்லொழுக்கமு முடையனுமிருப்பனேல், அவன் றன்கடன் செய்தலிற் றவறுடையான்.

இங்ஙனமே உணவுசெயல்களானும் மருந்தானும் பிணியினீங்கி உடம்பைப் பேணியுள்ளவன், பொருளீட்டலானும் அறஞ்செய்தலானும் இம்மைமறுமை யின்பத்தையும் வீடுபேற்றையுமெய்துவன். ஒருவன் உடம்பைப் பேணித் துறவறத்தின்கணின் றிறைமுசுற்கடவுளை யிடையீடுபடாமற் றியானித்துத் தானே தற்பிரகாசமும் பரப்பிரகாசமுமாய் நிற்கும் நிலையைக் கண்டு மெய்யுணர்ந் தவாவறுத்தல், அவன் அவ்வுடம்போடு கூடுதலாகிய பிறவிப்பிணிக்கு மருந்தாம்.

# ௩. காமத்துப்பால்

—:-*-:—

## ௪௧. [illegible]. களவு.

இன்பத்தின் பொதுவிலக்கணம் அறத்துப்பாலினும் அதற்குத் துணையான பொருளிலக்கணம் அரசநீதி கூறவே யமையு மாகலின் அதனைப் பொருட்பாலினுங் கூறி அவ்வின்பத்தின் சிறப்பிலக்கணம் இக்காமத்துப்பாலிற் கூறப்படும். ஆன்மாக்கட் கவிச்சையான் அகங்காரமும் அதனான் அவாவும் அதனான் ஒன்றைவிழைந் தஃ தெய்தியவழி இன்பமும் அஃதெய்தாவழி வெறுப்புளதாய் அதனாற் றுன்பமு முளவாமென மேற்கூறப் பட்டுளது. அவ்வின்பம் மிக்கவிருளின்கண் மின்னலைப்போன்று துன்பசாகரத்தின்கட் டோன்றுந் திரையேயாம். அது தொடக் கத்தினு மீற்றினும் அத்துன்பமாகிய வரம்பை யுடைத்தாகலின் சிற்றின்ப மெனப்படும். ஆன்மாவுக் கவிச்சையி னீங்கியவழி யுளதாம் அவ்வரம்பிலின்பம் சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய் இலக்கணவகையாற் கூறப்படற்பால தல்லதா கலின் அஃ தறத்துப்பாலிற் றுறவறமாகிய காரணவகையாற் கூறப்பட்டுளது. அற்றேல் அஃ தங்ஙனமாக, ஈண்டுக் கூறப்படு மின்பமோவெனின் அஃ திம்மையே பயப்பதாய வச்சிற்றின்ப மேயாம்.

அச்சிற்றின்பம் பொருளைத் துணைக்காரணமாக வுடைத் தாய் ஐம்புலநுகர்வா னுளதாவது. இன்னிசை முதலாயவற்றைக் கேட்டல், உயர்ந்த பஞ்சசயனம் முதலாயவற்றைப் பரிசித்தல், பொருள்களின் பன்னிற வண்ணம் முதலாயவற்றைக் காண்டல், அறுசுவை யுண்டி முதலாயவற்றைச் சுவைத்தல், நறுமண மலர் முதலாயவற்றை மோத்தலென்னு மிவற்றா னுளதாவ தவ்வின் பமே. அங்ஙனஞ் சுவை பலவென்று கூறுவார் கூறினும், ஒரு காலத் தொருபொருளான் ஐம்புலனு நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பமே இன்பமென நூல்களுள் விதந்து கூறப்பட்டுளது.

காமவின்ப நுகர்வின்பொருட்டு நூல்களிடத்துக் கூறப்பட்ட மகட்கோடலாறு, பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் காந்தருவம் அசுரம் இராக்கதம் பைசாசமென எண்வகைப்படும். பிரமமாவது நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவற்குப் பன்னீராட்டைப் பிராயத்தளாய கன்னிகையைத் தானமாகக் கொடுப்பது. பிரசாபத்தியமாவது மகட்கோடற்குரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம்மகட்கீந்து நீரிற் கொடுப்பது. ஆரிடமாவது தக்கோனொருவற்கு ஆவுமானேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடைநிறீஇப் பொன்னணிந்து நீரு மிவைபோலப் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது. தெய்வமாவது பெருவேள்வி வேட்பிக்கின்றார்பலருள் ஒத்த ஒருவற்கு அவ்வேள்வித்தீமுன்னர்த் தக்கணையாகக் கொடுப்பது. காந்தருவமாவது கந்தருவ குமாரருங் கன்னியரும் தம்முளெதிர்ப்பட்டு இயைந்ததுபோலத் தலைமகனுந் தலைமகளும் தம்முளெதிர்ப்பட்டியைவது. அசுரமாவது கொல்லேறுகோடல் திரிபன்றியெய்தல் வில்லேற்றுதன் முதலாயின செய்து கோடல். இராக்கதமாவது தலைமகடன்னினுந் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது. பைசாசமாவது மூத்தோர் களித்தோர் துயின்றோரென்னுமிவரைச் சேர்தலும் இழிந்தாளை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம்.

இவ்வெண்வகை மன்றலுள் இக்காலத்துப் பெரும்பான்மையி னிகழும் மன்றல் பிரசாபத்தியத்தின்பாற்படும் மணமகற்குரியார் தாம் ஆராய்ந்து நிச்சயித்த மன்றல் கோத்திரம்முதலியவற்றானும் பிறப்பின் கிரகநிலை முதலியவற்றானும் பொருத்தமுடைத்தாயின் தப்புதல்வற்கு மகட்கொடுக்குமாறு மணமகட்குரியாரோடு மணம்பேசி அவரையுடன்படுத்தியபின்னர் நிச்சயதாம்பூலஞ் செய்விப்பர். பின்பு சுபமுகூர்த்தத்திலே ஆசாரியர் மணமகனைக்கொண்டு பிரமசரியத்தை இறக்குதலாகிய சமாவர்த்தனஞ் செய்வித்தல், கடவுட்பூசை செய்வித்தல், நவதானியம் முளைப்பித்தலாகிய பாலிகை பூசை செய்வித்தல், இரட்சாபந்தனஞ் செய்வித்தல், கும்பபூசை செய்வித்தல், நவக்கிரகபூசை செய்வித்தல், அக்கினி யுண்டாக்கு

வித்தல், தந்தைதாயரைக்கொண்டு மணமகளை மணமகற்குத் தாரைவார்த்துத் தத்தஞ்செய்தலாகிய கன்னிகாதானஞ் செய்வித்தல், மணமகட்கு மணமகனைக்கொண்டு கூறைகொடுப்பித்தல், மங்கல்யதாரணஞ் செய்வித்தல், ஒருவர்க்கொருவர் மாலையிடச்செய்தல்; அவ்விருவரும் தேனும் பாலும் பழமுஞ்சேர்த்த மதுவர்க்கம் ஒருவர்க்கொருவர்கொடுத் துண்ணுமாறுசெய்தல், மணமகனைக்கொண்டு மணமகளைச் சத்தமலையினுமாமென ஏழடி மிதிப்பித்தல், இருவரும் அக்கினியை வலம்வரச்செய்தல், கௌதமவிருடியின் பன்னியாகிய அகலிகையைக் களவிற் சேர்ந்த இந்திரன் அம்முனிவரிட்ட சாபத்தால் ஆயிரங்கண்ணனாயதூஉம் அவ்வகலிகை கல்லாயதூஉம் அறிவுறுத்தி நல்வழிப படுத்தற்பொருட்டு மணமகனைக்கொண்டு மணமகளை அம்மி மிதிப்பிக்கச்செய்தல், வசிட்டமுனிவரின் சன்மார்க்க விசிட்டத்தையும் அவரை யொருகணமேனும் பிரியாது பக்கத்திருந்து விளங்கும் அவர்மனைவியாகிய அருந்துதியின் கற்பின் விசிட்டத்தையும் அறிவுறுத்தி அவ்விருவரையும் நல்வழிப்படுத்தற் பொருட்டு அவ்வருந்துதி தரிசனை செய்வித்தல், இருவரையுங் கொண்டு பூரணாகுதிசெய்வித்தல், தாம் ஆசீர்வதித்தல், அவர்க்குரியவரைக்கொண்டு ஆசீர்வதிப்பித்தலாகிய அறுகரிசி தூர்ப பித்தலென்னு மிவைகளே இக்காலத்து மன்றற் கிரியைகளாம்.

அவ்வெண்வகை மன்றலுட் காந்தருவமன்றலே பண்டைக் காலத் தமிழர்க்குச் சிறந்ததா யுளதெனத் தமிழ்நூல்கள் அதனைமிக விதந்து கூறுகின்றன. அக்காந்தருவ மன்றல களவுங் கற்புமென இருகைகோ ளுடைத்து. மன்றலை விரும்பிப் புக்கிருந்தார்பலருள்ளும் ஒருவரைத்தெரிந்து மாலையிடுதலும் ஒத்த அன்புடையார் செயலாகலிற் காந்தருவத்தின்பாற்படு மெனக் கைக்கொண்டொழுகப்படுவதாயிற்று. இக்காலத்து மன்றற் கண்ணும் ஒருவர்க்கொருவர் மாலையிடுதல் அவ்வழக்கம் பற்றியேயாம்.

இன்பமென்னும் இயல்பினை யுடைத்தாகி உள்ளத்தின் கண்ணே நிகழும் ஒழுக்கம், அகத்திணையெனவும், புறம்பே

நிகழும் ஒழுக்கம் புறத்திணையெனவுங் கூறப்படும். ஒத்த அன்பினராய தலைவனுந் தலைவியும் உள்ளத்து உணர்வான் றுகரும் இன்பமாய அகத்திணை, ஒருதலைக்காமமாகிய கைக்கிளைத்திணையும் அன்புடைக்காமமாகிய ஐந்திணையும் பொருந்தாக் காமமாகிய பெருந்திணையுமென எழுவகைப்படும். எண்வகை மணத்தினுள்ளும் கைக்கிளைமுதல் ஆறுதிணையும் நான்கு மணப்பெறத் தாமென்றுமே நான்குமணம்பெறுதலாற் பெரிதாகிய திணையே பெருந்திணை. மடலேறுதல் தலைவற் கிளையளாகாது ஒத்த பருவத்தளாதல் அறிவழி குணனுடையளாதல் வலிதிற் சேர்தலென்னும் இந்நான்கும் பெருந்திணைக்கருத்தாம். கைக்கிளையாவது ஒருமருங்குபற்றிய கேண்மை. ஐந்திணைப் பாலதாம் அன்புடைக்காமமாவது அவ்வைந்திணையுட் களவென நிகழும் ஒழுக்கமேயாம்.

ஐந்திணையாவன குறிஞ்சி நெய்தல் பாலை முல்லை மருதமென இவை. குறிஞ்சிமுதலாம் அவ்வவ்வொழுக்க நிகழும் இடமும் அவ்வப்பெயர் பெறும். அவ்வைந்திணையும் முதல் கரு உரிப்பொருளென மூன்றுவகையா னுரைக்கப்படும். நிலமும் பொழுதுமென முதற்பொருள் இரண்டு கூற்றினை யுடைத்து. நிலமென்னும் முதற்பொருள் வரையுங் கடலுஞ் சுரமும் காடும் பழனமும் அவ்வவற்றைச்சார்ந்த இடமுமாகிய பத்து வகையினை யுடைத்து. பொழுதென்னும் முதற்பொருள் பெரும்பொழுதென்றுஞ் சிறுபொழுதென்றும் இரண்டுபகுதியினை யுடைத்து. பெரும்பொழுதாவது கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனிலென ஆவணிதொடக்கம் ஒவ்வொன்றிற் கிவ்விரண்டு மாதங்களாக ஆடியிறுதியாயுள்ள வருடத்தின் ஆறுபகுதியினை யுடைத்து. சிறுபொழுதாவது மாலை யாமம் வைகறை காலை நண்பகல் எற்பாடெனச் சூரியாத்தமனகால முதல் ஓரோவொன்று பப்பத்துநாழிகையளவை யுடையனவாக நாளின் ஆறுபகுதியினை யுடைத்து. இவற்றில், மருதத்துக்கும் நெய்தலுக்கும் ஆறுவகையிருதுவும், குறிஞ்சிக்குக் கூதிரும் முன்பனியும், முல்லைக்குக் காரும், பாலைக்கு இருவகை வேனிலும் பின்பனியும் உரிய பெரும்பொழுதெனவும், மரு

தத்துக்கு வைகறைகாலைகளும், குறிஞ்சிக்கு யாமமும், முல்லைக்கு மாலையும், நெய்தற்கு எற்பாடும், பாலைக்கு நண்பகலும் உரிய சிறுபொழுதெனவு மறிக.

கருப்பொருளென்பன தெய்வமும் உணவும் மாவும் மரமும் புள்ளும் பறையுஞ் செய்தியும் யாழும்முதலாயின குறிஞ்சிக்குத் தெய்வம், முருகவேள்; உணவு, மலைநெல்லுந் தினையும்; விலங்கு, புலியுங் கரடியுஞ் சிங்கமு பன்றியும் யானையும்; மரம், அகிலுஞ் சந்தனமுந் தேக்கும் வேங்கையுங் காந்தளும்; பறவை, கிளியும மயிலும்; பறை, தொண்டகப்பறையும் வெறியாட்டுப்பறையும்; தொழில், தேனழித்தலுங் கிழங்ககழ்தலுங் குன்றமாடுதலுங் கிளிகடிதலும்; யாழ், குறிஞ்சியாழ்; பண், குறிஞ்சி; தலைமகன், வெற்பன்; தலைமகள், குறத்தி; பூ, காந்தளும் வேங்கையும்; நீர், அருவிநீர்; ஆடவர், குறவர்; மகளிர், குறத்தியர்; ஊர், சிறுகுடி.

நெய்தற்குத் தெய்வம், வருணன்; உணவு, மீன்விலையும் உப்புவிலையும்; விலங்கு, சுறவும் முதலையும்; மரம், புன்னையுந் தாழையும்; பறவை, அன்னமும் அன்றிலும் நீர்க்காக்கையும்; பறை, மீன்கோட்பறையும் நாவாய்ப்பறையும்; தொழில், மீன்விற்றலும் உப்புவிற்றலும் அவற்றைப் படுத்தலும்; யாழ், விளரியாழ்; பண், செவ்வழி; தலைமகன், துறைவன்; தலைமகள், பரத்தி; பூ, தாழையும் நெய்தலும்; நீர், மணற்கேணி; ஆடவர், பரதர்; மகளிர், நுளைச்சியர்; ஊர், பட்டினம்.

பாலைக்குத் தெய்வம், துர்க்கையுஞ் சூரியனும்; உணவு, வழிபறித்தனவும் ஊர்க்கொள்ளையடித்தனவும்; விலங்கு, வலியழிந்த யானையும் புலியுஞ் செந்நாயும்; மரம், இருப்பையும் ஓமையும் பாலையும்; பறவை, கழுகும் பருந்தும்; பறை, போர்ப்பறையும் ஊரெறிபறையும் நிரைகோட்பறையும்; தொழில், நிரைகோடலுஞ் சூறையாடலும்; யாழ், பாலையாழ்; பண், பஞ்சுரம்; தலைமகன், விடலை; தலைமகள், எயிற்றி; பூ, மராமுங் குராமும் பாதிரியும்; நீர், வற்றினசுனை; ஆடவர், மறவர்; மகளிர், மறத்தியர்; ஊர், கொல்குறும்பு.

நூல்லைக்குத் தெய்வம், மாயோன்; உணவு, வரகுஞ் சாமை யும்; விலங்கு, முயலுஞ் சிறுமானும்; மரம், கொன்றையுங் காயா வுங் குருந்தும்; பறவை, கானங்கோழியும் மயிலும்; பறை, ஏறு கோட்பறை; தொழில், வரகுகளை பறித்தலும் நிரைமேய்த் தலுங் குழலூதலும்; யாழ், முல்லையாழ்; பண், சாதாரி; தலை மகன், குறும்பொறைநாடன்; தலைமகள், கிழத்தி; பூ, முல்லை யுந் தோன்றியும்; நீர், கான்யாறு; ஆடவர், இடையர்; மகளிர், இடைச்சியர்; ஊர், சேரி.

மருதத்துக்குத் தெய்வம், இந்திரன்; உணவு, நெல்; விலங்கு, எருமையும் நீர்நாயும்; மரம், வஞ்சியுங் காஞ்சியும் மருதும்; பறவை, நாரையும் நீர்க்கோழியுந் தாராவும்; பறை, மணமுழவும் நெல்லரிகிணையும்; தொழில், நெல்லரிதலும் வைக் கோல் துவைப்பித்தலும் களைபறித்தலும்; யாழ், மருதயாழ்; பண், மருதம்; தலைமகன், ஊரன்; தலைமகள், மனைவி; பூ, தாமரையுஞ் செங்கழுநீருங் குவளையும்; நீர், மனைக்கிணறும் யாறும்; ஆடவர், உழவர்; மகளிர், உழத்தியர்; ஊர், மூதூர்.

அவ்வத்திணைக்குரிய நிகழ்ச்சிகளே உரிப்பொருள். அவை யாவன, புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் அவற்றின் நிமித்தமுமென இவை. அவற்றுட் புணர் தலும் புணர்தனிமித்தமுங் குறிஞ்சி, பிரிதலும் பிரிதனிமித்த மும் பாலை, இருத்தலும் இருத்தனிமித்தமும் முல்லை, இரங் கலும் இரங்கனிமித்தமுந் நெய்தல், ஊடலும் ஊடனிமித்த மும் மருதம். முதல் கரு உரியென்னும் மூன்றுகூற்றவாகிய பொருளும் தமக்குத்தமக்கு உரிய திணையோடுகூடி இலக்கண முறையானே வாராது பிறவற்றிற்கு உரிய திணையோடுகூடி மயங்கிவருதலு முரியவாம்.

அறமும் பொருளுமென்று சொல்லப்படுமியல்பினை யுடைத் தாய்ப் புறம்பே நிகழு மொழுக்கமாகிய புறத்திணை, நிலம் பெறுவனவாய குறிஞ்சியும் பாலையும் முல்லையும் மருதமும் நெய்தலுமென்னும் அகனைந்திணைக்குமுறையே புறனாய வெட் சியும் வாகையும் வஞ்சியும் உழிஞையும் தும்பையுமென்னும்

ஐந்திணையுடனே நிலனின்றி அந்நிலத்திடை நிகழும் பெருந்திணையுங் கைக்கிளையுமென்னும் அகத்திணை யிரண்டிற்கும் முறையே புறனாய காஞ்சியும் பாடாணுமென்னும் இரண்டு திணையுங் கூடத்தொகுதலால் ஏழுகூற்றதாம். பகைவர்களுடைய பசுக்களைக் கவர்தலும் கவர்ந்த பசுக்களை மீட்டலுமாம் வெட்சி, பகைவரை வெல்லுதல் வாகை, பகைவருடைய நாட்டைக் கைப்பற்றவெண்ணி அவர்மேற் போர்க்குச்சேறல் வஞ்சி, பகைவருடைய மதிலை வளைத்துக்கோடலும் தம்மதிலைக் காத்துக்கோடலும் உழிஞை, தனது வலியினை உலகம் மீக்கூறுதலை தனக்குப் பெறுப்பொருளாகக் கருதி மேற்சென்ற வேந்தனை அங்ஙனம் மாற்றுவேந்தனும் அவன்கருதிய மைந்தே தான் பெறுபொருளாக எதிர்சென்று தலைமையைத் தீர்க்குஞ் சிறப்பினையுடையது தும்பை. அவற்றுள் மண் இடையீடாகப் பொருதலே வஞ்சி, மதில் இடையீடாகப் பொருதலே உழிஞை, மைந்து பொருளாகப்பொருதலே தும்பை. போர்க்குவந்த பகைவர்க்கு எதிர்சென்று ஊன்றுதல் காஞ்சி, ஒருவனுடைய கீர்த்தி வலிமை கொடை முதலியவற்றை ஆராய்ந்து சொல்லுதல் பாடாண். நிரைமீட்டல் கரந்தையெனவும் மதில்காத்தல் நொச்சியெனவுங் கூறப்படுவதுமுண்டு. வெட்சிமுதலாயவற்றிற்கு அவ்வப் பூமாலை சூடுதலு முரித்து.

அகத்திணைப்பாலதா மின்பமாகுங் களவுங் கற்புமென்னுங் கைகோளிரண்டனுட் களவாவது பிறப்புமுதலியவற்றாற் றம்முளொப்புமை யுடையராய தலைமகனுந் தலைமகளும் பிறர் கொடுப்பவு மடுப்பவுமன்றிப் பால்வகையாற் றாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்துவருவது. ஏகதேசத்துப்புணர்தலும் கொடுப்பாரு மடுப்பாருமின்றிப் புணர்தலும் ஒத்தகுலத்தினராதலும் ஒத்த அன்பினராகலுமென்னு மிவற்றாற் காந்தருவர்வழக்கம் போறலின் இக்களவு காந்தருவ மெனப்பட்டது. குவளைப்பூப் போலுங் கண் ணென்றால் நீலமாத்திரை யொக்கும், மற்றெவ்வாப்புடை பெரிதாமாறுபோல, ஈண்டுப் போறலென்பது சிறிதொத்துச் சிறிதொவ்வாதொழிவது. பிறப்புங் குடிமையும் ஆண்மையும் ஆண்டும் உருவும் இயற்கையன்பும் நிறையும் அருளும் உணர்வுந் திருவுமென்னும் பத்தானுமொத்த கிழ

வனுங் கிழத்தியும் சென்ற பிறவிகள் பலவற்றினும் ஒருவரை யொருவர் இன்றியமையாராய்ச் செய்த நல்வினை காரணமாக அன்பான் ஒருபொழுதுவயிற் றமியராய்க் கூடுங் கூட்டமே களவொழுக்கம் அவர்தம்மைக் கிழவனுங் கிழத்தியுமென்றது சென்ற பிறவிகள்பலவற்றினுங் கிழமையுடையராதல்பற்றியே. பிறப்புமுதலிய பத்தனுள் ஆண்மையாவது தலைமகற்குக் கட்புலனாகும் ஆள்வினைத்தன்மையும் தலைமகட்குக் கட்புலனாகு மமைதித்தன்மையுமாம்; ஆண்டாவது தலைமகற்குப் பதினாறாண்டுந் தலைமகட்குப் பன்னீராண்டுமாம்; உருவாவது தலைமகற்கு அறிவு மாற்றலும் கொடையும் புகழும் நண்பும் பண்பு முதலியவாய் மேம்பட்டுநிகழுந் தலைமைக்குணமாகிய பெருமையும் அறிவுத்திட்பமாகிய வுரனுமாம், தலைமகட்குக் காமக் குறிப்பு நிகழ்வுழிப் படிவதோ ருள்ளவொடுக்கமாகிய நாணும் செவிலியர் கொளுத்தக் கொண்டது விடாமையாகிய மடமும் அன்பு காரணமாகத் தோன்று முட்காகிய அச்சமுங் கண்டறியாத கண்டுழி மனங்கொள்ளாமையாகிய பயிர்ப்புமாம். தமியராதலென்பது தம்முணர்வின ரல்லராதலெனவும் பொருள்படும். அஃதாவது தலைமகற்கு எப்பொருளாயினும் அப்பொருட்கண் நின்று அம்மெய்ம்மையை உணர்வதாய அறிவும், காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கமாகிய நிறையும், ஒருபொருளை ஆராய்ந்து உணர்தலாகிய ஓர்ப்பும், கொண்ட பொருண் மறவாமையாகிய கடைப்பிடியுமென்னும் நான்கு குணமும், தலைமகட்கு நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னும் நான்குகுணமும் வேட்கையான் மீதூரப்பட்டுப் புனலோடு வழிப புற்சாய்ந்தாற்போலச் சாய்ந்துகிடக்கு மென்பது.

இவ்வைந்திணைக்களவு, ஒத்த அன்பான் ஒருவனு மொருத்தியுங் கூடுகின்ற கூட்டத்திற் பிறந்ததாய், அக்கூட்டத்தின் பின்னர் இவ்வா றிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்வதாயுள்ள வாம்பிலின்ப மெனற்பாலது. இந்திரனையும் அகலிகையையும்போன்று இருவருங்காந்த வுள்ளத்தோடு எதிர்ப்பட்டுச் சேர்ந்து பிறர்க்குரிய பொருளை மறையிற்கொண்டு சபிக்கவுங் கைகால் குறைக்கவும்பட்டுப் பழி

யும் பாவமுமாக்கி நரகத்துஞ் செல்லுதற்கேதுவாய வினை யுலகத்துக் களவுபோலாது, இது மேன்மக்களானும் புகழப்பட்டு ஞானவொழுக்கத்தோடு ஒத்தவியல்பிற்றாய்த் துறக்கவீடுகளை முடிக்குஞ் சிறப்புடைத்தாம்.

இயற்கைப்புணர்ச்சியும், அப்புணர்ச்சி நிகழ்ந்த நிலக்களத்தைப் பின்னர்த் தலைப்பெய்து புணரும் புணர்ச்சியாகிய இடந்தலைப்பாடும், அல்லது பாங்கற்குச்சொல்லி அவனாற்கூடுதலாகிய பாங்கற்கூட்டமும், தோழிவழிநின்று குறைமுடித்துக்கோடலாகிய பாங்கியிற்கூட்டமுமெனக் களவென்னுங் கைகோளிற் புணர்ச்சி நான்குவகையினை யுடைத்து. அசுரமும் இராக்கதமும் பைசாசமுமாகிய சிறப்பில்லாக் கைக்கிளைபோலன்றிச் சிறந்த ஐந்திணையிடத்துக் கைக்கிளையாவது காமநுகர்தற்கு அமைந்த இளமைப் பருவத்தளாகிய தலைமகளிடத்து உண்டாகிய குறிப்பினைத் தான் அறியுமளவும் அவளைத் தலைமகன் அடாதுநின்று தன்வழித்தாகிய நெஞ்சினொடு சொல்லுதலாம். அதுதான் காட்சி ஐயந்துணிவு குறிப்பறிதலென நான்குவகைப் படும்.

பலபிறப்பினும் ஒருவர்க்கொருவர் உரிமைபூண்டு காமம் நுகர்ந்த கிழவனுங் கிழத்தியுமாகிய இருவரையும் இப்பிறப்பினும் ஒன்றுவித்து உயர்தற்கேதுவாகிய ஊழினது ஆணையாலே அவ்விருவரும் பொதுவாகிய ஒருநிலத்தும் ஒருவர்க்குச்சிறந்த வேற்றுநிலத்தும் தனியிடத்து எதிர்ப்பட்டு ஒருவரையொருவர் காண்டலே காட்சி. அவர்தாம் எங்ஙனம் தனித்துக்காண்பர்? அவர்தாம் முட்டிச்செல்வத்த ராதலிற் றலைவனுங் கறங்குங்கந்துகத் தேரேறிப் போத்துங் கடுங்கண்யானையுந் தறுகட்பன்றியுங் கருவரையும் இருநிலனும் பெருவிசும்பும் அனையார் ஆளிமொய்ம்பின் அரிமான்றுப்பினர் பற்பன்னூறாயிரவர் கூர்வேலிளைஞர் தற்சூழ வேட்டைவிருப்பாற் செல்வான்; தலைவியும் உடன்பிறந்து உடன்வளர்ந்து நீர் உடனாடிச் சீர் உடன்பெருகி ஓல் உடனாட்டப் பால் உடனுண்டு பல் உடனெழுந்து சொல் உடன்கற்றுப் பழமையும் பயிற்சியும் பண்பும்

நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பன்னூறாயிரவர் கண்ணும் மனமுங் கவரும் ஒண்ணுதன் மகளிர் தற்சூழத் தாரகைநடுவட் டண்மதிபோலப் பொழில் விளையாட்டு விரும்பாற் செல்வாள். அங்ஙனஞ் சென்றாள் தனித்துக்காண்டன் முடியாதெனின், முடியும்; என்னை? அவளும் ஆயங்களும் பொழிலிடம்புகுதலும் விளையாட்டு விருப்பினால் ஒருவர் ஒருவரின்முன்னர்த் தழை விழையத்தக்கன தொடுத்துமென்றுங் கண்ணி தண்ணறுநாற்றத்தன செய்துமென்றும் போது மேதக்கன கொய்துமென்றும் மயிலொடு மாறாடுதுமென்றுங் குயிலொடு மாறுகூறுதுமென்றும் அருவியாடி அஞ்சுனை குடைதுமென்றும் வாசமலர்க்கொடியி னூசலாடுதுமென்றும் பரந்து அப்பாலார் இப்பாலாருள்ளாள் கொல்லோவென்றும் இப்பாலார் அப்பாலாருள்ளாள் கொல்லோவென்றும் இவ்வகை நினைத்துப் பிரிவரென்க. இவ்வகை தமியளாகப் பிரிவரோவெனின், எட்டியுஞ் சுட்டியுங் காட்டப்படுங் குலத்துள்ளாளல்லா ளாதலானும் பான்மை அவ்வகைத் தாதலானும் பிறவாறு நினையார் பிரிவரென்க. ஆயின் இவ்வகைப்பட்ட ஆயத்திடை மேனாட்பிரிந்தறியாதாள் தமியளாய் நிற்குமோவெனின், நிற்கும்; தான் பயின்ற இடமுந் தன்னையத்தோடு ஒக்கு மாதலானென்க. யாங்ஙனம் நிற்குமோவெனின், சந்தனமுஞ் சண்பகமுந் தேமாவுந் தண்பலாவும் ஆசினியும் அசோகமுங் கோங்கமும் வேங்கையுங் குரவமும் விரிந்து, நாகமுந் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பரவைஞாழலும் பைங்கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கினொடு முகைதிறந்து, வண்டறைந்து தேனார்த்து வரிக்குயிலினம் வரிபாடச் சிறுதென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில்துன்றி, அவணதோர் மாணிக்கச் செய்குன்றின்மேல் விசும்புதுடைத்துப் பசும்பொன்பூத்து வண்டு துவைப்பத் தண்டேன் றுளிப்பதோர் வெறியுறும் நறுமலர் வேங்கை கண்டாள். கண்டு, பெரியதோர் காதற்கழிகூரத் தன் செம்மலர்ச் சீறடிமேற் சிலம்புகிடந்து சிலம்புபடைப்ப அம்மல ரணிகொம்பர் நீண்டக்கற்பதென் கடந்துசென்று நறுவிய

வேங்கை நாண்மலர் கொய்தாள். கொய்தஇடத்து மரகதம்
விளிம்படுத்த மாணிக்கச் சுனைமருங்கின் ஒரு மாதவிவல்லி
மண்டபத்திற் போதுவேய்ந்த பூநாறு பொழில் நிழற்றக், கடிக்
குருக்கத்திக் கொடிப்பிடித்துத் தகடுபடு பசும்பொற்சிகரங்
களின் முகடுதொறும் ஞான்றுவந்து இழிதருமருவி பொன்
கொழித்து மணிவரன்றி மாணிக்கத்தோடு வயிரம் உந்தி
அணிகிளர் அருவி ஆடகப்பாறைமேல் அதிர்குரன்முரசின்
இரட்ட, வண்டுந் தேனும் யாழ்முரல, வரிக்குயிலுங் கிளியும்
பாடத், தண்டாது தவிசுபடப் போர்த்ததோர் பளிக்குப்பாறை
மணித்தலத்துமிசை ஆலவட்டம் விரித்தாற்போலத் தன்
கோலக்கலாபம் விரித்து இளஞாயிற்றின் ஒளிர்கதிர் எறிப்ப
ஓர் இளமயில் ஆடுவதுகண்டு நின்றனளாக. அப்பாற் றலை
வனும் பற்பன்னூறுயிரவர் கூர்வேலிளைஞரொடு குளிர்மலைச்
சாரல் வேட்டம்போய் விளையாடுகின்றான், ஆண்டெழுந்ததோர்
கடமானின்பின் னோடிக் காவலிளைஞரைக் கையகன்று நெடு
மான்றேரொடு பாகனை நிலவுமணற் கான்யாற்றில் நிற்கப்
பணித்துத், தொடுகழல் அடியதிரச் சுருளிருங்குஞ்சி பொன்
னாணிற் பிணித்துக், கடிகமழ் நறுங்கண்ணிக்கண் வண்டு மண
மயர, அஞ்சாந்தின் நறுநாற்றந் தண்பொழிலிடைப் பரந்து
நாற, வரிசிலை அடுகணை ஏந்தி வடிவுகொண்ட காமன்போலச்
சென்று அவள் நின்ற இரும்பொழில் புகும். அஃது யாங்ஙன
மோவெனின், கீழ்த்திசைக் கடலின்கணின் றெறிந்த ஒருகழி
மேற்றிசைக் கடலின்கணுள்ள ஒருநுக ஒருதுளைக்கட்சென்று
கோத்தாற்போலவும், வெங்கதிர்க் கனலியுந் தண்கதிர் மதியமுந்
தங்கதிவழுவித் தலைப்பெய்தாற் போலவுந் தலைப்பெய்து ஒருவர்
ஒருவரைக் காண்டல் நிமித்தமாகத் தமியராவர்.

ஆயநீங்கத் தமியளாய்நின்ற தலைமகளை இளையர்நீங்கத்
தமியனாய்வந்து கண்ணுற்ற தலைமகன் தன்னுணர்வினனல்ல
னாகலின், ஈண்டுத் தோன்றுகின்ற உரு இப்பொழிற்க ணுறை
வாரோர் தெய்வமகளோ? அன்றி யொரு மயில்விசேடமோ?
அன்றி யொரு கனவிய குழையையுடைய மானுடமாதரோவெ
ன்றையுறுவன்; தலைமகளுந் தன்னுணர்வினளல்லளாகலின்,

ஈண்டுத் தோன்றுநின்ற இவன் கடம்பமர் கடவுள்கொல்லோ? அன்றி இரியக்கன்கொல்லோ? அன்றி மக்களுள்ளான்கொல்லோ வென்றையமுறுவள். அங்ஙனம் ஐயமுற்ற அத்தலைமகன் கால்கணிலத்திற் றோய்தலும் கண்களிமைத்தலும் எழுதிய வல்லியுந் தொழிற்புனைகலனும் வாடியமலருங் கூடியவண்டும் அச்சமும் வியர்த்தலும் கூறைமாசுணலும்முதலிய வேதுக்களானே அவ்வுருமானுடமாதராதறெளிவன்; அத்தலைமகளுங் காலகணிலத்திற் றோய்தன்முதலாய வேதுக்களானே அவனை மக்களுளுள்ளானெனைத் தெளிவள். அங்ஙனந் தெளிந்தவர் பொதுநோக்கானே வனப்புநோக்கி, அவள்வனப்பு அவனையும் அவன்வனப்பு அவளையும் வருத்தமுறுவிக்க இருவரும் வருந்துவர். வருத்தமுற்ற வத்தலைமகன் அவளுளப்பாட்டுக்குறிப் பினைப், பொதுநோக்கொழியத் தான் அவளை நோக்குங்கால் அவள் எதிர்நோக்காது நாணியிறைஞ்சுதலானும், நோக்காக் கால் அவடான் தன்னை அன்போடுநோக்கி மகிழ்தலானும், தன்கண் நோய்செய்யும் நோக்காகும் காமக்குறிப்பினை வெளிப் படுக்கின்ற நோக்கும் அந்நோய்க்கு மருந்தாகும் அற்புநோக்கு மாகிய அவ்விருநோக்கானும் அறிந்தனன். எங்ஙனமறிந்தன னெனின், அவன் தான் நோக்கியவழி அவள் ஒன்றனையுட் கொண்டு நாணியிறைஞ்சியும் நோக்காவழி அன்புடனுற்று நோக்கியும் வருதலாற் களவுகொள்ளுமென்று தெளிந்தன னாகலானென்க. இங்ஙனமே உள்ளப்புணர்ச்சி நிகழுங்காறுங் கைக்கிளையாம், அதன்பின்னர் அகத்திணையாம். உள்ளத்தாற் புணர்தலும் மெய்யுற்றுப் புணர்தலுமாகிய இயற்கைப்புணர்ச்சி முதலாக வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரித லீறாகச் சொல்லப்படும் பதினேழும் களவென்னுங்கைகோளிற் குரியன. அவை பற்பலதுறையவாக நூல்களிடத்து விரித்துக் கூறப் பட்டுள்ளன.

இயற்கைப்புணர்ச்சி புணராதமுன்னும் புணர்ந்தபின்னும் ஒத்த அன்பினனாய்நின்ற தலைமகன், இவ்வொழுகலாறு பிறர்க் குப் புலனுமாக இவள் இறந்துபடுமென்றெண்ணிப் பிரியத் துணிந்து; கருங்குழற்கற்றை மருங்கு இருந்தி, அளகமும்

நுதலும் தகைபெற நீவி, ஆக்முந் தோளும் அணிபெறத் தைவந்து, குளிர்ப்பக் கூறித், தளிர்ப்ப முயங்கி, நின்னிற் பிரியேன் பிரியி னாற்றேனெனக் கூறும். இவ்வகைகேட்ட தலைமகள், பிரிவென்பதும் ஒன்று உண்டுபோலுமெனக் கலங்கிக், கார்மருங்கின் மின்னுப்போலவும் நீர்மருங்கிற் கொடிப்போலவும் தளிரும் முறியுந் ததைந்து, குளிரும் நளிரும் கவினியெழாநின்றதோர் கவின்பெறு கொடிப்போலுங் காரிகை கண்ணுடிமண்டிலத்து ஊது ஆவிபோலக் காண ஒளிமழுங்கிக், கனன் முன்னிட்ட மெழுகுப்பாவைபோல மனமுருகிப் பசந்துகாட்டினாள். காட்டியும், யான் ஆற்றுவிடின் எம்பெருமான் இறந்துபடுமென ஆற்றினாள். அது நீர்மையாயத் தலைமகன்கண்டு, இவள் எவ்விடத்துந் தன்றன்மையென்பது ஒன்று இலளே, என்றன்மையளேபோலுமெனப் பெரியதோர் கழியுவகை மீதூர அணித்து எம்மிடமென வன்புறை கூறும். அதுகேட்ட தலைமகள், எப்பெருமான் அணித்தெம்மிடமென்கின்றாதல், அணியதற்கு அருமையில்லை என்கின்றானும், அதனாற் போந்தபொருள் பலகாலுங் கேட்கவுங் காணவுமா மென்றவாறுபோலும், அதனால் எம்பெருமான் என்னைக் காண்டற்குங் கேட்டற்கும் ஆற்றியுளனும்போலுமென்று ஆற்றுவாள். ஆற்றுதலை யறிந்த தலைமகன் அவளைப் பிரிவான்.

ஆற்றிப்பிரிந்த தலைமகன் அவளைத் தமியளாக நீங்குமோவெனின், நீங்கான். அவள் தன்னைக் காணுமைத் தான் அவளைக் காண்பதோர் அண்மைக்கண் மழைக்கொண்டலுள் மின்னுப்புக் கொளித்தாற்போல ஒரு தனிப்பொதும்பரிடை மறைந்துநிற்குமென்பது. அங்ஙனநிற்பத் தலைமகளுந் தன் குழற்கற்றைப் பொறையுங் கோதையுந் துயல்வரக்,கொடையிடைநடுவு தளரப், பரந்து தூயதுகி லசையப், பைம்பொற்றோடு மின்னுப்படைப்ப, அரவவண் டறையுந் தாமரை அகவிதழ்புரையு மஞ்செஞ்சீறடி மேற் செம்பொற்சிலம் பரற்ற, அன்னம்போல மென்மெல ஒதுங்கிக், காமவல்லிக்கொடியுங் கற்பகக்கொழுந்தும் நடப்பதென நடந்துசென்று, அப்பனிவரைச்சார ருகின்று ஒரு மணியருவிமருங்கு ஓஅறுத்த பளிங்குவிளிம்படுத்த நீலப்

பைஞ்சுனை மருங்கினதோர் மரகதச் சிலாவட்டத்தயல் மாணிக்கச் சதுரப்பாறைமேற் றூதுதவிசுவிளிம்படுத்த மாதவிப்பந்தர்ப் போதுவேய்ந்த பூநாறு கொழுநிழ லிருந்தாள். இருந்தாளாகத், தாதுந் தளிரும் போதும்மேதக்கனவற்றாற் குறுங்கண்ணியும் நெடுங்கோதையும் விரவுத்தழையுஞ் சூட்டுக்கத்திகையும் மொட்டுவலயமும் பிறவுமாகப் புனைந்து, வண்டுந் தேனும் புடைமருட்ட அடியுறையென வேந்திப் பிரிந்தவாயம் பெயர்ந்தெய்திப் போற்றும் பல்லாண்டுங் கூறிநின்றார். நிற்ப, அவளுந் தாரகைநடுவட் டண்மதிபோல்வதோர் பொலிவினளாய்க் காட்டினாள், காட்டினாளைத் தலைமகன் கண்டு, இவளை யான் எய்தினேனெனக் கருதினன், எய்தியதுண்டேற் கனவேபோலும்; நனவேயாயினும் இவள் எனக்கு எய்தற்கு அரியளாமென ஆற்றானாயினான். அவ்வாற்றாமைத்தன்மை ஆற்றுவதொன்றைப் பற்றும். ஆற்றுவது யாதோவெனின், தான் எய்திய ஆரணங்காகிய அவ்வுருவினை நினைந்து, தான் எய்தும உபாயமாவது தன் காதற்றோழனை இதுகொண்டு முடிக்குங்கொல்லோ வென்பது. அது பற்றுக்கோடாக ஆற்றி நீங்குமென்பது.

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் அதன்பின்னே தெருண்டு வரைதறலே. என்னை? வழிபோகாநின்றானொருவன் பிழைத்துச்சென்றானுஞ் சாணகமானும மிதித்தவிடத்துக் காலைக் கழீஇப் பாதுகாத்துத் தன் இலலம் புக்கதுபோல, அவனும் ஞானவொழுக்கக் குணங்களின்வழியே செல்லாநின்றான் இழுக்கினால், அவ்விழுக்கினை இழுக்காவதறிந்து அதன்கணின்று மீடன் மிக்கதாகலான். மீண்டுநிற்கிலானெனின் பிற்றைஞான்று தன்பாங்கனாற் குறியிடத்துத் தலைப்பெய்தலும் பாங்கனையின்றியே தனியாளை இடத்தெதிர்ப்படுதலுமென அவ்விரண்டில் ஒன்று நிகழும்.

தெய்வம் இடைநிற்பப் பான்மையால் உய்க்கப்பட்டு இயற்கைப்புணர்ச்சிபுணர்ந் தாற்றுவித்துப் பிரிந்த தலைமகன், தன்னைக் காணாத என்னிலைமைநினைந்து ஆற்றாளாங்கொல்லோவெனவும், ஆற்றாளாகின்றாள் தன்துவேறுபாட்டைப் புறத்தார் அறி

யாமை மறைக்குமா றறியாது வருந்துங்கொல்லோவெனவும் இவை முதலாயினநினைந் தாற்றும். ஆற்றுநிலைமையானப பிற்றைஞான்று சிறுகாலைதலைப்படும் பாங்கன் தலைப்பட்டு அடியிற்கொண்டு முடிகாறுபநோக்குவான் புதையிருளிரியல் போகப பொன்றுழருவி மணிநெடுங்கோட்டுதயமெனவணிக் குப் மணிவரையுச்சி உலகுதுயிலெபெயர்த்துத் தோன்றிய வளரொளி இளஞாயிற்றின் வனப்பொழித்த திருவொளி மழுங்கியதுநோக்கி, என்னைகொல்லோ எம்பெருமாற்கு இற்றைவேறுபாட்டுவாட்டமென வினவுப இவ்வகை தலைமகற் முறது கடைபிடித்து வினவிய பாங்கற்கு, நெருநல் இவ்விவ்வளையாரொருவரைக் கண்டேற்கு என்னுள்ளம் பள்ளத்துவழி வெள்ளம்போல ஓடி இவ்வகைததாயிற்றென்று தலைவன் கூறக், கேட்ட அபபாங்கன் எம்பெருமான் நின் உள்ளம் அறிவு நிறையோர்ப்புக் கடைப்பிடியின்வரைத்தன்றிக் கைமிக்கோடுமேயெனின் நின்னைத் தெருட்டபாலநீர்மையார் உளரோ நீ பிறரைத் தெருட்டினல்லது? அபபெற்றியாய நீ இன்னதோரிடத்து இன்னதோருருவுகண்டு என்னுணர்வு அழியப்போந்தேனென்றல் தக்கின்றெனக் கழறும். கழறியும் தலைமகன தாற்றாமையிற் கழற்றெதிர் மறுத்துரைபபக்கேட்ட பாங்கன், எவ்விடதது எத்தன்மைத்து நின்றாற் காணப்பட்ட உருவென வினவும். வினவியதுகேட்டுக் கோடையாற் றெறபபட்டு வாடிநின்ற சநதனமரம் மழைபெற்றுத் தளிர்த்தாற்போலப பெரியதோர் கழியுவகை மீதூர அவனை எய்த்தினைபோல இன்னவிடதது இததன்மைத்து என்றாற் கான பபட்ட உருவென உணர்த்துப. உணர்த்தப்பட்ட பாங்கன் நீ இனையையாகல என்னினுவதுண்டேற் காண்புலென்று தலைமகனை யாற்றுவித்து அவன்சொன்ன இடம்நோக்கிச் செல்வான்.

தலைமகளும் பிற்றைஞான்று தன் ஆயவெள்ளத்தோடும் வந்து தான் விளையாடுமிடம் புகுதலுமுடையாள், நெடுநலைநாளால் நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேனென்று சொல்லினுன் ஆயத்துள்ளேன் வருவான்கொல்லோவென்னும் பெருநாணினுனும், ஆற்றாமையான் இறந்துபட்டான்கொல்லோவென்னுந் தன் அச்

சத்தினும் மீதூரப்பட்டுத் தன்றன்மையளன்றித் தன்னுய வெள்ளம் புடைபெயருமாறு புடைபெயர்ந்துவருகின்றாள், ஒரு நலநாளாற் றலைமகனை வழிபட்ட இடமெதிர்ப்பட்டுத் தலைமகனைக் கண்டாளேபோன்றாள். அவ்வாறு நிற்ப, ஆயங்களும் ஒருநலநாளாற் பிரிந்தாற்போல விளையாட்டு விருப்பினாற் பிரியும். பிரியநின்றாள் எப்பெற்றி நின்றாளோவெனின், ஆயத்துள்ளே வருவான்கொல்லோவென்னும் நாணிங்க இறந்துபட்டான்கொல்லோவென்னும் அச்சத்தின்கண் மீதூரப்பட்டு நின்றாள். நின்ற நிலைமைக்கட் பாங்கன் சென்று அவள் தன்னைக் காணுமைத் தான் அவளைக் காண்பதோர் அண்மைக்கட் கண்டு, இவ்விடமே அவனாற் காணப்பட்ட இடமும் இவ்வுருவே அவனாற் காணப்பட்ட உருவுமெனத் துணியும் துணிந்து, இவ்வுருவினைக் கண்ட எம்பெருமான் ஆற்றுதற்குக் காரணம் என்னை? பெரியார்க்கே ஆகாதே! அரியனதாங் கற்றுவல்லன் அவனாகலான் ஆற்றினான். பிறராயின் இறந்துபடும். இறந்துபடாது என்காறும் வந்த இருந்துணைப் பெருந்தக்காளை யான் பெரியதோர் இடனன்றிக் கழறினேனென நினைக்கும். நினைந்து ஆற்றானையும் இறந்துபடானாயினான், அவனையும் அஃதெய்துவிக்குந் திறமென்னைகொல்லோ வென்பதனான் ஆற்றியுளனாய்த் தலைமகனைச் சென்றெய்தி, நீயாகாதே இவ்வகை மேதக்கன வெய்தற்பாலாயெனத், தலைமகனும் அவன்காட்டிய அவ்விடம் நோக்கிச்சென்று தனியளாய்நின்ற தலைமகளை யெதிர்ப்படும். இங்ஙனமே பாங்கற்கூட்டம் நிகழின், யான் இவளை எய்திற்று விதியானே, இன்னும் அவ்விதி கைதருமேற் காண்பலெனப் பாங்கற்குச் சொல்லாதே தான் முன் எதிர்ப்பட்ட இடம் நோக்கிச் செல்லுதலாகிய இடந்தலைப்பாடு நிகழாது; இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற்கூட்டம் நிகழாது.

பாங்கனுதல் தமியாளை இடத்தெதிர்ப்பட்டாதல் சேர்ந்த தலைமகன் அதன்பின்னே தெருண்டு வராத றலை. தெருளானாயின், இத்தழை நல்லஇக்கண்ணி நல்லவெனக் கையுறை பாராட்டிச்சென்று பணிந்தமொழிகளாற் றாழ்மொட்டு இரத்தலுங் குறையுறுதலுஞ் செய்துநிற்றல் அவற்குரித்து. இயற்கைப்

புணர்ச்சி புணர்ந்தபின்னர்த் தன்னை அவள் காணுமைத் தான் அவளைக் காண்பதோர் அணுமைக்கண் நின்றானாக, ஆயவெள்ளத்துள் மற்றையாரெல்லாந் தலைமகட்குச்செய்யும் வழிபாடும் இவள் விசேடத்தாற் செய்யும் வழிபாடும் எல்லார்க்குந் தலைமகளருளிச்செய்யும் அருளிச்செய்கையும் இவட்கு விசேடத்தாற்செய்யும் அருளிச்செய்கையும் கண்டமையான் இவளாமிவட்குச்சிறந்தாள் இதுவும் எனக்கோர் சார்பென்பதனையுணர்ந்தான், அத்தோழி தழையுங் கண்ணியுங் கோடற்பொருட்டாக வேறோரிடத்துத் தனியளாய் நின்றநிலைமைக்கட் சென்று குறையுடையார்செய்யுஞ் செய்கை செய்தும் இக்குறை இன்றியமையாதெனப்படப் பசந்து மொழிதவன்; அல்லது இரந்துகுறையுறாது அத்தோழியுந் தலைமகளும் ஓரிடத்தராய்க் கூடியிருக்கும் அன்னதோர்பதம் நோக்கிச்சென்று, எஞ்ஞான்றும் அந்நிலத்துச் சென்றறியாதானும் அவரைக் கண்டறியாதானும்போல, நீர் எவ்வூரீர் என்ன பேரீர் இங்கே சிலமாப் போந்தனவுளவோ இளையார் போந்தாருளரோ யானை போந்தனவுளவோவென் றித்தொடக்கத்தன வினவித் தோழிமதியுடம்படுத்தற்கு முரியன்.

இயற்கைப்புணர்ச்சிபுணர்ந்த பிற்றைஞான்று தலைமகள் கண்சிவப்பும் நுதல்வேறுபாடும் தோழி கண்டு, எம்பெருமாட்டிக்குப் பண்டைத்தன்மை இன்றாதலில் இவ்வேறுபாடு ஏற்றினுயிற்று எனக்குச் சொல்லிலாயென, அவள் நெருநல் நின்னின் நீங்கி மேதக்கதோர் சுனைகண்டு ஆடினேன், நெடுங்காலமும் நின்று ஆடினேற்கு ஆயிற்று, ஆகாதே கண்சிவப்பு நுதல்வேறுபாடெனத், தோழி சுனையாடினார்க்கெல்லாம் இக்காரிகை நீர்மை பெறலாமேயெனின் யானும் ஆடிக்காண்கேனென்னும். எனக், கேட்டுத் தலைமகள் தலைசாய்த்து நிலங்கிளையா நின்றனள். அந்திவான்கட் செங்கோட்டு மதர்வைக் குழவித்திங்களைத் தோழிகண்டு தான் தொழுது நீயுந் தொழுதகாணெனக், கற்பழியுமென்பதனாற் றலைமகள் தொழாதுநிற்கும். இவை தோழி தலைமகளை நாடுணர்தல்; நடுங்கநாடுதல், நம்புனத்து ஒருநாள் அணைந்த கோட்டத்தோர்களிறுண்டெனல்; அதுகேட்டுத் தலை

மகள் பலகாலும் இவ்விடத்துவந்து இயங்குவான் எம்பெருமா ளுதலான் அவனைக் களிறு ஏதஞ்செய்ததுகொல்லோவென்று நடுங்குவாள். நாணவும் நடுங்கவும் நாடுதல் அகத்திணை யிலக் கணமன்றாகலின், அவளது வேறுபாடுகண்டு தெய்வத்தினு ளாயிற்றுக்கொல்லோ மற்றொருவாறாயிற்றுக் கொல்லோவெனத் தோழி ஐயுற்றுநிற்பதே பொருந் தும். அவன் தழையுங் கண்ணியுங்கொண்டு பின்னிலைமுனியாது நிற்ப, ஒக்கும் இவன் இரந்து பின்னின்றது இவள்காரணமாகப் போலுமென உணரின், அவளது பெருமையோடு அது மாறு கொள்ளுமாகலின், இவன் இரந்து பின்னிற்கின்றது எற்றிற் குக்கொல்லோவென உணர்வதே பொருந்தும். அவ்வைய வுணர்வோடு நின்றாள் இருவரும் உள்வழி அவன் வந்துநின்று பதியும் பெயரும் பிறவும் வினவத், தோழி அவள் காவு உள் நாடி உணர்ந்து துணிவதாயிற்று. தோழி சொல்லாடாமை கண்டு, இன்றினூங்கு எல்லாம் இக்கருமம் நின்னான் முடியுமெ னக் கருதி வந்து உழந்தேன், நின்னான் முடியாமை உணரப் பட்டது, பட்டமையால் இனி மடலூர்ந்தானும் வரைபாய்ந்தா னும் இனிவ தன செய்தாயினும் முடிப்பல், இதனை யின்றி யமையே னாகலாமெனத் தலைமகன் கூறும். அதுகேட்டுத் தோழி நாண்கெட அவனது ஆற்றாமைத்தன்மையைத் தன்கட் கொண்டு, அரியன தாங்கலன்றே பெரியாரது பெற்றிமை, நீயிர் இதன்றிறத்தின ராகன்மின், யானும் அதன்றிறத்து என்னின் ஆவதுண்டேற் காண்பனென அவனது ஆற்றாமைநீங்கும். அது நீங்கத், தலைமகனது நிலைமை நோக்கி, மடலேறுவன் என்றீரால், அம்மடலேறப்படுவார் உருவெழுதிக்கொண்டன்றே ஏறுவது, நமக்கு அக்கிளிமொழியினுரு எழுதலாமோவென, அதுகேட் டுத் தலைமகன் பெயர்த்தும் ஆற்றானுமாக, நமக்கு இக்குறை முடித்துத்தருவன், நும்மாற் கருதத்படுவாள் என்மாட்டுப் பெரிது அருளுடைய ளாயினாளென்று தோழி கூறத் தலைமகன் ஆற்றாமை நீங்கிப் பெயர்ந்தான்; அவளுந் தலைமகண்மாட்டுச் சென்று அக்குறை முடிக்கும் உபாயம் ஆராய்வாள்.

தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி, தலைமகள்மாட்டுக் குறைநயப்புக் கூறுமிடத்து, இவள் கூட்டமுண்மை உணர்ந்து

உணராதாள்போன்று குறையுற்று நின்றாளென அவட்குப் புலனாகாமை நன்குமறைத்து, இங்கு வந்து ஒழுகாநின்றான் ஒரு தோன்றல் உளன், அவன் என்னினாற்பெறுவதொரு குறையுடையான்போலும், ஒருவரால் ஒரு குறையுறவுகொள்ளும் தகைமையானுமல்லன் ஒருவர்க்கு ஒரு குறை முடிக்கினல்லது, அதனால் அவன்குறை இன்றியமையாமைநோக்கி யான் குறைமுடிப்பார் தன்மையேன் ஆயினேனாய்வைத்து ஒரு பொய் பொய்த்தேன், அவன் அதனை மெய்யென்று கருதிக்கொண்டு சென்றான், தான் பொய்யறியாமையின், அன்னான் இன்றுவருவன், வந்தால் இக்குறை முடியாமையிற் பொய்யென உணர்வாகாதோவென மெலிதாகச்சொல்லியும், அங்ஙனம் ஆற்றாைப் நெருநற் போயினான் எத்தன்மையினன்கொல்லோ இன்று வந்திலனென வலிதாகச் சொல்லியும் குறைநயப்புக்கூறும். குறைநயப்புக் கூறப்பட்ட தலைமகள், மெலிதாகச் சொல்லிக் கூறினவழி, எம்பெருமான் தனக்குத் தகாத இளிவுபட ஒழுகாநின்றானெனக் கவற்சி உண்டன்றே அது புலப்படாமைநிற்கும்; வலிதாகச்சொல்லிக் கூறினவழி, வந்திலனென்றமையின் இறந்துபட்டானென ஆற்றாமை பெரிதாம், அங்குப் புலப்பட நிற்குமென்பது இவ்வகை குறைநயப்புக் கூறப்பட்டாள் தலைமகள் தலைமகனைக் காண உறவினளாம். அக்குறிப்பு உணர்ந்த தோழி தலைமகள் நேர்ந்தாள் என்பது அறியநிற்கும்.

தலைமகள் தோழிக் கறத்தொடுநிற்றலு முரித்து. பாங்கற் கூட்டங் கூடிய தலைமகன் தெருண்டு வரைந்தெய்துதலுற் றுத் தமரை விடும். விட்டவிடத்து அவர் மறுப்ப, அஃது இலக்கணமாகலான். அங்ஙனம் மறுத்தவிடத்துத் தலைமகள் வேறுபடும். வேறுபாடு எய்தினபொழுதே தோழிக்குப் புலனாம். புலனாயினவிடத்து, எம்பெருமாட்டி, நினக்கு இவ்வேறுபாடு எற்றினாயிற் றென்னும். என்றவிடத்து, இஃதெனக்குப் பட்டது இன்னவிடத்து ஒருஞான்று நீயும் ஆயமும் தழையுங் கண்ணியுங் கோடற்கு என்னிற் சிறிது நீங்கினையாக, ஈங்கு நின்றேன், ஒரு மணிச்சுனை கண்டேன், கண்ட அச்சுனைதான் ஆம்பலே குவளையே நெய்தலே தாமரையேயென் றிப்பூக்களால்

மயங்கிடும் மேதக்கது, கண்டு வேட்கையான் ஆடுவான் இழிந்தேன், இழுக்கிக் குட்டம் புக்கேன், புக்குத் தோழியோவென, நீ அங்ஙனங் கேளாயாயினுயாக, ஒருதோன்றல் தோன்றி என துயர் நீக்குதற்காகத் தன்கை நீட்டினன்; நீட்டயாம் மலக்கத்தான் நின்கைபெனப் பற்றினேன்; பற்ற வாங்கிக் கரைமேல் நிறீஇ நீங்கினன்; நீ அன்று கவலுதியெனச் சொல்லுயினேன், நீ எவ்வெல்லைக்கண்ணுங் கைவிடாதாய்க்கு அந்நாள் கைவிடலாயாயிற்று; விதியாகாதே? இனிப் பிறிதொன்றாவது கொல்லோவெனக் கலங்கி வேறுபட்டேனென்று தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநிற்கு மென்பது. அறத்தொடு நிற்றலென்பது கற்பின்றலைநிற்றலென்பது.

தலைமகளைக் குறைநயப்பித்து அவளது கருத்துணர்ந்து தன்னினுங்கூட்டங் கூட்டலுறுந் தோழி, தலைமகன் தெருண்டு வரைந்தெய்தல்வேண்டி, இவ்விடம் மிக்க காவலுடைத்து நீயிர் வரற்பாலீரல்லீரெனவும், இஃது உலகத்து நிகழ்வதொன் றன்றாலோவென்று அவனோடு நகாநின்றே யாங்குற்றேவன் மகளிராகலாற் றுணிந்து சொல்கில்லேம் அவளது குறிப்பறியாது, நீயேசென்று நின்குறை சொல்லெனவும், நும்மாற் சொல்லப்படுவாளை அறியேனெனவும், கையுறையேற்றுக்கொள்ளாது மற்றொன்று சொல்லி நீங்கியும், இவ்விடம் என்னை யாரானுந் தனனை யாரானும் பலகாலும் புகுதீரபபடுவதோ ரிடம், நும்மைக்கண்டால் ஏதஞ்செய்வர், கூற்றினுங் கடுஞ்சினத்த ராகலான், நீர் உடையதோர் குறை உண்டேயெனின் அகன்றுநின்று முடித்துக்கொள்ளற்பாலீரெனவும், நீயிர் விருந்தின ராகலான் இவளது அருமையும பெருமையும் அறியீரன்றே அவள் தாமரைக்கொட்டையின் அல்லியேபோலக் கிளைபுங் காப்பச் செல்வாள் இந்நிலத்துக்கு மிக்காள் ஒருதலைமகள் எமக்குக் கண்கூடாகச் செல்வதோர் தெய்வமல்லளோ? அவளைக் கண்ணிற்கண்டு கையிற்கூப்பித் தலையிற்பணிந்து வழிபட்டுச் செல்வதல்லது எம போல்வார்களால் ஒருகுறையுணர்த்துந் தன்மையளோவெனவும், நீயிர் பெரியீர் யாஞ் சிறியேம் நும்மோடு எம்மிடைக் கட்டுரை பொருந்தாதெனவும் இங்

னமே காப்புமிகுதி முதலாயினசொல்லிச் சேட்படுத்தகற்றித் தழீஇக்கொள்ளும். இப்படி அருமையுடைத் தாகலான் இவளின் ஆகாதென்று தலைமகன் உணர்வானாயின் வரைந்தெய்துவானும்; அல்லது தோழி தனது ஆற்றாமையான் முடிக்கின்றதனைத் தலைமகன் எளிதென உணராது அரிதென உணர்தற்குமாம்.

குறைநயப்பித்துச் சேட்படுத்திய தோழியைப் பின்னுந் தலைமகன் எதிர்ப்படும்; எதிர்ப்பட்டானை இன்ன இடத்து வா என்று அவள் குறிப்பினாற் கூறியுணர்த்தும்; அது கேட்டு அவன் அவ்விடத்துச் செல்லும்; செல்ல, அவன் வரவுணர்ந்து, தோழி தலைமகளைக் குறியிடத்துக் கொண்டுசென்று, யான் செங்காந்தட்பூக் கொண்டுவருவேன், அவ்விடத்துத் தெய்வமுடைத்து, நின்னால் வரப்படாது, நீ அவ்வளவும் இப்பொழிலகத்தே நில்லென்று நிறீஇ நீங்கும்; நீங்கத், தலைமகள் அப்பொழிலகத்து நிற்கும். நின்றாளைத் தலைமகன் எதிர்ப்படும். பின்னர்த் தோழி வந்து, நின் கைபோலக் காந்தண்மலர் கொண்டுவந்தேன், எம்பெருமாட்டி, நீட்டித்தாளென்று சீறியருளாது போந்தருளென்று அவளைக் கொண்டுபோய் ஆயவெள்ளத்தோடுங் கூட்டும். இது பகற்குறியாமாறு.

இவ்வகைப் பகற்குறிவந்து ஒழுகாநின்ற தலைமகனைத் தலைமகள் காணும்பொழுதிற் காணப்பொழுது பெரிதாகலான் ஆற்றாளாய், நெஞ்சுமிக்கது வாய்சோர்ந்து கடலிற் காணும், கானலிற் காணும், புள்ளிற் காணும், நெஞ்சிற்காணும், வறிதே குழலி அழுதாற்போலும் ஒருசொற் சொல்லும். தலைமகள் அவ்வாறுசொல்லின அவ்விடத்துத் தலைமகன் கேட்பின் வரைந்து புகுவானும், தோழி கேட்பிற் றலைமகனைவரைவுகடாவுவாளாம், யாருங்கேட்பார் இல்லையாயிற் றலைமகள் சொல்லி ஆற்றுவாளாம். மூடியிருந்து வேவதோர் கொள்கலம் மூடிதிறந்தவிட்டது ஆவி எழுந்து முன் நின்றவெப்பம் நீங்கினாற்போல அச்சொற்சொல்ல ஆற்றாமை பண்டையிற் சிறிதளவுபடுதலாம்.

இனிப் பகற்குறிவந்து ஒழுகாநின்ற தலைமகனைக் காணும் பொழுதிற் காணப்பொழுது பெரிதாகலாற் றலைமகள் ஆற்றா

ளாயினவிடத்துத் தோழி அவள் ஆற்றுமைக்குப் பரிந்து உடனுயிருந்த புள்ளுநோக்கி இவைகண்டு ஆற்றிச்செல்வாட்கு இவையும் நீங்கின, இனி எங்ஙனம் ஆற்றுங்கொல்லோ வென்னும். இவ்வகை சொல்லக்கேட்ட தலைமகன், யான்வந் தொழுகாநின்ற இவ்வொழுகலாறுதான் அவட்கு ஆற்றுமைக்குக் காரணமாயிற்றுப்போலுமென அவ்வாறுவந் தொழுகாது வரைந்து புகுவானும்.

பகற்குறிவந்து ஒழுகாநின்ற தலைமகன் இன்று தெருளும் நாளைத்தெருளுமெனத் தெருளானுய் நெடுங்காலமும் வந்தொழுக, இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனுயினவிடத்து இவள் இறந்துபடும், இறந்துபட இவனும் இறந்துபடுவனெனத் தோழி ஆற்றுளாய் வரைவுகடாவுதற்கு, யாய் எம்மை உறுப்பிற் குறிக்கொண்டு நோக்கினு ளென்னும். எனவே தலைமகன், இவர் இற்புறத்துப்போய்விளையாடும் பதத்தாலர், இவரை இற்செறிக்கவேண்டுமென்றுபோலும் அவ்வாறு நோக்கியதெனத் தெருண்டு வரைந்தெய்துவானும். இவ்வாறு பற்பலவாற்றானுந் தோழி இற்செறிப் பறிவுறுத்தும். செறிப்பறிவுறுக்கப்பட்ட தலைமகன் தெருள்வானாயினன் இன்னநாள் வரைவல் அத்துணையும் இவளை ஆற்றிக்கொண்டிரு நினக்கு அடைக்கலமெனக் கைப்பற்றும்; கைப்பற்ற, அதனைத் தோழி சூளுறவாகக் கருதினுள். உலகத்துச் சூளுறுவார் பார்ப்பாரையும் பசுவையும் பெண்டிரையுந் தொட்டுச் சூளுறுப. ஆகலாற் சூளுற்றுரென்பதனை நினைந்து, நீ வரைவலென்றதால் அமையாதோ? சூளுறவேண்டுமோ? பொய்த்தும் வாய்த்தும் உடையாரன்றே சூளுறுவார்? மெய்யல்லதுசொல்லாதாற்குச் சூளுறவேண்டுமோ? நின்கண்ணும் பொய்யுண்டாகின், மெய்யென்பது இவ்வுலகத்து நிலைபெற்றவழி இல்லையாகாதே யென்னும். எனத்தலைமகன் யான் தனக்கு அவளை அடைக்கலமென்று கைப்பற்ற அதனைச் சூளுறவாகக் கருதித் திரியவுணர்ந்தா ளாகலான் நீட்டிக்கல் ஆகாதெனப் பிற்றைஞான்று வரைவொடு புகுவானும்.

இனித் தெருளானுயின் இரவுக்குறிவாரா வரைவலென்னும். அதுகேட்ட தோழி இரவுக்குறியது ஏதங்காட்டி மறுக்

கும். யாங்ஙனம் மறுக்குமோவெனின், அரவும் உருமும் புலி
யும் எண்கும் வெண்கோட்டியானையுமென்று இவற்றது ஏதம்
உடைத்து, ஏற்றிழிவுடைத்தாய அருவரையிடத்து ஒரு வேல்
துணையாக நீர் ஆரிருள் நடுநாள் வரவு ஆற்றுநீர்மையரோ வென்
னும். என்பது கேட்ட தலைமகன் ஆற்றுவானாயின், வரைந்
தெய்துவானும். ஆற்றானாயின் இறந்துபடுமெனக் கருதி,
இறந்துபாட்டு அச்சத்தினான் இரவுக்குறி நேரும். நேர்ந்தாள்
தலைமகற்கு நின்னாட்டார் என்னபூவினர் என்னசாந்தினர்
என்னமரத்தின்கீழ் விளையாடுப என்னும். அதுகேட்டுத்
தலைமகன் முன்னெல்லாம் எனக்கு மறுத்தாளன்றே, மறுத்
தாள் இது சொல்லிற்று ஒருகாரணம் நோக்கியென உணர்ந்து,
தானும் நின்னாட்டார் என்னபூவினர் என்னசாந்தினர் என்ன
மரத்தின்கீழ் விளையாடுப என்னும். என்றக்காற் றோழியுங்
காந்தளும் வேங்கையுஞ் சூடுதும், சந்தனச்சாந்து பூசுதும்,
வேங்கைமரத்தின்கீழ் விளையாடுதுமென்னும். அதனையுணர்ந்து
பிற்றைஞான்று தலைமகன் அவ்வண்ணஞ்செய்து அம்மரத்தின்
கீழ் வந்துநின்றவிடத்து, அவனது வரவு உணர்ந்து தோழி,
குவளை மலர்ந்தனவேற் காண்பாம் பரந்தமுல்லை அரும்பின
வேற் காண்பாமெனச் சொல்லித் தலைமகளைக் கொண்டுபோந்து
குறியிடம் புகுந்து பகற்குறியின்கண் நீங்கினவாறே நீங்கத்
தனியளாய்நின்ற தலைமகளைத் தலைமகனெதிர்ப்படும். பின்னர்த்
தோழி வந்து தலைமகளைக் கொண்டுபோகும். இஃதிரவுக்
குறியாமாறு.

இரவுக்குறிவந்து ஒழுகாநின்ற தலைமகன் இன்றுதெருளும்
நாளைத்தெருளுமெனத் தெருளானாய் நெடுங்காலமும் வந்தொ
ழுக, இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாயினவிடத்து இவள்
இறந்துபடும், இறந்துபட இவனும் இறந்துபடுவனெனத் தோழி
ஆற்றாளாய் வரைதல்வேட்டு வருத்தமிகுதி கூறி வரைவுகடா
வும். அல்லகுறிப்பாட்டானும் பல இடையீடுகளானும் சேட்
படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன், அறிவு நிறை யோர்ப்புக்
கடைப்பிடிமுதலிய முன்னைநீங்கவும் நாணீங்காது நின்றது,
அதுவு மிதுபொழுது நீங்கிற்றென்பான்.

இவ்வொழுக்கின் நெடுங்காலச்செலவின்கண் இஃது தம்ப னும் அலருமாயிற்றென்று தலைமகட்குந் தோழிக்கும் உள்ளத்து நிகழ, வரைவாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய அவ்விரு வரும் யாமே உணர்ந்தேமெனக் கருதுதலாற் கதுமென இந்நிலை மைக்கண்வரினும் வாராமை கொள்வேமென்னுங் கருத்தினாற் பண்டு தலைமகன் வந்து பயின்றவிடத்தே தோழி செல்லும். செல்லத், தோழியை எதிர்ப்பட்ட தலைமகனை அவள் வலங் கொண்டுசார்ந்து முன்புநின்று நின்னாற் றலையளிக்கப்பட்ட தலையளி அம்பலாய்ப் பின் அலராயிற்றுப், பலரானு மறியப் பட்டதென்னும். நீ இது புகுதருந்துணையும் இவ்வாறு ஒழுகுவா யாயினுய் அறனறியாமையான், அறிதியென்னின் இதுபுகு தாமை வரைந்தெய்துவாய்மன்னோ, அல்லதூஉம் பிறரும் வரைந்தெய்துதற்கு முலைவிலையோடு புகுந்து பொன்னணிவான் நின்றாரும் உளரெனப் படைத்துமொழிந்து சொல்லும். இன் னனஞ் சொல்லப்பட்ட தலைமகன் என்னாற் செய்யப்பட்டது என்னோவென்னும். எனத், தோழி என்னை வினவற்பாலையல்லை நீ இதற்குத் தக்கவா றறிந்து செயற்பாலை யென்னும். நீ ஒரு பொருளை விகற்பத்து அறியுந்துணை, யான் அறியுமாறில்லைபிற; அல்லதூஉம், யாங் குற்றேவன் மகளிர், இதுகொண்டு இது செய்ம்மி னென்றற்குத் தக்கேமல்லேமென்னும். இதுகேட்ட தலைமகன் உடனேபோவது துணிந்தேனெனினும், நிழலும் நீரும் இல்லாத அழல்வெங்கானம் ஆற்றகில்லாள்கொல்லோ வென்னும். என்ன, என்னவெங்கானமெனினும் எம்பெரு மாட்டி நும்மோடுவரப் பெரிது இனியவாமென்னும். அது கேட்டு, ஆயின் உடன்போக்கு வலித்தேன், நீ இதனை அவட்குச் சொல்லவேண்டுமென, நன்றென்று எம்பெருமான் அருளிச் செய்தது எம்பெருமாட்டிக்கு உணர்த்துவலென்று தலைமகனை வலங்கொண்டுபோந்து, தலைமகளுழைச்சென்று அவள்குறிப் பறிந்து, எம்பெருமாட்டி, நம்பெருமான் நம்மைத் தம்மோடு உடன்கொண்டு செல்லக் கருதுகின்றார், நின்குறிப் பென்னை யென்னும். என்றவிடத்து நாணிற் கற்பு வலியுடைத் தாகலாற் றலைமகள் கற்பு அழியாமை நினைக்கும் நினைந்து உடன்போக்கு நேர்ந்து தலைசாய்த்து நிலங்கிளையா நிற்கும். உடன்பட்டது

உணர்ந்துவைத்துத் தோழி தாயுழைச் சொல்லும். தாயும் மகளது வேறுபாடு கண்டு, படிமக்கலத்தோடும் புக்காள் அன்றாய் என்மகட்கு இவ்வேறுபாடு எற்றினானாயிற்று எனக்குச் சொல்லா யென்னும். எனத், தோழி என்னால் அறியப்பட்டதுஞ் சிறிது உண்டு, அது யாதெனின், எம்மைக் கூழைக் கற்றைக் குழலிப்பிராயத்து மாழைகலந்த வேழைநீர்மையாரோடு நாட்கோலஞ்செய்து விளையாடி வம்மினென்று போக்கினாய், போக்கின்வழி யாம் போய் ஒரு வெண்மணல் பரந்த தண் மலர்ப்பொழிலிடை விளையாடாநின்றேமாக ஒரு தோன்றல ஒரு சுனைக்குவளைப் பூக்கொண்டு அவ்வழியே போந்தான்; போதர, நின்மகள் அவனை நோக்கிப் பூவை என்பாவைக்கு அணியத் தம்மினென்றாள், அவனும் பிறிதொன்று சிந்தியாது கொடுத்துநீங்கினான்; இஃதறியாக்காலத்து நிகழ்ந்ததென அறத்தொடு நிற்கும். நிற்கச், செவிலித்தாய் இன்புற்றமனத்தளாய் என் மகள் பெரிது அறிவுடையளேகா ணென்னும். செவிலித்தாய் நற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்குந் தன்னையன்மார்க்கும் அறத்தொடுநின்று செலவழுங்குவித்தலுமாம். உடன்போக்கு அழுங்குவித்தவிடத்துத் தலைமகனும் அந்நாள் வரைவொடுவந்து புகுவானும். அங்ஙனம் அறத்தொடுநிலை மாட்சிமைப்பட்டதில்லையாயின், இரவுக்குறிக்கட்டலைப்பெய்விக்குமாறுபோலத் தோழி தலைமகளை முற்படுத்து உடன்போக்க மாட்சிப்படும். படுத்து ஓம்படைசொல்லித் தான் தவிரும்.

வரைவுமலிவும் அறத்தொடுநிலையுமென்கின்ற இரண்டும் வரைவிற்குரியவாம். களவுவெளிப்பாட்டிற் குரியன உடன்போக்கும் கற்பொடுபுணர்ந்தகவ்வையும் மீட்சியுமாம். அன்பமைந்த உடன்போக்குப், போக்கறிவுறுத்தன் முதலாகத் தேற்றலீறாகச் சொல்லப்படும் எட்டுவகையினை யுடைத்து. கற்பொடு புணர்ந்த கவ்வை, செவிலிபுலம்பல் முதலாகச் செவிலி பின்றேடிச்சேறலீறாக ஐந்துவகையினை யுடைத்து. மீட்சி, தெளிதல் முதலாகச் செப்பலீறாகச்சொல்லப்படும் நான்கு வகையினை யுடைத்து. தலைமகன் தலைமகளைத் தன்னூரின் கண்ணே வரைதலும், அல்லது மீண்டுவந்து அவள் மனையின்

கண்ணே வரைதலும், நிகழும். உடன்போக்கு நிகழாதாயின் பாங்கியால் வரைவுமுடுக்கப்பட்டும் வரைபொருட்பிரிந்து வந் தும் வரைந்துகோடல் நிகழும். இங்ஙனமே களவு வெளிப் படுவதன் முன்னுதல் வெளிப்பட்டபின்னுதல் தலைமகன் தலை மகளை வரைந்து, அவ்விருவருங் கற்புமேற்கொண்டு இல்லறஞ் செய்து இன்பந்துய்ப்பவராவர்.

---

## ச௨. அதி. கற்பு

வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்து தலைமகன் வந் துழி வரையுமன்றே. களவின்பின்னர் வரைவாவது தலைமகன் தலைமகளை, அரசன் உபாத்தியாயன் தாய் தந்தை தம்முன் என்னுங் குரவருந் தாயத்தாருந் தாயொடுபிறந்தாரும் அவரில் வழிச் சான்றோருந் தேவருமென்னுங் கொடைக்குரியமரபினர், இவளை நீ இன்னவாறு பாதுகாப்பாயெனவும இவற்கு நீ இன்ன வாறு குற்றேவல்செய் தொழுகெனவும் அங்கியங்கடவு ளறிகரி யாக மந்திரவகையாற்கறபித்துக் கொடுப்பவுங் கொடாதொழிய வும் வதுவைச்சடங்கொடு பொருந்த மணஞ்செய்துகோடலே யாம். வதுவைச்சடங்கு நிகழ்வுழி இவளை நீ இன்னவாறு பாதுகாக்குகவெனத் தலைமகற்கும் இவற்கு நீ இன்னவாறு குற்றேவல்செய் தொழுகுகவெனத் தலைமகட்கும் அங்கியங் கடவு ளறிகரியாக மந்திரவகையாற் கறபிக்கப்படுதலின் இது கற்பெனப்பட்டது.

அறம்பொருளின்பங்க ளெய்தத் தக்கானுகத் தன்னையும் அவ்வறம்பொருளின்பங்கட் குரியளாகத் தனதில்லாளையும் பாதுகாத்து இருமுது குரவர்முதலாயினேர் கற்பித்தவழி யொழுகலை தலைமகற்குக் கற்பாம். கொண்டானிற் சிறந்த தெய்வ மின்றெனவும் அவனை யின்னவாறே வழிபடுகவென வும் இருமுதுகுரவர்முதலாயினேரும், நீ இன்னின்னபெற்றியி னெழுகுகவெனப் பின்னர்த் தலைமகனுங் கற்பித்தவண்ண

மொழுகுதலே தலைமகட்குக் கற்பாம். பிரமம்முதலியனவுங் கற்பாதலொக்குமேனுங் கந்தருவம்போல ஒத்த அன்புடைய ராதல் ஒருதலையன்மையின் அவை கைக்கிளைபெருந்திணைப்பாற் படும். அவைபோலாது சிறந்த அளவிலின்பத்து ஐந்திணை மருங்கிற் கற்பு, உள்ளமகிழ்ச்சியும் ஊடலும் ஊடலுணர்த்தலும் பிரிவும் பிறவும் பொருந்தியதாம். அதுதான் இல்வாழ்க்கை முதலாகப் பொருள்வயிற்பிரிதலீறாகச் சொல்லப்படும் ஆறு வகையினை யுடைத்து. அவை தாம் பற்பல துறையவாக நூல்க ளிடத்துக் கூறப்பட்டுள்ளன.

தலைமகன் தலைமகளை வரைந்து இருவரும் இல்வாழ்க்கையை இனிதுநடாத்துங்காலத்து, அத்தலைமகன் அறம்பொருள்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் ஓதன்முதலாய காரணங்களான் அத்தலைமகளைப் பிரியும். அப்பிரிவு அவ்விரு வரும் இனிதி னின்பநுகர்தற்கேதுவாம். என்னை? வெப்ப முளதாயிருந்துழியன்றே அதன்பின்னர்த் தட்ப மினிதிற்றட்ப மாமாறுபோல ஒருவற்குத் துன்ப முளதாயினன்றே யின்ப மினிதினின்பமா மாகலானென்க. பண்டே குரவர்களாற் கற் பிக்கப்பட்டுக் கற்றன் அறம்பொருளின்பம் வீடுபேறுகளை நுதலிய நூல்களெல்லாம், பரதேசங்களினும் அவைவல்லார் உளரேற் காண்பலென ஓதற்குப் பிரியும். நாட்டகத்து நின் றும் நகரத்துவந்து தமக்குற்ற துயரைக்கல்லாத மூத்தாரகளும் பெண்டீர்களும் இருக்கைமுடவருங் கூனருங் குருடரும் பிணி யுடையாருமென் றித்தொடக்கத்தார்தம் முறைக்குறைகேட் டுத் திருத்துதற்பொருட்டாகவும், காட்டகத்து வாழும் உயிர்ச் சாதிகள் ஒன்றனையொன்று நலிவன உளவாயினவிடத்துத் தீதென்று அவற்றை முறைசெய்தற்கும்,, கொடிவலைப்பட்டுக் கிடந்தனவற்றைத் துறைநீக்குதற் பொருட்டாகவும், வளன் இல் வழி வளந்தோற்றுவித்தற்பொருட்டாகவும், தேவ குலமே சாலையே அம்பலமேயென் றித்தொடக்கத்தனவற்றை ஆராய்தற்கும், அழிகுடியோம்புதற்கும் காவற்பிரிவு நிகழும். இருவர் அரசர் நாளைப்பொருதும் இன்றுபொருதுமென்று இருந்த நிலைமைக்கண், இம்மக்களும் இவ்விலங்குகளுமெல்லாம் பட இவ்விரண்டுகுலத்திற்கும் ஏதம் நிகழும், அதின்றி இப்போ

ரழிப்பனென்று இருவரையும் இரந்துசந்துசெய்வித்தல் அல்லது இருவரின் மிக்குச்செய்தீரை ஒறுப்பலென்று சந்துசெய்வித்தற் பொருட்டும் பிரிவு நிகழும். அரசற்காபத்து நிகழ்ந்துழி அதனை நீக்குதற்குந் தலைமகன் தலைமகளைப் பிரியும். தன்முது குரவ ராற் படைக்கப்பட்ட பல்வேறுவகைப்பட்ட பொருள்களெல் லாங் கிடந்ததுமன், அதுகொடுதுய்ப்பது ஆண்மைத்தன்மை யன்று பயனும்படாதெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள்கொண்டு வழங்கி வாழ்தற்குத் தலைமகன் தலைமகளைப் பொருள்வயிற்பிரித னிகழும். பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவடனக்குத் தலைமகடானே அவன்குறிப்பா னுணர்ந்து கூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், பிரிந்த விடத்துத் தலைமகள் ஆற்றாளாகத் தோழி வற்புறுத்தனவும், பருவங்காட்டினவும், ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக்கூறலும், தலைமகன் வினைமுற்றுவித்து வந்தவாறும், அஃதுணர்ந்த தோழி சொல்லினவும், தலைமகன் வினைமுற்றி ஞன் தேர்ப்பாகற்குச் சொல்லினவும், முகிலுக்குச் சொல்லின வும், தலைமகன் தலைமகளுடனுயிருந்து தோழிகேட்பச் சொல் லினவும் மற்றும்பிறவுமெல்லாம் அவற்றின் பகுதிகளாம்.

இல்வாழ்வார் யாவரும் கடவுளு மான்மாவும் புண்ணிய பாவமும் மறுபிறப்பும் முத்தியும் உண்டென்னும் இவ்வுண் மையை ஒருபோதும் மறவாதவராய்க் கடவுட்பத்தியுஞ் சீவ கருணையு முடையாராய் அவ்வறத்தைச்செய்யின் அஃ தவர்க் கின்பம்பயப்பதாம். நாம் கடவுளை இவ்வூனக்கண்ணாற் காணும் பக்குவ முடையமல்லேமாயினும் அவரதுண்மையையும், நாம் வேண்டாத துன்பநுகர்வொழிதற்கும் வேண்டுமின்பந் துய்த் தற்கும் அவரின்றுணையின் றியமையாமையையும் கருத லானும் உரையானு முய்த்துணர்ந்து, அவர்மாட்டுப் பத்தி யுடையராய், அவரை இடையறவுபடாத் தியானஞ்செய்யும் நல்லொழுக்க நெறிக்கட் சேறற் கேதுவாகு மில்லறத்தைச் செவ்விதி னடாத்தினன்றே இம்மைமறுமை யின்பத்தையும் பின்னர் வீட்டின்பத்தையும் எய்துதற்குரியராவேம். நாம் உள ராய துண்டற்கு முடுத்தற்கு மிவைபோல்வனபிற செய்தற்குமே

யென நினையா தந்தமின்பத் தழிவில்வீ டெய்துதற்கேது வாகும் நல்லொழுக்க நெறிக்கட் சேறற்கேயென நினைந்து, நம்மை அந்நெறிக்கட் செலுத்திவிடற் கின்றியமையாத விறை முதற்கடவு டுணையைப்பெறச் செயற்பாலனவற்றையெல்லாம் செய்து, பிறந்ததனுனெய்தற்பாலதாய பெரும்பேற்றைப் பெறு தல்வேண்டும். இங்ஙனமே கடவுட்பத்தியுடையராயினோர்க்குச் சிவகருணையு முண்டாம். சீவபிராணிகளெல்லாம் கடவுளாற் படைக்கப்பட்டனவென்றும், நம்மைப்போலவே ஏனைமாந்தரும் விலங்குமுதலாயினவும் அவ்விறைமுதற்கடவுளின் திருவரு ளாற் காக்கப்படுகின்றனவென்றும், இவ்வுண்மையைக் கடைப் பிடித்துச் சீவான்மாவுக்கும் அப்பரமான்மாவுக்குமுள்ள இத் தொடர்பைநோக்கி அப்பிராணிகளிடத்துக் கருணைசெய்யாத வன் தன்னைக் கடவுட்பத்தி யுடையனென்று சொல்லுதல் சொல்லளவினதேயன்றி உள்ளபடியன்றாம். இறைவன் வியாபக வாதாரமெனவும் சேதனுசேதனப்பிரபஞ்சம் வியாப்பியவாதேய மெனவுங் கூறப்படும். இங்ஙனம் அத்துவிதமான சம்பந்த முள்ள தம்மையும் இறைமுதற்கடவுளையும் ஏனைச்சீவபிராணி களையும் வேறெனக் கருதி யொழுகுவார்க்குக் கடவுட்பத்தியுஞ் சிவகருணையு முளவாகா. அவ்விறைமுதற்கடவுள் அருளிய நூல்கள் கற்பித்தவண்ணம் இல்வாழ்வார்யாவரும் அழுக்காற் றைச் செய்தல் புறங்கூறல் களவுசெய்தல் பொய்சொல்லல் வெகுளுதல் பகைத்தல் கொல்லல் வியபிசாரஞ்செய்தல் கள் ளுண்ணல் சூதாடன்முதலாய பாவங்களைச்செய்யாராய், விருந் தோம்பல் ஈகைமுதலாய புண்ணியங்களையே செய்தல்வேண்டும். பாவங்களைச் செய்வாரோடு கூடாது புண்ணியங்களைச் செய்வா ரோடுங் கடவுட்பத்தி யுடையாரோடுமே கூடுதல்வேண்டும். நல்லாற்றுற் பொருளீட்டி அறஞ் செய்தல்வேண்டும். அத்தன்மை யினரே தாமும் பிறரும் இன்பநுகர்தற் குரியவ ராவர்.

பெண்கள் இளமைக்கட் டந்தை தாயராலும் யௌவனத் தின்க ணாயகனாலும் முதுமைக்கண் மைந்தனாலுங் காக்கப்படு வேண்டியவ ராகலின் அவர் ஒருபோதுஞ் சுவாதீனரல்லர். தந்தைமுதலாயினோர் தாமும் நல்லொழுக்க நெறிக்கட் செல்லா

·ராய்த், தாங்காக்கவேண்டிய மக்களேயும் நல்லொழுக்க நெறிக்கட் செலுத்திக் காவாரேயாயின், அவர்தாந் தம்மையேயன்றித் தங்கீழுள்ளாரையுங் கெடுத்தற்குக் காரணராய், அவரினும் மிகப்பெருங்குற்ற மெய்துதற் காளாகின்றனர்.

தந்தைதாயர் உபாத்தியாயர்முதலாயினோர் பெண்களுக்கு இளமைப்பருவத்திலேயே கடவுளினதுண்மையையும், அவர் துணை நமக்கின்றியமையாமையையும், உயிர்கண்மாட் டவர்க் குளதாய பெருங்கருணையையும், அவரை நாம் வழிபட் டுய்யும் முறைமையையும், நாம்செய்யவேண்டிய புண்ணியங்களேயும், செய்யவொண்ணுத பாவங்களேயும், அவைகாரணமாக இம்மை யினும் மறுமையினும் நாமடையும் இன்பதுன்பங்களேயும், இல்லறஞ்செய்யுங்காற் பெண்களொழுகவேண்டிய முறைகளே யும், இவைபோல்வன பிறவற்றையும் நன்குகற்பித்தறிவுறுத் தல்வேண்டும். அவர்களுக்கு அட்டிற்றொழின்முதலாய வீட்டு வேலைகளேயும் நன்குய்ப் பயிற்றிவிடல்வேண்டும். இக்காலத் தறியாதார் சிலர் பெண்களுக்குக் கல்விகற்பித்த லாகாதெனக் கூறுவர். முற்காலத்துப் பெண்களுட்பலர் கல்வியறிவின் மிக வல்லுநராய் விளங்குவாராயு மிருந்துளர். பெண்களுக் கைம் பாலழகும் ஆடையாபரணங்களினழகும் மஞ்சளழகும் இவை போல்வன பிறவழகு மழகல்ல, அப்பெண்கள் மனநலத்தான் மிகநல்லராய்க், கற்றற்குரிய நூல்களேக் கற்றுவல்லராய், அந் நூல்களுங் குரவர்முதலாயினோருங் கற்பித்தவண்ணம் ஒழுக வும் வல்லராயின், அவர்க்கு அக்கல்வியழகே யழகாவதெனை இங்ஙனமே நம்முன்னோர் பெண்கள் கல்வியை விதந்துகூறு வாருமாயினர். ஆடவர்களுக்கேயன்றிப் பெண்களுக்கும் அவர்க் கேற்ற கல்வியைக் கற்பித்தல் ஆவசியகமேயாம்.

இக்காலத்துப் பெரும்பான்மையும் பெண்களுக்குக் கற்பிக் கப்படுங் கல்வி அவரை நன்னெறிக்கட் செலுத்தற் கேதுவா காது தீநெறிக்கட் செலுத்திக் கெடுத்தற்கே யேதுவாகின்றது. அஃ தவரைச் சுவாதீன ராக்கிவிடுகின்றது. நாயகருக் கடுத்த படியினரா யிருத்தற்குரிய அவர்தாம் சமத்துவத்தையுமன்று

மேற்படியையே யெய்துவாராகின்றனர். அவர்தாம் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னுங் குணங்கள் எள்ளளவேனு மில்லாராய், மங்கைப்பருவத்தும் மடந்தைப்பருவத்துங் குமாரப் பருவத்தினரும் புருடப்பருவத்தினருமாகிய ஆடவர்பல்லோர் குழீஇய வவைக்கட்சென்றவரினும் முற்பட்டிருத்தலே தங் கல்விக் கழகெனக் கருதி அவ்வண்ணமேசெய் தொழுகுவாரா கின்றனர். அவ்வவைக்க ணிருந்துள்ள காமுகரேயன்றி நல்லொழுக்க முடையராயினுர்தாமும் அவ்வொழுக்கத்திற் றவறிச் சத்தமு முருவமுமென்னும் புலனுகர்ச்சியை மிகவெளிதி னெய்துவா ராகின்றனர். அவருட்சிலர் படிமுறையே பரிசம்முதலாய வேனைப் புலநுகர்ச்சியையு மெய்த முயல்பவராகின்றனர். அதுகண்டு தந்தையுங் கணவனும் முதலாயினுர் சகியாரேயாயிற், சகோதரவன்பே அதன்காரணமென மற்றொன்று சொல்லி மறைத்துவிடுபவ ராகின்றனர். அந்தப்புரம் அடுக்களைமுதலாய மறைவிடங்களிற் சஞ்சரித்தற்குரிய மகளிரை இங்ஙனமே வெளிப்பட்டுத் தெருவிற்றிரியவும் ஆடவர்குழாம் புரியவும் பெண்டன்மையொருவவும் செய்துவிட்ட தவர்தங் கல்வியே. அன்னியரைப் பார்த்துத், தக்க திது தகாத திதுவென வொன்றனையு முய்த்துணராது, அவர்தம் பாடை கல்வி ஊண் உடை நடைமுதலாய வனைத்தையுந் தமவாக்கிக்கோடலே சீர்த்திருத்தமாமென வுட்கொண்டு, அத்திரிபுணர்வின்வழியே யொழுகு மிவ்வூர்ப் பேதைமக்கள் அவ்வன்னியர்வாய்ப்பட்டாண்மையையேயன்றிப் பெண்மையையு மிழப்பாராயினர். அறத்தாற்றிற் செல்லு மறிவொழுக்கங்களைப் பயிலா தெவ்வாற்றானேனும் பொருளீட்டித் தாமே நுகர்தற்கேற்ற கல்வி யறிவொழுக்கங்களைப் பயின்று விலங்குமுதலாயினபோன்று வாழ்நாளைக் கழிக்கும் அவ்வாடவரும் மகளிரும் மெச்சுமின்பம் அறிவுடையார் இன்பமென்று சொல்லத்தக்கதன்று. அட்டிற்றொழின்முதலாய தொழில்செல்தல் மகளிர்க் கிழிவெனக் கருதிப் பயிலாதார் பொழுதுபோக்கத் தெருவிற் றிரியாது வேறென் செய்வர்? அப்பெற்றியினராய மகளிரையே மெச்சி மணம்புரிந்து, செய்யவறியாமையான் அறத்தையும், அம்மக

ளிரைத் திருத்திப்படுத்தற் கேற்றவள வீட்டற் கியலாமையாற் பொருளையும், கவர்மனப்பட்ட அம்மகளிரா னின்பத்தையும் ஒருங்கே இழந்துவிடும் அவ்வாடவர்தம் புல்லறிவாண்மை நல்லறிவாளர் எள்ளிநகையாடற் கிடனுயதே.

கற்பே பெண்களுக்குச் சிறந்த ஆபரணம். தண்ணீரின் நன்னீர்மை அதினுளதாதற் கிடனுய நில நலத்தானும், தக்கார் நற்குணநீர்மை அவர்மாட்டுளதாய வினையானும், கண்ணினன் னீர்மை அதன்மாட் டுளதாய கிருபாநோக்கானும் அறியப்படு மாறுபோலப், பெண்ணி னன்னீர்மை அவண்மாட் டுளதாய கற் புக்காவலா னறியப்படும். நிறைக்காவ லிவ்வழிச் சிறைக்காவலா னும் பயப்பா டிலதாம். கற்புடை மனைவியே ஒருவனில் வாழ்க்கை இனிதுகடைபோகத் துணையாவள். நன்மனைவி யானவள் சூரியோதயத்துக்குமுன் நித்திரைவிட்டெழுதல், கடவுளைத்தியானித்தல், அட்டிற்றெழின்முதலாய வீட்டுவேலை களை ஒழுங்காய் முயற்சியோடு செய்தல், நாயகன் பணித்த பணி களைச் செய்தல், வீட்டுக்குவரும்பெரியார் விருந்தினர் குருடர் முடவர் நோயாளர் விருத்தர்முதலாயினேர்க்கு அன்னம்முத லாயின கொடுத் துபசரித்தல், எல்லாரோடும் முகமலர்ச்சி யுடையளாய் இனியவை கூறன்முதலாயவற்றின் வழுவாதொ ழுகி எல்லாரானும் புகழப்படுதலையும் புண்ணியப்பேற்றையு மெய்துவள். அவள் நாடோறும் தன் நாயகன் உண்டபின் தான் உண்ணுதலும், அவன் சயனித்தபின் தான் சயனித்தலும், அவன் நித்திரைவிட் டெழுதற்குமுன் தான் நித்திரைவிட் டெழுதலும், அவனுடைய வரவுக்கேற்பச் செலவுசெய்தலும், அவனேடு ஒற்றுமை யுடையளாயிருத்தலும், அவனுணைப்படி நடத்தலும், கடுஞ்சொற் சொல்லாமையும், இன்சொற்சொல்லு தலும், அவன்பெயரைச் சொல்லாமையும், அவன் இருந்தா லன்றி அவனெதிரே தான் இராமையும், அவனுடைய உச்சிட் டத்தை அமிர்தம்போலப் புசித்தலும, அவன் ஏவுதற்குமுன் குறிப்பறிந்து செய்தலும், அவன் வீட்டுக்கு வரும்போது முகமலர்ச்சியோடு எதிர்கொள்ளுதலும், அவனுடைய குற்றங் களைப் பிறர்க்குச் சொல்லாமற் குணங்களைப்பாராட்டுதலும்,

அவனை மெய்யன்போடு உண்டி முதலாயின வுதவி யுபசரித்தலும் முதலாயினசெய் தில்வாழ்க்கையைச் செவ்விதி னடாத்தலான் இம்மை மறுமையின்ப நுகர்பவளாவள். பெண்களுடோறும் வீட்டுவேலைசெய் தெஞ்சிய காலத்தைத் தாம் பயின்றுள்ள கைத்தொழில்களு ளொன்றைச் செய்து பொருளீட்டுதல்வேண்டும்; வீண்பொழுதுபோக்குக் கேட்டிற்கே யேதுவாகும்.

தகாதவார்த்தை பேசல், தலைக்கடையிலேநிற்றல், பலகணிவழியாகப் பார்த்தல், சத்தமிட்டுச் சிரித்தல், பகனித்திரைசெய்தல், வீட்டுவேலை செய்யாமை, ஆஞ்ஞையில்லாமல் வெளியே போதல், அயலாரோடு அவசியமின்றிப் பொழுதுபோக்காகப் பேசுதல், பொதுப்பெண்கள்போலப் பார்த்தல், நாயகன் வீட்டில் இல்லாதகாலத்துந் தன்னை அழகுபெற அலங்கரித்தல், கூத்துமுதலியவற்றைப் பார்க்கவிரும்புதல், முதிர்ந்த வயசுடையவர் இல்லாத வீட்டுக்குப்போதல், கூட்டத்தினுள்ளே புன்னகைசெய்தல், வியபிசாரக்குற்றமுடையாரோடு சகவாசஞ் செய்தல், கணவனைவிட்டு அயலூருக்குப்போதல், தான் விரும்பியவிடத்தி னித்திரைசெய்தல், தந்தைதாய் முதலாயினோ ரில்லாத தனியிடத்திற் குடியிருக்கவிரும்புதல், தொடர்பில்லாத அயல்வீட்டிற் குடியிருத்தன்முதலாய இவைகளெல்லாம் பெண்களொழுக்கங்கெடுதற் கேதுக்களாம்.

மனைவியானவள் தனக்குத் தெய்வத்தினால் வாய்த்த நாயகன் அழகில்லாதவனாயினும், நற்குண மில்லாதவனாயினும், நேர்யாளியாயினும், பொருளில்லாதவனாயினும், கல்வியில்லாதவனாயினும், வயோதிகனாயினும் அவனைச் சிறிதும் அவமதியாது நன்குமதித்தலும், அவனுக்குக் கோபந் தோன்றாவண்ணம் நடத்தலும், ஒருபோது தோன்றினும் முகமலர்ச்சியானும் இன்சொற்களானும் அதனைத் தணித்தலும், அவன் அநீதியாகக் கோபித்துக் கண்டித்தாலும் எதிர்வார்த்தை பேசாதிருத்தலும், தன்னினும் மேற்பட்ட செல்வன்வீட்டுப் பெண்ணைப் பார்த்து அவள்போல ஆடையாபரணங்கள் முதலாயின பெற்றிருக்க விரும்பி எப்பொழுதுந் துக்கமுடைமைக் கேதுவா

யிராது தன்னினுங்கீழ்ப்பட்ட வறியவன்வீட்டுப் பெண்ணைப் பார்த்து உள்ளதமையுமென்ற மனத்துடன் இன்பமுடைமைக் கேதுவாயிருத்தலும், நாயகன் முயற்சியிற் குறைந்தவனாயிருந் தாலும் வீண்செலவு செய்பவனாயிருந்தாலும் பழிபாவங்களைச் செய்பவனாயிருந்தாலும் இன்சொற்கூறன் முதலியவற்றான் அவனைத் திருத்தி நல்வழிப்படுத்துதலும் இவைபோல்வன பிறசெய் தலும் வேண்டும். இங்ஙனமே இல்வாழ்வானும் அதற்குத் துணையாயுள்ள இல்லாளும் நற்குண நற்செய்கைகளுடையராய் இல்லறத்தைச்செய் தொழுகுவரேயாயின் அவர் இம்மை மறுமையின்ப மினிது நுகர்பவராவர். மக்களோடு மகிழ்ந்து இல்லறத்தைக் காத்துத் தமக்குப்பொருந்திய இன்பமெல்லாந் துய்த்துப் பின்னர் நன்னுகர்ச்சியான் அதனை வெறுத்துத் தம் மூரி னீங்கி வனத்தின்கட்சென்று தலைமகனுந் தலைமகளுந் துறவறங் காப்பர்; அஃது அவர்க்கு வீட்டின்பத்தை யெய்துவிக்கும்.

---

மூப்பானூற்சுருக்கம் முற்றுப்பெற்றது

# பிழை திருத்தம்

---:O:---

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| வேறேழுத்து | வேறெழுத்து | ௨ | ௧௪ |
| தொல்காபிய | தொல்காப்பிய | ௧௰ | ௩ |
| பிரததத்தனைக் | பிரகதத்தனைக் | ௧௨ | ௨௬ |
| இர்ரமனுய் | இராமனுய் | ௧௯ | ௨௪ |
| இதன்கணுள்ள | இதன்கணுள்ள | ௨௬ | ௧௧ |
| பூசைபும் | பூசையும் | ௩௧ | ௨௮ |
| போதகர்கனைக் | போதகர்களைக் | ௩௧ | ௩௨ |
| பெருமயைடை | பெருமையடை | ௯௭ | ௩ |
| யுடைதொய | யுடைத்தாய | ௭௩ | ௩௰ |
| தேவண்டும் | வேண்டும் | ௬௬ | ௧௰ |
| மெய்ஞ்ஞான்றும் | மெஞ்ஞான்றும் | ௱௩ | ௬ |
| விடுததன் | விடுதன் | ௱௭ | ௩௧ |

௧-ம் வரி "அவர்தம்மால்" என்பதுதொடக்கம் ௱௰௩ ௧

௫-ம் வரி "நிலைநிறுத்துவர்" என்பதுவரையும் மிகை.

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| எய்துின்றனவுவாகிய | எய்துகின்றனவுமாகிய | ௱௧௩ | ௧௧ |
| இருகாலத்தும் | இக்காலத்தும் | ௱௧௫ | ௨ |
| ஆவன | அவன் | ௱௪௨ | ௮ |
| விம்ருபுவர் | விரும்புவர் | ௱௫௪ | ௨௨ |
| இரக்கக்கவன் | இரக்கக்கடவன் | ௱௭௰ | ௩ |
| நீர்க்க | நீர்க்கக் | ,, | ௩௧ |
| பயப்பா டு | பயபபாடு | ௱௭ | ௧௬ |
| கமக்குரிய | தமக்குரிய | ௱௭௫ | ௧ |
| மூட்டு | முருட்டு | ,, | ௧௬ |
| னுர்ந்தோர் | னுயர்ந்தோர் | ௱௭௮ | ௨௧ |
| டவர்க்கப் | டவர்க்குப் | ௱௮௧ | ௫ |
| செய்லானு | செய்தானு | ௱௮ | ௨௨ |
| எய்தாக | எய்தாத | ௱௮ | ௧௪ |
| போலபலலறி | போலப்புல்லறி | ௱௮௮ | ௩௧ |
| ௩௫. அதி | ௩௮. அதி | ௱௬௮ | ௨௧ |
| கருததப்படுவாள் | கருதப்படுவாள் | ௨௨௬ | ௨௮ |
| கிடந்தனுமன், அது | கிடந்தனமன், அவை | ௨௩௯ | ௯ |

